FEAR

# பயம்

## எனப்படுவது யாதெனில்



# ஓஷோ

கண்ணதாசன் பதிப்பகம்



# பயம் எனப்படுவது யாதெனில்...

(FEAR)

ஓஷோ

தமிழில்

தியான் மைத்ரேயா

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600017.
தொலைபேசி: 24332682 / 24338712
மதுரை ❖ கோவை ❖ பாண்டி

**பயம் எனப்படுவது யாதெனில்...**

வாழ்வின் பாதுகாப்பற்றத்தன்மையை ஏற்றுக் கொள்ளுதலும், புரிந்து கொள்ளுதலும்.

# பொருளடக்கம்


## 1. பயத்தைப் புரிந்துகொள்ளுதல்

★ பயம் எதிலிருந்து வருகிறது? அது எங்கே போகிறது? 14

★ உயிருடன் புதைத்தல் 21

★ செய்யவேண்டியது ஏராளம்,நேரம் மிகக்குறைவு. 30

★ புரிந்துகொள்ளுதலே சாவி. 39

★ தெய்வீக பாதுகாப்பற்றத்தன்மை. 45

## 2. மரண பயம் - பயத்தின் வேர்களை ஆராய்தல்.

★ கிழக்கு மற்றும் மேற்கின் உண்மைகள். 70

★ மனரீதியானது மற்றும் உடல் ரீதியானது. 87

★ தெரிந்ததும் தெரியாததும். 100

★ வாழ்வைக் குறித்த பயம். 111

## 3. நிச்சயமற்றது மற்றும் அறியாதது - நம்பகத்தன்மையின் மர்மம்.

★ அறிவிலிருந்து அப்பாவித்தனத்திற்கு 121

★ உள்ளார்ந்த குரலின் மீது நம்பகத்தன்மையோடு இருத்தல் 124

★ அன்பு உன்னை எவ்வழியில் நகரச்சொல்கிறதோ, அவ்வழியில் நகர் 131
★ சூன்யத்தன்மையில் மூழ்குதல் 141
★ நான் எனும் சிறைச்சாலை. 148

## 4. அன்பு செய், பயப்படாதே ; நம்மையும் மற்றவர்களையும் நம்புதல்.

★ அந்நியோனியத்தின் பயம் 163
★ உன்னைக்கண்டு பயப்படுதல். 170
★ அன்பின் மறுபக்கம். 176

## 5. பயமற்றத்தன்மையை அடைவதற்கு ஒரு வழி - தியானங்களும் ஆழமான பார்வைகளும்.

★ தப்பிச் செல்ல இயலாது. 190
★ சுய உணர்வா அல்லது சுய விழிப்புணர்வா? 192
★ மௌனமாக இருக்க பயப்படுதல் 194
★ எது உன்னை மிரளச் செய்கிறதோ அதனுள் செல். 196
★ இரு முனைகளைப் பற்றி விழிப்புணர்வோடிரு. 198
★ அவசரப்படாதே 200
★ பயமற்ற தன்மையை ஒரு இலக்காகக் கொள்ளாதே. 201
★ வெளியே விட பயப்படுதல் 205
★ அங்கு பயம் இருந்தால் அதை ஏற்றுக்கொள் 209
★ இழப்பதற்கு ஏதுமில்லை 213
★ ஆனந்தமே மாற்று மருந்து. 217

# ஒரு ஜென் கதை

உன் பயத்திற்குள் செல். மௌனமாக அதனுள் நுழை. அப்போது அதன் ஆழத்தை உன்னால் பார்க்க முடியும். சில நேரங்களில் அது நினைத்த அளவு ஆழமில்லாமலும் கூட போகலாம்.

ஒரு மனிதன் இரவில் நடந்து செல்லும்போது, கற்களினாலான பாதையிலிருந்து தவறி விழுந்துவிட்டான். அவன் ஆயிரக் கணக்கான அடிகள் கீழே விழுந்துவிடுவோமென்ற பயத்தினால் - ஏனெனில், அந்தப் பாதையின் ஒரத்தில் மிகவும் ஆழமான பள்ளத்தாக்கு இருப்பதை அவன் அறிவான் - அவன் ஓரத்திலிருந்து நீட்டிக்கொண்டிருந்த ஒரு கிளையைப் பிடித்துக்கொண்டான். இரவின் இருளில் அவனால் பார்க்க முடிந்ததெல்லாம் தரையில்லாத பள்ளத்தாக்கு மட்டுமே. அவன் கத்தினான். அவனுடைய கத்தல் திரும்பவும் எதிரொலித்தது. அவன் கதறலைக் கேட்க அங்கு யாருமில்லை.

நீ அந்த மனிதனையும் அவனுடைய முழு சித்ரவதையான இரவையும் கற்பனை செய்ய முடியும். ஒவ்வொரு நொடியும் கீழே இறப்புள்ளது. அவனுடைய கைகள் உறைந்துகொண்டிருக்கின்றன. அவனுடைய பிடியை அவன் இழந்துகொண்டிருக்கிறான்...

ஆனால் அவன் எப்படியோ பிடித்துக்கொண்டான், சூரியன் வெளியே வரும்போது அவன் கீழே பார்த்தான்... பிறகு அவன் சிரித்தான். அங்கு எந்த பள்ளத்தாக்குமில்லை. அவனுடைய காலிலிருந்து அரை அடியில் ஒரு பாறைத்திட்டு இருந்தது. அவன் முழு இரவும் ஓய்வெடுத்திருக்கவும், நன்றாக உறங்கியிருக்கவும் முடியும். அந்தப் பாறைத்திட்டு போதுமான அளவு பெரிதாக இருந்தது. ஆனால் அதற்கு பதிலாக, முழு இரவும் ஒரு திகில் கனவு. என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து நான் உனக்கு சொல்லிவிட முடியும். பயம் அரை அடிக்குமேல் ஆழமானதல்ல. இப்பொழுது நீ கிளையைப் பிடித்து தொங்கி உனது வாழ்வை ஒரு திகில் கனவாக மாற்றிக்கொள்கிறாயா, அல்லது நீ கிளையை விட்டுவிட்டு உனது காலில் நிற்க பிரியப்படுகிறாயா என்பது இப்போது உன்னைப்பொருத்தது. அங்கு பயப்பட ஏதுமில்லை.

ஓஷோ

# 1
# பயத்தைப் புரிந்து கொள்ளுதல்

பயம் உனது நிழலைப் போன்றே சாரமற்றது, ஆனால் அது இருக்கிறது. நிழலு ம் இருக்கிறது. சாரமற்றது, எதிர்மறையானது, ஆனால் இல்லாததல்ல. மற்றும் சிலசமயங்களில் நிழல் உன்மீது ஒரு பெரிய பாதிப்பை உண்டாக்கக்கூடும். ஒரு காட்டில் இரவு வரும் பொழுது உனது சொந்த நிழலைப் பார்த்தே நீ திகிலடையலாம். ஒரு தனிமையான இடத்தில், தனிமையான பாதையில் உனது சொந்த நிழலின் காரணமாக நீ ஓடக்கூடும். உனது ஓடுதல் உண்மையாக இருக்கும், உனது தப்பித்தல் உண்மையாக இருக்கும், ஆனால் அதன் காரணம் சாரமற்றது.

நீ ஒரு கயிறை, ஒரு பாம்பாக நினைத்துக்கொண்டு கயிற்றிலிருந்து விலகி ஓடுவாய், நீ திரும்பிவந்து அருகில் நோக்கி கவனித்தால், அதன் முழு முட்டாள்தனத்தையும் எண்ணி நீ சிரிப்பாய். ஆனால் பயமிருக்கும் இடங்களுக்கு மக்கள் வர அஞ்சுகிறார்கள். மக்கள் மற்ற எல்லாவற்றையும் விடவும் அதிகமாக பயத்தைக் கண்டு அஞ்சுகிறார்கள், ஏனெனில் பயமிருப்பதே உனது அடித்தளத்தை ஆட்டுகிறது.

நினைவில் கொள், நடுக்கம் மிகவும் உண்மையானது, பயம் ஒரு கனவைப் போன்றது. ஒரு திகில் கனவு, ஆனால் ஒரு திகில் கனவிற்கு பிறகு நீ எழுந்தால் அதன் பாதிப்புகள் இன்னமும் இருக்கின்றன. விளைவு தங்கியிருக்கிறது. உன்னுடைய மூச்சு மாறிவிட்டது. நீ

வியர்க்கிறாய், உனது உடல் இன்னமும் நடுங்கிக்கொண்ருக்கிறது, நீ சூடாக இருக்கிறாய். இப்பொழுது அது ஒரு வெறும் திகில் கனவு, ஒரு கனவு, சாரமற்றது என்பதை நீ அறிவாய். ஆனால் இந்த அறிதல் கூட உனது இருப்பின் அடிஆழத்திற்கு ஊடுருவிச்செல்வதற்கு நேரமெடுத்துக்கொள்கிறது. அது வரையில் சாரமற்ற கனவின் பாதிப்பு தொடரும். பயம் ஒரு திகில் கனவு.

பயம் எதனால் ஆனது? தன்னை அறியாத தன்மையினாலேயே பயம் உருவாகியிருக்கிறது. அங்கு ஒரேயொரு பயம் மட்டுமே இருக்கிறது. அது பல வழிகளில் வெளிப்படுகிறது, அது ஆயிரத்தொரு வழிகளில் வெளிப்படலாம். ஆனால் பயம் அடிப்படையில் ஒன்றுதான். அது என்னவென்றால் "அடி ஆழத்தில் நான் இல்லாமல் இருக்கக்கூடும்". ஒரு விதத்தில் அது உண்மைதான். தெய்வீகத்தன்மை இருக்கிறது, நீ இல்லை. விருந்தளிப்பவர் இல்லை, விருந்தாளி இருக்கிறார். மற்றும் நீ சந்தேகப்படுவதால் உன்னுடைய சந்தேகம் உண்மையாக இருப்பதால், நீ உனக்குள் பார்ப்பதில்லை. நீ இருப்பதாக நீ பாசாங்கு செய்து கொண்டிருக்கிறாய். நீ உனக்குள் பார்த்தால், நீ இல்லை என்பதை அறிவாய்! இது மிக ஆழமான, மறைமுகமான புரிதல். இது அறிவுப்பூர்வமானதல்ல, இது பிரபஞ்சப்பூர்வமானது, நான் இல்லாமலிருக்கக்கூடும் என்ற உணர்வு உனது அடிஆழத்தில் உள்ளது. உள்ளே பார்க்காமல் இருப்பதே நல்லது. வெளியே பார்த்துக்கொணடேயிரு. அது குறைந்தபட்சம் நான் என்ற பொய்யை பத்திரமாக காப்பாற்றுகிறது. அது உன்னை முட்டாளாகவே வைத்திருக்கிறது. ஆனால் நான் என்னும் இந்த உணர்வு பொய்யானதாக இருப்பதால் அது பயத்தை உருவாக்குகிறது. இந்த உணர்வை எது வேண்டுமானாலும் அழித்து விடக்கூடும் என்பதை நீ அறிவாய். எந்த ஆழமான சந்திப்பும் அதை நொறுக்கிவிடக்கூடும். அது அன்பினால் நொறுக்கப்படலாம், அது ஒரு பயங்கர வியாதியினால் நொறுக்கப்படலாம். அது யாராவது இறப்பதை பார்த்து நொறுக்கப்படலாம். அது பல வழிகளில் நொறுக்கப்படலாம். அது மிகவும் மென்மையானது. நீ உள்ளே

பார்க்காமல் இருப்பதன் மூலம் எப்படியோ அதைச் சமாளித்துக் கொண்டிருக்கிறாய்.

முல்லா நஸ்ருதீன் புகைவண்டியில் பயணம் செய்து கொண்டிருந்தார். அப்போது பயணச்சீட்டு பரிசோதகர் வந்து பயணச்சீட்டைக் கேட்டார். நஸ்ருதீன் அவருடைய எல்லா பாக்கெட்டுகளிலும் தேடினார், அவருடைய எல்லா பெட்டிகளிலும் தேடினார். பயணச்சீட்டு கிடைக்கவில்லை. அவருக்கு வியர்த்தது. அவர் மேலும் மேலும் திகிலடைந்தார். பிறகு பயணச்சீட்டு பரிசோதகர், 'அய்யா! நீங்கள் உங்களுடைய ஒரு பாக்கெட்டில் மட்டும் பார்க்கவில்லை. அதற்குள் ஏன் பார்க்கக் கூடாது?' என்று கேட்டார். முல்லா நஸ்ருதீன், 'தயவுசெய்து அந்த பாக்கெட்டை பற்றி பேசாதீர்கள். நான் அதற்குள் பார்க்கப் போவதில்லை. அதுதான் எனது ஒரே நம்பிக்கை! ஒருவேளை நான் அந்த பாக்கெட்டில் பார்த்து அது கிடைக்காவிட்டால் பிறகு அது தொலைந்துவிட்டது, பிறகு அது கண்டிப்பாக எங்கும் கிடைக்காது, நான் அந்த பாக்கெட்டில் பார்க்கமுடியாது. நான் வேறு எல்லா இடங்களிலும் பார்ப்பேன். அந்த பாக்கெட்தான் எனது பாதுகாப்பு. அது அந்த பாக்கெட்டில் இருக்கக்கூடுமென்று, என்னால் இன்னமும் நம்பி கொண்டிருக்கமுடியும். நான் அதை வேண்டுமென்றேதான் விட்டு வைத்திருக்கிறேன். மற்றும் நான் அதைத் தொடப்போவதில்லை. நான் அந்தப் பயணச்சீட்டை கண்டுபிடிக்கிறேனோ இல்லையோ, நான் அந்தக் குறிப்பிட்ட பாக்கெட்டை தேடப்போவதில்லை; என்றார்.

ஆணவத்தின் சூழ்நிலையும் இதேதான். நீ உள்ளே பார்ப்பதில்லை. அதுதான் உனது ஒரே நம்பிக்கை. யாருக்கு தெரியும்? ஒருவேளை அது அங்கே இருக்கலாம். ஆனால் நீ பார்த்தால் உன்னுடைய உள்ளுணர்வு, அது அங்கே இல்லை யென்று சொல்கிறது. நீ உள்ளே பார்க்காமல், தொடர்ந்து வெளியே பார்த்து நீ உருவாக்கிய இந்த போலி ஆணவம்தான் பயத்தின் ஆணிவேர். நீ பார்க்கவேண்டிய வெளிகள் எல்லாவற்றிலும் நீ பயப்படுவாய். நீ அழகைக் கண்டு பயப்படுவாய். ஏனெனில் அழகு

வெறுமனே உன்னை உள்ளே எறிந்துவிடுகிறது. ஒரு அழகான சூரிய உதயம், மேகங்களிலுள்ள அந்த பிரகாசமான வண்ணங்கள், மற்றும் நீ அதனைப் பார்க்க பயப்படுவாய். ஏனெனில், அப்படிப்பட்ட சிறந்த அழகு கண்டிப்பாக உன்னை உனக்குள் தூக்கி எறிந்துவிடும். அப்படிப்பட்ட சிறந்த அழகு உன்னுடைய எண்ண ஓட்டத்தை நிறுத்திவிடும். அந்த நொடியில் மனம் திகைப்பில் மூழ்கிவிடுகிறது. அது எப்படி சிந்திப்பது என்பதை மறந்துவிடுகிறது. எப்படி ஓடிக்கொண்டிருப்பது, எப்படி பின்னிக்கொண்டிருப்பது என்பதை மறந்துவிடுகிறது. உள் அரட்டை ஒரு நிறுத்தத்திற்கு வந்துவிடுகிறது, நின்றுவிடுகிறது, மற்றும் திடீரென உள்ளே இருக்கிறாய்.

மக்கள் சிறந்த இசையைக்கண்டு பயப்படுகிறார்கள், மக்கள் சிறந்த கவிதையைக் கண்டு பயப்படுகிறார்கள், மக்கள் ஆழமான அந்நியோனியத்தைக் கண்டு பயப்படுகிறார்கள். மக்களுடைய காதல் விவகாரங்கள் அனைத்துமே, தொட்டுவிட்டு ஓடும் விவகாரங்கள்தான். அவர்கள் மற்றவர்களின் இருப்பிற்குள் ஆழமாகச் செல்வதில்லை. ஏனெனில் மற்றவர்களின் இருப்பிற்குள் ஆழமாகச் சென்றால், பயம் அங்கே இருக்கிறது. மற்றவரின் இருப்பின் குளம் உன்னைப் பிரதிபலிக்கும். அந்த குளத்தில், மற்றவருடைய இருப்பு எனும் கண்ணாடியில் நீ இல்லாவிட்டால், கண்ணாடி காலியாக இருந்தால், அது ஒருவேளை எதையும் பிரதிபலிக்காவிட்டால் பிறகு என்ன செய்வது?

மக்கள் அன்பைக் கண்டு பயப்படுகிறார்கள், அவர்கள் பாசாங்கு மட்டுமே செய்கிறார்கள், அவர்களின் காதலின் பெயரால் விளையாட்டுகளை மட்டுமே விளையாடுகிறார்கள். அவர்கள் தியானத்தைக் கண்டு பயப்படுகிறார்கள், தியானம் என்ற பெயரிலும் கூட அதிகபட்சம் அவர்கள் புதியவிதமான சிந்தனைகளையே பயிற்சி செய்கிறார்கள். மகரிஷி மகேஷ்யோகியின் கடந்தநிலை தியானம் என்பது அதுதான். அது தியானமுமல்ல, கடந்ததுமல்ல. அது வெறுமனே ஒரு மந்திரத்தை ஜெபிப்பது, ஒரு எண்ண ஓட்டமே தவிர வேறல்ல, தீர்க்கமான

எண்ணம். அது திரும்பவும் ஒரு புதிய கருவி, தியானம் செய்யாமல் இருக்க ஒரு கருவி. மக்கள் கிறிஸ்துவ பிரார்த்தனைகளையும், முகமதிய பிரார்த்தனை களையும், இந்து பிரார்த்தனைகளையும் திரும்ப திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அவை அனைத்தும் தியானத்தை தவிர்ப்பதற்குரிய வழிகளே. நினைவில் கொள், இவை தியானங்கள் அல்ல. மனம், தியானம் என்ற பெயரால் பல போலியான விஷயங்களை உருவாக்கியுள்ளது, அது மிகவும் தந்திரமானது.

தியானம் என்பது நீ எப்போது எதையும் செய்யாமல் இருக்கிறாயோ அதுதான். மனம் எப்போது சுத்தமாக வேலை செய்யாமல் இருக்கிறதோ, அதுதான். அந்த வேலை செய்யாத மனமே தியானம். எந்த ஜெபமும் அல்ல, எந்த மந்திரமுமல்ல, எந்த உருவமுமல்ல, எந்த கவனக்குவிப்புமல்ல. ஒருவர் வெறுமனே இருக்கிறார், அந்த இருப்புத்தன்மையில் ஆணவம் மறைந்து விடுகிறது, மற்றும் ஆணவத்தோடு ஆணவத்தின் நிழலும் மறைந்து விடுகிறது. பயமே அந்த நிழல்.

பயம் மிக முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சனைகளில் ஒன்று. ஒவ்வொரு மனிதனும் அதைக் கடந்து செல்லவேண்டும், அது குறித்த ஒரு குறிப்பிட்ட புரிதலுக்கு வரவேண்டும். ஆணவம் உனக்கு, ஒரு நாள் நீ இறந்துவிடக் கூடும் என்ற பயத்தைத் தருகிறது. மற்றவர்களுக்கு மட்டுமே இறப்பு நடப்பதாக உன்னை நீயே ஏமாற்றிக்கொள்கிறாய். ஒருவிதத்தில் நீ நினைப்பது சரிதான். யாரோ பக்கத்து வீட்டுக்காரர் இறக்கிறார், பழக்கமானவர் இறக்கிறார், யாரோ நண்பர் இறக்கிறார், உன்னுடைய மனைவி இறக்கிறாள், உன்னுடைய அன்னை இறக்கிறாள், அது எப்போதும் யாரோ ஒருவருக்கு நிகழ்கிறது, ஒருபோதும் உனக்கல்ல. இந்த நிதர்சனத்தின் பின் நீ மறைந்து கொள்ளலாம். ஒருவேளை நீ விதிவிலக்காக இருக்கலாம், நீ இறக்கப்போவதில்லை. ஆணவம் உன்னைப் பாதுகாக்க முயற்சி செய்கிறது. ஆனால் ஒவ்வொரு முறையும் யாராவது இறக்கும்பொழுது உனக்குள் ஏதோ ஒன்று நடுங்குகிறது. ஒவ்வொரு இறப்பும், உனக்கொரு சிறிய இறப்பே.

யாருக்காக மணி ஒலிக்கிறது என்று கேட்க யாரையும் அனுப்பாதே, அது நமக்காகத்தான் ஒலிக்கிறது. ஒவ்வொரு இறப்பும் உன்னுடைய இறப்பே. மரத்திலிருந்து ஒரு காய்ந்த இலை உதிர்வதும்கூட உன்னுடைய இறப்பே. ஆகவேதான் நாம், நம்மை பாதுகாத்துக் கொண்டே இருக்கிறோம்.

யாரோ ஒருவர் இறக்கிறார், மற்றும் நாம் ஆத்மாவின் அழிவற்றத்தன்மையை பற்றி பேசுகிறோம். மரத்திலிருந்து ஒரு இலை உதிர்கிறது, கவலைப்பட ஏதுமில்லை, விரைவில் வசந்த காலம் வந்துவிடும், மற்றும் மரம் இலைகளோடு காட்சியளிக்கும். இது ஒரு மாற்றம் மட்டுமே, ஆடைகள் மட்டுமே மாற்றப்படுகின்றன என்று நாம் கூறுகிறோம். மக்கள் ஆத்மாவின் அழிவற்றத்தன்மையை நம்புகிறார்கள், ஆனால் அது அவர்கள் அறிந்ததால் அல்ல, அவர்கள் பயப்படுவதால். ஒரு மனிதன் எவ்வளவு கோழையாக இருக்கிறானோ, அவ்வளவு தூரம் அவன் ஆத்மாவின் அழிவற்றத்தன்மை நம்புவதற்கு வாய்ப்பிருக்கிறது. அவன் மதத்தன்மை வாய்ந்தவன் என்பதல்ல, அவன் வெறுமனே கோழை. ஆத்மாவின் அழிவற்றதன்மை குறித்த நம்பிக்கைக்கும், மதத்திற்கும் எந்த ஒரு சம்பந்தமும் இல்லை. மதத்தன்மை வாய்ந்த மனிதன், நான் இல்லை என்பதை அறிவான். பிறகு எது மிச்சமிருக்கிறதோ, அது அழிவற்றது. ஆனால் அது என்னுடன் எந்த சம்பந்தமுமற்றது. இந்த 'என்' அழிவற்றதல்ல, இந்த 'நான்' அழிவற்றதல்ல. இந்த 'நான்' வெறுமனே தற்காலிகமானது. இது நம்மால் உருவாக்கப்பட்டது.

நான் என்பதின் நிழலே பயம், மற்றும் இந்த 'நான்' எங்கோ அடி ஆழத்தில் இறப்பில் மறைந்தாக வேண்டும் என்று எப்போதும் விழிப்போடிருப்பதால், அடிப்படை பயம் மரணத்தைப் பற்றியதே. மற்ற எல்லா பயங்களும் அடிப்படை பயத்தை பிரதிபலிப்பவை மட்டுமே. அதில் அழகு என்னவென்றால் ஆணவத்தை போலவே இறப்பும் இல்லாத ஒன்று. எனவே ஆணவம் மற்றும் இறப்பு, இந்த இரண்டு இல்லாதவைகளுக்கும் இடையே பயமே பாலம்.

பயம் தன்னளவில் சக்தியற்றது. அது எந்த சக்தியும் இல்லாதது. நீ அதனை நம்ப விரும்புகிறாய் என்பது மட்டும்தான், அது மட்டும்தான் அதனுடைய ஒரே சக்தி. நீ உனது அடி ஆழத்திற்கு குதித்து உன்னுடைய உள்ளார்ந்த வெறுமையை நேரடியாக எதிர் கொள்ள தயாராகவில்லை, அதுதான் அதன் சக்தி. இல்லாவிடில் அது சக்தியற்றது, முற்றிலும் சக்தியற்றது. பயத்திலிருந்து எப்போதும் எதுவும் பிறந்ததில்லை. அன்பு பிறப்பளிக்கிறது, அன்பு படைப்புத்தன்மை மிக்கது. பயம் சக்தியற்றது, அது ஒருபோதும் எதையும் உருவாக்கியதில்லை. அது எதையும் உருவாக்கமுடியாது. ஏனெனில் அதற்கு எந்த சாரமுமில்லை. ஆனால் அது உனது முழு வாழ்க்கையையும் அழித்துவிடமுடியும். அது உன்னைச்சுற்றி ஒரு கருமேகத்தைப் போல சூழ்ந்துகொள்ள முடியும். உன்னுடைய சக்திகள் அனைத்தையும் பயன்படுத்திக்கொள்ள முடியும். அது உன்னை அழகு, கவிதை அன்பு, மகிழ்ச்சி, கொண்டாட்டம், தியானம் ஆகியவற்றின் எந்த ஆழமான அனுபவத்திற்கும் அனுமதிக்காமல் தடுக்க முடியும். இல்லை, அது உன்னை வெறுமனே மேலோட்டத்தில் வைத்திருக்கும். ஏனெனில் அது மேலோட்டத்தில் மட்டுமே இருக்கமுடியும். அது ஒரு மேலோட்டத்திலுள்ள அலை.

உள்ளே செல், உள்ளே பார்... மற்றும் அது காலியாக இருந்தால் அதனாலென்ன? பிறகு அதுதான் நமது இயல்பு, பிறகு அதுதான் நாம். வெறுமை குறித்து ஏன் ஒருவர் கவலைப்பட வேண்டும்?. வெறுமை வானத்தைப்போல அழகானது. உனது உள்ளார்ந்த இருப்பு, உள்ளார்ந்த வானத்தை தவிர வேறில்லை. வானம் வெறுமை யானது, ஆனால் வெறுமையான வானம் எல்லாவற்றையும் பிடித்துள்ளது, முழு பிரபஞ்சம், சூரியன், சந்திரன், விண்மீன்கள், பூமி, கிரகங்கள். வெறுமையான வானம்தான் இருப்பவை அனைத்திற்கும் இடமளிக்கிறது. இருப்பவை அனைத்திற்கும் பின்புலமாக வெறுமையாக வானமே திகழ்கிறது. பொருட்கள் வந்து போகின்றன, வானம் அப்படியே இருக்கிறது.

கச்சிதமாக அதைப்போலவே, நீ உன் வானத்தைக் கொண்டிருக்கிறாய், அதுவும் வெறுமையானதுதான். மேகங்கள் வந்து போகின்றன, கிரகங்கள் பிறந்து மறைகின்றன, விண்மீன்கள் எழுந்து இறக்கின்றன, மற்றும் உள்ளார்ந்த வானம் அப்படியே தொடப்படாமல், மங்காமல், பழுதுபடாமல் இருக்கிறது. நாம் அந்த உள்ளார்ந்த வானத்தை சாட்சிபாவம், கவனிப்பவர் என்று அழைக்கிறோம், மற்றும் அதுதான் தியானத்தின் முழு நோக்கமும்.

உள்ளே செல், உள்ளார்ந்த வானத்தை அனுபவி. நினைவில் கொள், உன்னால் பார்க்க முடிந்ததெல்லாம் நீ அல்ல. நீ எண்ணங்களைப் பார்க்க முடியும், பிறகு நீ எண்ணங்களல்ல. நீ உனது உணர்ச்சிகளைப் பார்க்க முடியும், பிறகு நீ உனது உணர்ச்சிகளல்ல. நீ உனது கனவுகள், ஆசைகள், நினைவுகள், கற்பனைகள், பிரதிபலிப்புகளைப் பார்க்கமுடியும். பிறகு நீ அந்த விஷயங்கள் அல்ல. நீ பார்க்கக்கூடிய எல்லா விஷயங்களையும் விலக்கிக் கொண்டே வா, பிறகு ஒருநாள் அந்த பேரதிசய நொடி வரும். ஒருவரின் வாழ்க்கையின் மிகவும் முக்கியத்துவமான நொடி, விளக்க ஏதும் மிச்சமற்ற ஒரு கணம். பார்க்கப்பட்ட அனைத்தும் மறைந்துவிட்டது, பார்ப்பவர் மட்டுமே அங்கிருக்கிறார். அந்த பார்ப்பவர்தான் வெற்றுவானம்.

அதை அறிவதே பயமற்று இருப்பது, அதை அறிவதே அன்பால் நிறைந்திருப்பது, அதை

அறிவதே கடவுளாயிருப்பது, அழிவற்றிருப்பது.

## பயம் எதிலிருந்து வருகிறது? அது எங்கே போகிறது?

***கேள்வி: பயம் என்னைப் பல விதங்களில், ஒரு என்னவென்று தெரியாத தொந்தரவாக அல்லது வயிற்றில் முடிச்சாக, ஒரு தலைசுற்றும் திகிலாக, இந்த உலகமே முடியப்போவது போல் என்னை பாதிக்கிறது. பயம் எங்கிருந்து வருகிறது? அது எங்கே போகிறது?***

**ஓஷோ:** உன்னுடைய எல்லா பயங்களும் அடையாளப்படுத்திக் கொள்ளுதலின் விளைவுகளே. நீ ஒரு மனிதனைக் காதலித்தால் அந்த காதலோடு, அதே பெட்டியில் பயமும் வருகிறது. அந்த மனிதன் உன்னைவிட்டுச் சென்றுவிடக்கூடும். அவர்கள் ஏற்கனவே யாரோ ஒருவரை விட்டு உன்னுடன் வந்திருக்கிறார்கள். எனவே அங்கே ஒரு முன்மாதிரி இருக்கிறது. ஒருவேளை அவர்கள் அதையே உனக்கும் செய்யக்கூடும். அங்கே பயம் இருக்கிறது. நீ வயிற்றில் முடிச்சுகளை உணர்கிறாய். நீ மிகவும் பற்றுதலோடு இருக்கிறாய், உன்னால் ஒரு எளிய உண்மையை புரிந்துகொள்ள முடியவில்லை. நீ உலகினுள் தனியாக வருகிறாய், நீ நேற்றும் இந்த மனிதன் இல்லாமல் இங்கு இருந்தாய். மற்றும் நீ வயிற்றில் எந்த முடிச்சுகளுமில்லாமல் எல்லாவற்றையும் சரியாகச் செய்து கொண்டிருந்தாய். நாளை ஒருவேளை இந்த மனிதன் சென்றால் முடிச்சுகளுக்கு அவசியமென்ன? இந்த மனிதனில்லாமல் எப்படியிருப்பது என்பது, உனக்கு ஏற்கனவே தெரியும். உன்னால் திரும்பவும் தனியாக இருக்கமுடியும்.

நாளை விஷயங்கள் மாறிவிடக்கூடும் என்ற பயம், யாரோ ஒருவர் இறந்துவிடலாம், உன்னிடம் பணமில்லாமல் போய் விடலாம், உன்னுடைய வேலை பறிக்கப்படலாம், அங்கு ஆயிரத்தொரு விஷயங்கள் மாறக்கூடும். நீ பயத்தின் மீது பயமாக சுமையேற்றப்பட்டிருக்கிறாய் மற்றும் அவையெதுவும் மதிப்பானவையல்ல. ஏனெனில் நேற்றும் நீ இந்த பயங்களால் தேவையில்லாமல் நிறைந்திருந்தாய். விஷயங்கள் மாறியிருக்கலாம், ஆனால் நீ இன்னமும் உயிரோடிருக்கிறாய் மற்றும் மக்கள் எந்தச் சூழ்நிலையுடனும் தங்களைச் சீர்படுத்திக்கொள்ளும் மகத்தான வல்லமை கொண்டிருக்கிறார்கள்.

மனிதர்களும், கரப்பான்பூச்சிகளும் மட்டுமே இந்த சீர்படுத்திக் கொள்ளும் மகத்தான வல்லமை கொண்டிருப்பதாகக் கூறுகிறார்கள். அதனால்தான் நீ எங்கெல்லாம் மனிதர்களைப் பார்க்கிறாயோ, அங்கெல்லாம் கரப்பான்பூச்சிகளையும் கண்டுபிடிக்கலாம், மற்றும் எங்கெல்லாம் நீ கரப்பான்பூச்சிகளைக்

கண்டுபிடிக்கிறாயோ அங்கெல்லாம் மனிதர்களைக் கண்டறிவாய். அவர்கள் சேர்ந்தே செல்கிறார்கள், அவர்களுக்குள் ஒரு ஒத்ததன்மை உள்ளது. வடதுருவம், தென்துருவம் போன்ற தொலைவான இடங்களில் கூட, மக்கள் முதன்முதலில் அந்த இடங்களுக்கு பயணிக்கும்போது அவர்கள் தங்களோடு கரப்பான்பூச்சியையும் கொண்டு வந்திருப்பதை திடீரென கண்டறிந்தார்கள். மற்றும் அந்த கரப்பான்பூச்சிகள் ஆரோக்கியமாகவும், இனப்பெருக்கம் செய்தும் வாழ்ந்து கொண்டிருந்தன.

நீ பூமியைச் சுற்றிப்பார்த்தால், மனிதன் ஆயிரக்கணக்கான வித்தியாசமான காலநிலைகளில், நிலச்சூழ்நிலைகளில், அரசியல் சூழ்நிலைகளில், சமுதாயச் சூழ்நிலைகளில், மதச்சூழ்நிலைகளில் வாழ்வதைப் பார்க்கமுடியும். அவன் வாழ்வதை சமாளித்து விட்டான். மற்றும் அவன் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வாழ்கிறான். விஷயங்கள் மாறிக்கொண்டேயிருக்கின்றன. அவன் தன்னை அதற்கு தக்கபடி சீர்படுத்திக்கொண்டேயிருக்கிறான்.

இங்கு பயப்பட ஏதுமில்லை. இந்த உலகம் முடிந்துவிட்டாலும் கூட, அதனாலென்ன? நீயும் அதனோடு முடிந்துவிடுவாய்! நீ தனியாக தீவில் நின்றுகொண்டு, உன்னை தனியாக விட்டுவிட்டு முழு உலகமும் முடிந்துவிடும் என்று நீ நினைக்கிறாயா? கவலைப்படாதே, குறைந்தபட்சம் உன்னோடு ஒருசில கரப்பான் பூச்சிகளாவது இருக்கும்!

உலகம் முடிந்தால் என்ன பிரச்சனை? நான் அதைக் குறித்து பலமுறை கேட்கப்பட்டுள்ளேன், ஆனால் என்ன பிரச்சனை? அது முடிந்தால் அது முடிந்துவிட்டது, அது எந்த பிரச்சனையையும் உருவாக்காது. ஏனெனில் நாம் இங்கிருக்கமாட்டோம், நாம் அதனோடு சேர்ந்து முடிந்துவிடுவோம். கவலைப்பட யாரும் அங்கிருக்கமாட்டார்கள். அது உண்மையிலேயே பயத்திலிருந்து முடிவான விடுதலையாக இருக்கும். உலகம் முடிந்துவிடுகிறது என்பதின் பொருள், எல்லா பிரச்சனைகளும் முடிகிறது, எல்லா தொந்தரவுகளும் முடிகிறது, உன் வயிற்றிலுள்ள எல்லா

முடிச்சுகளும் முடிகிறது, நான் அங்கே எந்த பிரச்சனையும் பார்க்கவில்லை.

ஆனால் எல்லோரும் பயத்தால் நிறைந்திருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். எல்லோரிடமும் ஒரு விதமான கவசம் இருக்கிறது. மற்றும் அதற்கு காரணங்களும் இருக்கிறது. முதலில், குழந்தை முற்றிலும் உதவியற்ற நிலையில், அவன் சுத்தமாக ஏதும் அறியாத ஒரு உலகத்துள் பிறக்கிறது. இயல்பாகவே அவன், எதிர்கொள்ளும் அறியாததைக் கண்டு பயம் கொள்கிறான். அவன் முற்றிலும் பாதுகாப்பான, ஆபத்தற்ற அந்த ஒன்பது மாதங்களை இன்னமும் மறக்கவில்லை. அங்கு எந்தப் பிரச்சனையும் இல்லை, எந்த பொறுப்பும் இல்லை, நாளையைப் பற்றி எந்தக் கவலையும் இல்லை.

நமக்கு அவை ஒன்பது மாதங்கள், ஆனால் குழந்தையைப் பொறுத்தவரை அது நிரந்தரம். அவனுக்கு நாட்காட்டிகளைப் பற்றியோ, நிமிடங்களை, மணிநேரங்களை, நாட்களை, மாதங்கள் பற்றியோ ஒன்றும் தெரியாது. அவன் முற்றிலும் பாதுகாப்பான, ஆபத்தற்ற வகையில் எந்தப் பொறுப்புகளும் இல்லாமல் நிரந்தரமாக வாழ்ந்து வந்திருக்கிறான். பிறகு திடீரென அவன் அறியாத உலகத்துள் தூக்கியெறியப்படுகிறான். அங்கு அவன் எல்லாவற்றிற்கும் மற்றவர்களைச் சார்ந்து இருக்க வேண்டும். அவன் பயம் கொள்ளுதல் இயல்பானதே. எல்லோரும் பெரிதாகவும், மிகவும் சக்தியுடையவர்களாகவும் இருக்கிறார்கள். மற்றும் அவன் மற்றவர்களின் உதவியில்லாமல் வாழமுடியாது. அவன் சார்ந்திருப்பவன் என்று அவனுக்கு தெரியும். அவன் அவனுடைய சார்பற்ற தன்மையை, சுதந்திரத்தை இழந்துவிட்டான்.

ஒரு குழந்தை பலவீனமானது, தற்காப்பற்றது, பாதுகாப்பற்றது. தானாகவே அவன் ஒரு கவசத்தை உருவாக்கத் தொடங்குகிறான். பல விதங்களில் அவனுக்கொரு பாதுகாப்பு. எடுத்துக்காட்டாக அவன் தனியாக தூங்கவேண்டும், இருட்டாக உள்ளது. அவன் பயப்படுகிறான். ஆனால் அவன், அவனுடைய கரடிபொம்மையை வைத்துள்ளான். அவன், தான் தனியாக இல்லையென்று

சமாதானப்படுத்திக் கொள்கிறான். அவனுடைய நண்பன் அவனோடு இருக்கிறான். நீ குழந்தைகள் விமானநிலையங்களிலும், ரயில்நிலையங்களிலும், தங்களுடைய கரடிபொம்மைகளை எடுத்துச்செல்வதை பார்ப்பாய், நீ அதை வெறும் ஒரு பொம்மை என்று நினைக்கிறாயா? உனக்கு அது அப்படித்தான், ஆனால் குழந்தையைப் பொறுத்தவரை ஒரு நண்பன். வேறுயாரும் அவனுக்கு உதவிசெய்ய இல்லாதபோது ஒரு நண்பன் இரவின் இருளில், படுக்கையின் தனிமையில் இன்னமும் கரடிபொம்மை அவனோடிருக்கிறது.

அவன் மனரீதியான கரடிபொம்மைகளை உருவாக்கிக் கொள்வான். ஒரு வளர்ந்த மனிதன் அவனிடம் கரடிபொம்மைகள் இல்லையென்று நினைத்தாலும்கூட, அவன் நினைப்பது தவறுதான் என்பதை நினைவில்கொள். அவனுடைய கடவுளென்பது என்ன? வெறும் கரடிபொம்மைதான். அவனுடைய குழந்தைப் பருவ பயத்திலிருந்து மனிதன் ஒரு தந்தையின் தோற்றத்தை, - அவர் எல்லாம் அறிந்தவராகவும், எல்லா சக்திகளையும் உடைய வராகவும், எல்லா இடங்களிலும் இருப்பவராகவும் - உருவாக்கிக் கொண்டான். நீ அவரிடம் போதுமான நம்பிக்கை வைத்திருந்தால் அவர் உன்னைக் காப்பாற்றுவார். ஆனால் பாதுகாப்பு பற்றிய யோசனையே, ஒரு பாதுகாவலர் தேவையென்ற யோசனையே குழந்தைத்தனமானது. பிறகு நீ பிரார்த்தனையை கற்றுக் கொள்வாய். இவையனைத்தும் உனது மனரீதியான கவசத்தின் பகுதிகள் மட்டுமே. பிரார்த்தனை என்பது இரவில் தனியாக நீ இருக்கிறாய் என்று கடவுளுக்கு நினைவுபடுத்துவதே ஆகும்.

நமது பிரார்த்தனைகள், ஜபங்கள், மந்திரங்கள், நம்முடைய வேதங்கள், நமது கவிதைகள், நமது பூசாரிகள் அனைத்தும் நமது மனரீதியான கவசத்தின் பகுதிகளே. அது மிகவும் நுண்ணியது. ஒரு கிறிஸ்துவன் வேறு யாரும் காப்பாற்றப்பட மாட்டார்கள், அவன் மட்டுமே காப்பாற்றப்படுவான் என்று நம்புகிறான். இப்பொழுது அது அவனுடைய பாதுகாப்பு ஏற்பாடு. அவனைத்தவிர அனைவரும் நரகத்தில் விழப்போகிறார்கள். ஏனெனில் அவனொரு

கிறிஸ்தவன், ஆனால் எல்லா மதங்களும் அதே முறையில் அவர்கள் மட்டுமே காப்பாற்றப்படுவார்கள் என்று நம்புகிறது. அது ஒரு மதத்தைப் பற்றிய கேள்வியல்ல. அது பயத்தைப்பற்றியும், பயத்திலிருந்து காப்பாற்றப்படுவதையும் பற்றியது. எனவே ஒருவிதத்தில் அது இயல்பானது. ஆனால் உனது வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட புள்ளியில் புத்திசாலித்தனத்திற்கு இது கைவிடப்படவேண்டும் என்ற தேவை ஏற்படுகிறது. நீ ஒரு குழந்தையாக இருந்தபோது இது நல்லது. ஆனால் ஒருநாள், நீ உன்னுடைய கரடிபொம்மையை விட்டாகவேண்டும். முடிவில் உன்னுடைய கவசங்கள் அனைத்தையும் கைவிடும்நாளில், நீ பயத்திலிருந்து வாழ்வதைக் கைவிட்டுவிட்டாய் என்று பொருள். பயத்திலிருந்து என்னவிதமான வாழ்க்கை எழமுடியும்? ஒருமுறை கவசம் கைவிடப்பட்டுவிட்டால் நீ அன்பிலிருந்து வாழமுடியும். நீ ஒரு வளர்ச்சியடைந்த வழியில் வாழமுடியும். ஒரு முழுமையான வளர்ச்சியடைந்த மனிதனுக்கு எந்தப் பயமுமில்லை,

எந்தக் கவசமுமில்லை. அவன் மனரீதியாக தற்காப்பற்று திறந்தநிலையில் இருக்கிறான்.

ஒரு புள்ளியில் கவசம், தேவையான ஒன்றாக இருக்கலாம். அது அப்படித்தான். ஆனால் நீ வளரவளர - நீ வயதில் மட்டுமல்லாமல், ஆனால் பக்குவத்திலும் வளர்ந்தால், வளர்ச்சி பெற்றால் - பிறகு நீ, உன்னோடு எதைச் சுமந்துகொண்டு வருகிறாய் என்று பார்க்கத் தொடங்குவாய். உன்னிப்பாக பார், நீ பலவிஷயங்களுக்கு பின்புலத்தில் பயத்தைக் கண்டறிவாய்.

ஒரு வளர்ந்த மனிதன் பயத்தோடு தொடர்புடைய அனைத்திலிருந்தும் அவனைத் துண்டித்துக்கொள்ள வேண்டும். வளர்ச்சி அப்படித்தான் வருகிறது.

உன்னுடைய எல்லா நம்பிக்கைகளையும், உன்னுடைய எல்லா செயல்களையும் வெறுமனே கவனி. அவை உண்மையை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றனவா, அனுபவத்தைக் கொண்டிருக்கின்றனவா அல்லது பயத்தை அடிப்படையாகக்

கொண்டிருக்கின்றனவா என்று கண்டறி. பயத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பது எதுவாக இருந்தாலும், அது உடனடியாக எந்த ஒரு யோசனையுமில்லாமல் கைவிடப்படவேண்டும். அது உனது கவசம்.

நான் உனக்காக அதை உருக்கமுடியாது, நான் உனக்கு வெறுமனே நீ அதை எப்படி விடுவது என காட்டமுடியும். உனது மனரீதியான கவசத்தை உன்னிடமிருந்து பிடுங்கமுடியாது, நீ அதற்காகச் சண்டை போடுவாய். நீ அதை நீயாகவே கை விடுவதற்கு ஏதாவதொன்றை செய்யமட்டுமே முடியும். அது என்னவென்றால் அதன் ஒவ்வொரு பகுதியையும் பார்ப்பதேயாகும். அது பயத்தை அடிப்படையாக கொண்டிருந்தால் பிறகு அதை விட்டுவிடு. அது தர்க்கத்தை அடிப்படையாகக் கொண்டு, அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தால், புரிந்துகொள்ளுதலை அடிப்படையாகக் கொண்டிருந்தால் பிறகு அது கைவிடப்பட வேண்டிய ஒன்றல்ல. அது உனது இருப்பின் பகுதியாக ஆக்கிக்கொள்ளப்பட வேண்டிய ஒன்று. ஆனால் உன்னுடைய கவசத்தில் ஒரு விஷயம்கூட அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருக்காது. அது எல்லாம் பயம்தான், முதலில் இருந்து முடிவு வரை.

நாம் பயத்திலிருந்து வாழ்கிறோம், அதனால்தான் நாம் எல்லா அனுபவங்களையும் கெடுத்துக்கொண்டே இருக்கிறோம். நாம் யாரையாவது காதலிக்கிறோம். ஆனால் நம்முடைய காதல் பயத்திலிருந்து வரும்பொழுது அது கெட்டுவிடுகிறது, விஷமேறி விடுகிறது. நாம் உண்மையைத் தேடுகிறோம். ஆனால் அந்தத் தேடுதல் பயத்தின் காரணமானதாக இருந்தால் பிறகு நீ எதையும் கண்டறியப்போவதில்லை.

நீ என்ன செய்தாலும் ஒரு விஷயத்தை நினைவில்கொள், பயத்திலிருந்து நீ வளரப்போவதில்லை. நீ சுருங்கி இறந்து மட்டுமே போவாய். பயம் மரணத்தின் வேலைக்காரன்.

ஒரு பயமற்ற மனிதன், வாழ்க்கை உனக்கு ஒரு பரிசாகக் கொடுக்க நினைக்கும் அனைத்தையும் கொண்டிருக்கிறான்.

இப்போது அங்கு எந்தத் தடையுமில்லை. உன்மேல் பரிசுகள் பொழியும். மற்றும் நீ என்ன செய்தாலும், நீ ஒரு பலத்தை, ஒரு சக்தியை, ஒரு நிச்சயத்தன்மையை, ஒரு மகத்தான ஆளுமையை உணர்வாய்.

பயத்திலிருந்து வாழும் ஒரு மனிதன் உள்ளே எப்போதும் நடுங்கிக் கொண்டிருக்கிறான். அவன் தொடர்ந்து பைத்தியமாக மாறுகிற புள்ளியிலேயே இருக்கிறான். ஏனெனில் வாழ்க்கை பெரியது. மற்றும் நீ தொடர்ந்து பயத்திலேயே இருந்தால் எல்லாவிதமான பயங்களும் இருக்கின்றன. நீ ஒரு பெரிய பட்டியல் போடலாம். மற்றும் நீ எத்தனை பயங்கள் இருக்கிறது என்று ஆச்சரியம் கொள்வாய். இன்னமும் நீ உயிரோடு இருக்கிறாய்! சுற்றிலும் கிருமிகள் இருக்கின்றன, நோய்கள், அபாயங்கள், கடத்தல், தீவிரவாதிகள் மற்றும் மிகச்சிறிய வாழ்க்கை! முடிவில் உன் தவிர்க்க முடியாத மரணம் இருக்கிறது. உன்னுடைய முழுவாழ்க்கையும் இருள் அடைந்து விடும்.

பயத்தை விடு, உன்னுடைய குழந்தைப் பருவத்தில் உணர்வற்ற நிலையில் பயம் உன்னால் கைகொள்ளப்பட்டது. இப்பொழுது அதனை உணர்வோடு விட்டுவிடு மற்றும் பக்குவமடை. பிறகு வாழ்க்கை நீ பண்பட, பண்பட ஆழமாகும், ஒரு ஒளியாகும்.

## உயிருடன் புதைத்தல்

***கேள்வி: என்னுடைய பயத்திற்கு அடியில் உயிரோடு புதைக்கப் பட்டதைப்போல் உணர்கிறேன். இந்த பயத்தை மறைப்பதற்கு, நான் எப்பொழுதும் சிறந்த யாரோ ஒருவராக முயற்சி செய்து கொண்டே இருக்கிறேன் என்பதை இப்போது நான் பார்க்கிறேன். என்னிலிருந்து தொலைவில், வெகுதொலைவாக ஓடிக் கொண்டிருக்கிறேன். இன்னும் எனக்கு உண்மையாக இருப்ப தென்றால் என்னவென்று தெரியாது. முகமூடிகளுக்குப் பின்னால் ஒளிவதற்கு தேவை இருப்பதாக நான் ஏன் உணர்கிறேன்? நான் ஏன் இவ்வளவு பயப்படுகிறேன்?***

**ஓஷோ:** நீ அனுபவிக்கும் இந்த பயம் எல்லா உயிர்களிலும் வேர் கொண்டுள்ளது. இது இப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில் ஒவ்வொருநாளும் நாம் யாரோ ஒருவர் இறப்பதை அறிவோம். மற்றும் அதே வரிசையில் நிற்பதை அறிவோம். யாராவது ஒருவர் இறக்கும்பொழுது நாம் வரிசையில் இறப்பிற்கு பக்கத்தில் நகர்கிறோம். விரைவில் பிரபஞ்சத்திற்கு வெளியே செல்லும் பயணச்சீட்டு எடுக்கும் துவாரத்தில் நாம் இருப்போம். யாருக்கு மணி ஒலிக்கிறது என்று கேட்க யாரையும் அனுப்பாதீர்கள், அது நமக்காகவே ஒலிக்கிறது என்று சொல்லும் பொழுது அந்தக் கவிஞர் சரியாகவே சொல்கிறார். பழைய பாரம்பரியம் ஒன்றுள்ளது. யாரோ ஒருவர் இறக்கும்பொழுது, முழு கிராமத்திற்கும் செய்தி அறிவிக்க - ஒருவர் இறந்துவிட்டார், உங்கள் நிலங்களிலிருந்து, உங்கள் தோட்டங்களிலிருந்து, உங்கள் வயல்களிலிருந்து திரும்பி வாருங்கள் என்று அறிவிக்க -கிறிஸ்துவ தேவாலயங்களில் மணிகள் ஒலிக்கத்தொடங்கும். யாரோ ஒருவர் இறந்துவிட்டார், அவருக்கு கடைசியாக விடைகொடுக்க மக்களுக்கு இது ஒரு அழைப்பு. ஆனால் அந்தக் கவிஞர் சொல்வது மிகவும் சரி. யாருக்கு மணி ஒலிக்கிறது என்று கேட்க யாரையும் அனுப்பாதீர்கள், அது எப்போதும் நமக்காகவே ஒலிக்கிறது. எப்பொழுதெல்லாம் யாரோ ஒருவர் இறக்கிறாரோ, அப்பொழு தெல்லாம் நீ ஒரு அழியும் உயிரென்பது உனக்கு நினைவுக்கு வருகிறது. நீ எந்த நொடி வேண்டுமானாலும் இறப்பினால் ஆட்கொள்ளப்படலாம்.

இதுதான் பயங்களின் வேர், மற்ற எல்லா பயங்களும் இதன் பிரதிபலிப்புகளே. நீ எந்த பயத்தின் அடியில் ஆழமாகச்சென்றாலும் இறப்பின் பயம் இருப்பதைக் காண்பாய்.

என்னுடைய பயத்திற்கு அடியில் உயிரோடு புதைக்கப் பட்டதைப்போல நான் உணர்கிறேன் என்று நீ கேட்கிறாய். எல்லோரும் அதே நிலையில்தான் இருக்கிறார்கள். நீ அதிர்ஷ்டக் காரன், நீ அதைப்பற்றி உணர்ந்துவிட்டாய். ஏனெனில் நீ உணர்வடைந்து விட்டாய், நீ வெளியே வரமுடியும். மற்றும் நீ உணர்வடையவில்லையென்றால் வெளியே வர வாய்ப்பேயில்லை.

இந்த பயத்தை மறைப்பதற்கு நான் எப்போதும் சிறந்த யாரோ ஒருவராக முயற்சி செய்துகொண்டே இருக்கிறேன். என்னிலிருந்து தொலைவில், வெகுதொலைவாக ஓடிக்கொண்டிருக்கிறேன். இன்னும் எனக்கு உண்மையாக இருப்பதென்றால் என்னவென்று தெரியாது என்று நீ சொல்கிறாய்.

சிறந்ததாக இருக்கும் மக்கள் வேறு ஏதாவது செய்து கொண்டிருப்பதாக நீ நினைக்கிறாயா? ஜனாதிபதிகள், முதலமைச்சர்கள், அரசர்கள், ராணிகள் அவர்கள் வித்தியாசமான படகில் இருப்பதாக நீ நினைக்கிறாயா? சுற்றிப்பார், அவர்கள் அனைவரும் ஒரே படகில் இருப்பதை நீ காண்பாய். ஒருவேளை, அவர்கள் சிறந்தவர்களாக இருந்தால் வாழ்க்கை அவர்களைச் சாதாரண மனிதர்களை நடத்துவதைவிட மாறுபட்ட முறையில் நடத்தும் என்ற நம்பிக்கையில், அவர்கள் அனைவரும் சிறந்தவர்களாக இருக்க முயற்சி செய்கிறார்கள். ஒரு செருப்பு தைப்பவனை நடத்துவதைபோல ஒரு நாட்டின் பிரதமரை அது நடத்துவதற்கு வாய்ப்பேயில்லை என நினைக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் நினைப்பது முற்றிலும் தவறு. வாழ்க்கை எந்த பாகுபாட்டையும் பார்ப்பதில்லை. பிரதமர்களோ அல்லது செருப்பு தைப்பவர்களோ, கழிவறைச் சுத்தம் செய்பவர்களோ அல்லது முதலமைச்சர்களோ வாழ்க்கையை பொறுத்தவரை, அதற்கு அது ஒரு பொருட்டேயில்லை. மரணம் சமநிலையுடன் அவர்களைக் கீழே தள்ளுகிறது. உலகத்திலுள்ள ஒரே சமத்துவவாதி மரணம்தான். நீ பிச்சைக்காரனா, பணம் வைத்திருக்கிறாயா, நீ படித்திருக்கிறாயா அல்லது படிக்கவில்லையா என்பதைப் பற்றி அது கவலைப்படுவதில்லை. சிறிது பொறு, நான் மிகவும் தகுதிவாய்ந்தவன், நீ படிக்காத மக்களிடம் நடந்து கொள்வதைப்போல என்னிடம் நடந்து கொள்ள முடியாது, சிறிது காத்திரு. நானொரு சிறந்த மனிதன், நீ இந்த முறையில் நடந்து கொள்ள முடியாது. முதலில் எனக்கு முன்னமே அறிவிப்புக்கொடு, நான் அதைப்பற்றி யோசிப்பேன். என்னால் முடிவுசெய்யப்படும் ஒரு குறிப்பிட்ட வழியில்தான் நீ நடந்துகொள்ள வேண்டும் என்று இறப்பிடம் நீ சொல்லமுடியாது.

நீ சமுதாயத்தில் மதிப்புமிக்க ஒரு அங்கத்தினரா அல்லது வெறும் ஒரு தெருநாயா என்பது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்து வதில்லை. இறப்பு வந்து எல்லோரையும் சமமானவராக்கி விடுகிறது.

ஆனால் சிறந்தவனாக இருந்தால் அப்போது பிரபஞ்சம் உன்னைக் கருணையோடு, கனிவோடு நடத்தும், இருமுறை யோசிக்கும், இந்த மனிதன் ஒரு நோபல் பரிசு வெற்றியாளன், அவனுக்கு ஒரு சிறிது அதிக வாழ்க்கை கொடுக்கலாம், இந்த பாவப்பட்டமனிதன் ஒரு சிறந்த ஓவியன், மற்ற எல்லோருக்கும் செய்வதைப்போலவே வெறுமனே அவனுடைய மெழுகுவர்த்தியை ஊதி அணைத்துவிடக் கூடாது என்று சிந்திக்கும் என்ற நம்பிக்கையினால்தான் நீ சிறந்தவனாக இருக்கிறாய்.

இந்த மறைமுக விருப்பம்தான், உணர்வற்ற நம்பிக்கைதான், எல்லோரும் சிறப்பாக இருப்பதற்கு எப்போதும் முயற்சி செய்து கொண்டிருக்கக் காரணம். ஆனால் இது முற்றிலும் முட்டாள் தனமானது, அபத்தமானது. மிகவும் சக்தியோடிருந்த கோடிக் கணக்கான மன்னர்களுக்கும், கோடிக்கணக்கான ராணிகளுக்கும் என்னவாயிற்று என்று சற்றே திரும்பிப்பார்.

இறப்பிற்கு முன் அனைவரும் முற்றிலும் சக்தியற்றவர்களே.

ஜைன வேதங்களில் மிகவும் அழகான கதை ஒன்று உள்ளது. இந்தியாவில் ஒரு புராணக்கதை உள்ளது. அதாவது ஒரு மனிதன் உலகம் முழுவதும் வென்றுவிட்டால் அவனுக்கு ஒரு தனிப்பட்ட பெயர் உள்ளது. அவன் ஒரு சாதாரண அரசன் அல்ல, பேரரசர் கூட அல்ல. அவன் ஒரு சக்கரவர்த்தி என்று அழைக்கப்படுவான். அவனுடைய தேர்ச்சக்கரம் பூமியில் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம், யாரும் தடுக்கமுடியாது. அவன் முழு அதிகாரம் படைத்தவன். மேலும் சொர்க்கத்தில் சக்ரவர்த்திகள் தனிப்பட்ட முறையில் கவனிக்கப்படுவார்கள் என்றும் அந்த புராணம் கூறுகிறது.

சொர்க்கத்தில் ஒரு தங்கமலை உள்ளது. அந்த சுமுரு என்று அழைக்கப்படும் தங்க மலைக்கு முன் இமயமலை ஒரு சிறிய விளையாட்டு பொம்மை போன்றது. சக்ரவர்த்திகள் மட்டுமே

சுமிருவில் பெயர் கையெழுத்திடும் சிறப்பு அனுமதி பெறுவர். இந்த சக்ரவர்த்தி இறந்தபொழுது அவன் மிகவும் கிளர்ச்சி யோடிருந்தான்... சொர்க்கத்தில் இருக்கும் தங்க மலையில் கையெழுத்திடுவதே எந்த மனிதனும் அடையக்கூடிய அதிகபட்ச சிறப்பு.

ஆனால் அதைப் பார்க்க நீ மட்டும் தனியாக இருக்கிறாய் என்றால் அதில் பயன் என்ன இருக்கிறது? எனவே இந்த மனிதன் அவன் இறக்கும் தருணத்தில் முழு சபையையும், அவனது ராணி, அவனுடைய நண்பர்கள், அவனுடைய தளபதிகள் அனைவரும் உடனடியாக தற்கொலை செய்துகொள்ள வேண்டும் என்று ஆணையிட்டான். எனவே அவர்கள் அனைவரும் ஒன்றாக சொர்க்கத்தை அடையலாம். வேறு யாரும் செய்திராத வகையில் அவன் அந்த தங்கமலையில் கையெழுத்திட விரும்பினான். ஒரு சாட்சிகூட இல்லாமல் தனியாகக் கையெழுத்திடுவதில் என்ன சந்தோஷம் இருக்கமுடியும்? அவன் கண்டிப்பாக ஒரு பகட்டானவனாக இருக்கவேண்டும்.

அவனுடைய ஆணைகளின் காரணமாக அவனுடைய நண்பர்கள், அவனுடைய ராணிகள், அவனுடைய சபையின் சங்கத்தினர்கள், அவனுடைய தளபதிகள் அனைவரும் அவன் இறக்கும்பொழுது தற்கொலை செய்துகொண்டனர். மற்றும் அவர்கள் அனைவரும் சொர்க்கத்தின் கதவுகளில் ஒன்றாக நுழைந்தனர். வாயிற்காப்போன் அவர்களைத் தடுத்து நிறுத்தி 'மலையில் கையெழுத்திடுவதற்கு முதலில் தனியாகச் சக்ரவர்த்தி உள்ளே செல்லட்டும்' என்று கூறினான்.

ஆனால் அவர்கள் அனைவரும் 'நாங்கள் தற்கொலை செய்து கொண்டதற்கு ஒரே காரணம், எங்களுடைய சக்ரவர்த்தி எங்கள் அனைவரின் முன் கையெழுத்திட வேண்டும் என்பதுதான். அவருடைய ராணிகள் இங்கிருக்கிறார்கள், அவருடைய தளபதிகள் இங்கிருக்கிறார்கள், அவருடைய குருக்கள் இங்கிருக்கிறார்கள், அவருடைய மந்திரிகள் இங்கிருக்கிறார்கள், மற்றும் வெறுமனே அவர் கையெழுத்திடுவதை பார்ப்பதற்காக எங்கள் வாழ்க்கையை

கூட நாங்கள் தியாகம் செய்துள்ளோம், நீ எங்களைத் தடுக்க முடியாது; என்று கூறினார்கள்.

ஆனால் வாயிற்காப்போன் சக்ரவர்த்தியிடம், 'மன்னித்துக் கொள்ளுங்கள். பல நூற்றாண்டுகளாக நான் இந்தப் பணியில் இருக்கிறேன். அதற்கு முன் என் தந்தை, அதற்கு முன் என் பாட்டனார். இந்த பணி, காலத்தின் தொடக்கத்திலிருந்து என்னுடைய முன்னோர்களால் செய்யப்பட்டு வந்துள்ளது. என்னுடைய மூத்தோர்கள் என்னிடம் சொன்னது என்ன வென்றால், மற்றவர்களின் முன்னால் மலைக்குச்செல்ல எந்த சக்ரவர்த்தியையும் ஒருபோதும் அனுமதிக்காதே. ஏனெனில் அதை நினைத்து மிகவும் மோசமாக பின்னால் வருத்தப்படுவார்கள் என்று கூறியிருக்கிறார்கள். ஆனால் எல்லா சக்ரவர்த்திகளும் வற்புறுத்துவார்கள். தன்னுடன் முழுபடையும் கொண்டுவந்த முதல் ஆள் நீங்கள் மட்டுமல்ல, கிட்டத்தட்ட எல்லா சக்ரவர்த்திகளும் இதையேதான் செய்திருக்கிறார்கள்.

எனவே இந்த மக்களை உன்னுடன் நான் அனுப்பினால் பின்னால் நீங்கள் வருத்தப்படுவீர்கள் என்பதை நீங்கள் நினைவில் கொள்ளவேண்டும் என்று நான் விரும்புகிறேன். எனக்கு எந்த பிரச்சனையும் இல்லை, நீங்கள் அதைப்பற்றி சிந்திக்க சிறிது நேரம் எடுத்துக்கொள்ளலாம். நீங்கள் புதியவன், அந்த அனுபவம் எப்படி இருக்கப்போகிறது என்று உங்களக்குத் தெரியாது. நான் பல சக்ரவர்த்திகள் வருவதையும் போவதையும் பார்த்திருக்கிறேன். அவர்கள் அனைவரும் மிகவும் கனிவோடு மற்றவர்களைத் தடுத்து நிறுத்தி என்னைத் தனியாக அனுப்பினாய், அதற்கு நன்றி என்று கூறியிருக்கிறார்கள்; என்றான்.

சக்ரவர்த்தி யோசித்தார், என்ன செய்வது? ஏனெனில், உண்மையில் என்ன நடக்கப்போகிறது என்று எனக்குத்தெரியாது. இந்த மனிதன் உண்மையானவனாகத் தோன்றுகிறான், தேவை யில்லாமல் என்னைத் தடுக்கவேண்டிய அவசியம் அவனுக்கில்லை. அவனுடைய அறிவுரையைக் கேட்பதே ஒருவேளை சிறந்ததாக இருக்கக்கூடும். எனவே அவர் வாயிலேயே எல்லோரையும்

நிறுத்திவிட்டு கையெழுத்திடுவதற்குரிய கருவிகள் அனைத்தையும் வாயிற்காப்போனிடமிருந்து பெற்றுக்கொண்டு, அவர் அந்த மலைக்குச் செல்வதற்குரிய வாயிலினுள்ளே நுழைந்தார். அப்படியொரு அழகு, அவரால் நம்பமுடியவில்லை! அவர் பார்க்கும் இடமெல்லாம் தங்கமோ தங்கம். மலையின் சிகரங்கள் மிகவும் உயர்ந்திருக்கின்றன. அதற்குமுன் இமயமலை கண்டிப்பாக ஒரு பொம்மையைப் போல் காட்சியளிக்கும்.

கையெழுத்திட ஒரு இடம் தேடி அவன் பக்கத்தில் வந்தபோது, அவன் அதிர்ச்சியடைந்தான். ஏனெனில் அங்கு எந்த இடமும் பாக்கி இல்லை! முழு மலையும் கையெழுத்திடப் பட்டிருந்தது. ஏனெனில் நாம் இங்கு நித்தியமாக இருக்கிறோம். கோடிக்கணக்கான சக்கரவர்த்திகள் இறந்திருக்கிறார்கள், நான் மிகவும் தனிச்சிறப்பு வாய்ந்தவன் என்று இந்த மனிதன் இதுவரை எண்ணியுள்ளான். மற்றும் அவ்வளவு பெரியமலையில் ஒரு சிறிய இடம்கூட விடப்படவில்லை.

அவன் சுற்றிப்பார்த்தான், எங்கும் இடமில்லை. பிறகு அவன் மலையின் காப்பாளரைச் சந்தித்தான். அவர், 'உன்னுடைய நேரத்தை வீணடிக்காதே. நீ ஓராயிரம் வருடங்கள் தேடினாலும்கூட காலியான இடம் எதையும் கண்டுபிடிக்க முடியாது. எல்லா இடங்களும் நிரம்பியுள்ளன. பல நூற்றாண்டுகளாக நான் இந்த வேலையில் இருக்கிறேன். என்னுடைய தந்தை இந்த வேலையில் தான் இருந்தார். மிகவும் தொடக்கத்திலிருந்தே என்னுடைய குடும்பம்தான் இந்த வேலையில் இருந்து வந்துள்ளது. என்னுடைய முன்னோர்களிடமிருந்து ஒரே கதையைத்தான் நான் கேள்விப் பட்டுள்ளேன். எந்த ஒரு சக்ரவர்த்தி வந்தாலும் இடம் இருந்ததில்லை. எனவே ஒரே வழி என்னவென்றால் மற்ற பெயர்களிலிருந்து ஏதாவதொன்றை அழித்துவிட்டு, அதனிடத்தில் உன்னுடைய பெயரை எழுதுவது. மற்றும் தனிச்சிறப்பாக இருப்பதைப்பற்றி முற்றிலும் மறந்துவிடு, இது ஒரு பிரமாண்டமான பிரபஞ்சம். வாயிற்காப்போன், நீ கூட்டிக்கொண்டு வந்த மக்களை தடுத்ததற்குரிய காரணம் இதுதான். அவர்கள் அனைவர்

முன்னிலையிலும் உன்னுடைய பெருமைகள் அனைத்தையும் நீ இழந்திருப்பாய். நீ ஒரு பெயரை அழித்து அந்த இடத்தில் உன் பெயரை எழுதி விடு, நானிருக்கிறேன். நான் உனக்கு உதவுகிறேன்; என்று கூறினார்.

முழு ஆனந்தமும் வடிந்துவிட்டது, முழு ஆர்வமும் அழிந்து விட்டது. அந்த மனிதனிடம் சக்கரவர்த்தி, 'அப்படியென்றால் நாளை யாரோ ஒருவர் வந்து என்னுடைய பெயரை அழித்து விடுவார் அல்லவா?', என்று கேட்டார். மலையின் காப்பாளன், 'ஆமாம் அது அப்படித்தான். ஏனெனில், இல்லாவிடில் வேறு எந்த இடமுமில்லை. நாங்கள் இன்னும் அதிக மலைகளை உருவாக்க முடியாது. இதை உருவாக்குவதற்கு சொர்க்கத்திலுள்ள எல்லா தங்கமும் உபயோகப்படுத்தப்பட்டுவிட்டது. நீ வெறுமனே கையெழுத்திடு, வாயிலுக்கு தலைநிமிர்ந்து சென்று நீ அதைப்பற்றி பெருமைப்படலாம், யாருக்கும் இது தெரியாது. ஏனெனில், நான் எவரிடமும் சொல்லப்போவதில்லை. வெறுமனே சென்று முழு மலையையும் காலியாக இருந்ததென்று பெருமைப்படு' என்றார்.

ஆனால் சக்ரவர்த்தி நேர்மை கொண்டவனாகவும், உண்மையானவனாகவும் இருந்தான். அவன், 'அதை நான் செய்யமுடியாது. என்னுடைய பெயரை எழுதுவதற்காக வேறொரு பெயரை அழிக்கவும் என்னால் முடியாது. நான் கையெழுத்திட போவதில்லை. இது முற்றிலும் முட்டாள்தனமானது. நான் திரும்பிச்சென்று வாயிற்காப்போனிடம் நான் உனக்கு நன்றியுடையவனாக இருக்கிறேன் என்றும் மற்றும் நான் என்னுடைய மக்களிடம், நான் ஏன் நன்றியுடையவனாக இருக்கிறேன் என்றும் கூறப்போகிறேன். நான் இந்தச் செய்தியை உலகத்தில் பரப்பப்போகிறேன். ஏனெனில் இவர்களில் பலர் தற்கொலை செய்துகொண்டதால் அவர்கள் திரும்பவும் பிறந்தாக வேண்டும், அவர்கள் சொர்க்கத்திலேயே தங்க முடியாது. நான் உலகத்திற்கு செய்தி அனுப்ப என்னாலான முயற்சிகள் அனைத்தையும் செய்வேன். சொர்க்கத்திலிருக்கும் தங்கமலையில் கையெழுத்திடுவதற்காக உலகைக் கைப்பற்றி தேவையில்லாமல்

உங்கள் வாழ்க்கையை வீணடிக்காதீர்கள், அங்கு இடமில்லை. முதலில் நீ யாரோ ஒருவருடைய பெயரை அழித்தாக வேண்டும், அது அசிங்கமானது. பிறகு அந்த இடத்தில் நீ கையெழுத்திட வேண்டும். நாளை யாராவது ஒருவர் உன்னுடைய பெயரை அழிப்பார், இந்த முழுச்செயலும் முற்றிலும் முட்டாள்தனமானது. நான் அதிர்ச்சி அடைந்துள்ளேன், ஆனால் ஒரு சிறந்த புரிதல் என்னுள் எழுந்துள்ளது' என்று கூறினான். யாரும் தனிச்சிறப்பாக இருக்கவேண்டுமென்று கேட்கக்கூடாது, ஏனெனில் பிரபஞ்சம் யாரையும் தனிச்சிறப்பென்றோ, உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்றோ ஏற்றுக்கொள்வதில்லை.

உன்னுடைய பயம்தான் தனிச்சிறப்பாக இருக்க முயற்சி செய்யும்படி உன்னைத் தூண்டுகிறது, ஆனால் அது சூழ்நிலையை மாற்றாது. பயத்தை விடுவதற்கு ஒரே வழி சிறப்பாக இருப்பதற்கு உனது சக்தியை செலவிடுவதை விடுத்து, உன்னுடைய முழு சக்தியையும் நீ நீயாக இருக்க பயன்படுத்து. வெறுமனே உன்னைக் கண்டறி. ஏனெனில் நீ சிறப்பாக இருக்க முயற்சி செய்யும் பொழுது உன்னிடமிருந்து தொலைவாக, வெகுதொலைவாக ஓடிக் கொண்டிருக்கிறாய். நீ அதைப்பற்றி தெளிவாக உணர்வோடிருக் கிறாய், அது நல்லது. நீ உன்னிடமிருந்து தொலைவாக செல்லச் செல்ல நீ அழிவற்றவன், அங்கு மரணம் என்பதே இல்லை என்ற உண்மையை அறிவதிலிருந்து நீ தொலைவாகச் சென்று கொண்டிருக்கிறாய்.

ஒருமுறை உன்னுடைய அழிவற்றத்தன்மையை நீ கண்டறிந்து விட்டால் மரணம் மறைந்துவிடுகிறது. மற்றும் மரணத்துடன் எல்லா பயங்களும் காற்றோடு கலந்து விடுகின்றன. ஆனால் யாரோ ஒரு தனிச்சிறப்பு மிக்கவனாக ஆவதினால் அல்ல.

நீ உன்னுடைய பயத்தை, உன்னுடைய பீதியை, உன்னுடைய மரணத்தை வெல்லும் ஏதோவொன்றைத் தேடி நீ உன்னிடமிருந்து மேலும் மேலும் தொலைவாக ஓடிக்கொண்டேயிருக்கிறாய். ஆனால் நீ எவ்வளவு தொலைவாக இருக்கிறாயோ அவ்வளவு

பயமாகவும், அவ்வளவு பீதியாகவும், மரணம் அந்தளவு ஆட்கொள்ளக்கூடியதாகவும் இருக்கும். உள்ளே சென்று, உன்னுடைய உண்மையான இருப்பைக் கண்டறிவதே சிறந்தது.

இது ஒரு எளிய கணக்கு, ஒரு எளிய தர்க்கம். வேறெங்கும் தேடுவதற்கு முன், தயவுசெய்து உனக்குள் தேடு. உலகம் பரந்தது, நீ தேடுதலில் தொலைந்துவிடுவாய். எனவே முதலில் உனக்குள் பார், ஒருவேளை நீ தேடுவது அங்கே ஏற்கனவே இருக்கலாம். மற்றும் உலகின் எல்லா சிறந்த ஞானிகளும் விதிவிலக்கின்றி அது அங்கே இருக்கிறதென்று முற்றிலும் ஒப்புக்கொள்கிறார்கள்.

விதிவிலக்கற்ற ஒரே அறிவியல் உண்மை இதுதான். நீ எவ்வளவு தூரம் பின்நோக்கி சென்றாலும் மாறாமல் நிற்பது இதுதான். இது தன்னை அறிந்த அனைவராலும் எப்போதும் அறிவிக்கப்பட்ட தென்பதை நீ கண்டறிவாய். நாம் அழிவற்றவர்கள், நாம் மரணமற்றவர்கள், வாழ்வு முடிவறியாதது.

எனவே முதலில் உள்ளே செல், உன்னுடைய அழிவற்றத் தன்மையின் வெறும் ஒரு தரிசனம் பெற்றுவிடும் போது அது ஒரு திகில் கனவிலிருந்து ஒருவர் எழுந்துவிட்டதைப்போன்றது, எல்லா பயமும் மறைந்துவிடுகிறது, பயத்திற்கு பதிலாக அங்கு இருப்பது தூய்மையான பரவசம், தூய்மையான ஆனந்தம், நித்தியத்தின் மணத்துடன் கூடிய மலர்கள் பொழிதல்.

## செய்யவேண்டியது ஏராளம், நேரம் மிகக் குறைவு

***கேள்வி: நேரம் பற்றி நிறைய பதட்டம் எனக்குள்ளதாக நான் உணர்கிறேன். நேரத்தைப் பற்றிய உணர்வு விரக்தியை உருவாக்குவதாக நீங்கள் சொல்வதை நான் கேட்டிருக்கிறேன். ஆனால் நேரத்தைப் பற்றிய பயம் என்கின்ற ஏதாவது ஒன்று நமக்குள் உள்ளதா என்று நான் ஆச்சரியப்படுகிறேன்?***

**ஓஷோ:** அதுதான் ஒரே பயம், நேரத்தை குறித்த பயம். மரணத்தின் பயம் என்பது நேரத்தின் பயமும் கூட. ஏனெனில் மரணம் எல்லா நேரத்தையும் நிறுத்திவிடுகிறது. யாரும் மரணத்தைக் கண்டு பயப்படுவதில்லை, உனக்கு தெரியாத ஒன்றைப்பற்றி நீ எப்படி பயப்பட முடியும்?. நீ முற்றிலும் அறியாத, அறியப்படாத, புதிதான ஏதோ ஒன்றைப் பற்றி நீ எப்படி பயப்பட முடியும்? தெரிந்த ஒன்றைப் பற்றி மட்டுமே பயம் இருக்க முடியும். நான் மரணத்தைக் கண்டு பயப்படுகிறேன் என்று நீ சொல்லும்பொழுது, இல்லை... நீ மரணத்தைக் கண்டு பயப்படவில்லை. உனக்குத் தெரியாது! யாருக்குத்தெரியும்? மரணம் வாழ்க்கையைவிடச் சிறந்ததாக இருக்கக்கூடும்.

பயம் மரணத்தைப் பற்றியதல்ல. பயம் நேரத்தைப்பற்றியது.

இந்தியாவில் இரண்டிற்கும் நாங்கள் ஒரே வார்த்தையைக் கொண்டுள்ளோம். நேரத்தை நாங்கள் காலமென்றும், மரணத்தை நாங்கள் காலமாதல் என்றும் அழைக்கிறோம். மரணம்' நேரம் இரண்டிற்கும் நாங்கள் ஒரே வார்த்தையைக் கொண்டுள்ளோம். அது அர்த்தமுள்ளது. காலம் என்னும் வார்த்தை அர்த்தமுள்ளது, மிகவும் முக்கியத்துவமானது. ஏனெனில் காலமே மரணம் மற்றும் மரணமென்பது காலத்தை தவிர வேறல்ல.

காலம் கடக்கிறது என்பதின் பொருள், வாழ்க்கை கடந்து கொண்டிருக்கிறது, பயம் எழுகிறது. மேற்கில் அந்த பயம் இன்னும் கூர்மையாக உள்ளது. அது கிட்டத்தட்ட நாட்பட்ட நோயாக மாறிவிட்டது. கிழக்கில் அந்த பயம் அதிகமாக இல்லை. காரணம் என்னவென்றால், வாழ்க்கை எப்போதும் தொடர்ந்து கொண்டிருக்கிறது என்பதை கிழக்கு நம்புகிறது. இறப்பு முடிவல்ல, இந்த வாழ்க்கை மட்டுமே வாழ்க்கையல்ல. கடந்தகாலத்தில் ஆயிரக்கணக்கான பிறவிகள் இருந்தன. எதிர்காலத்தில் ஆயிரக் கணக்கான பிறவிகள் இருக்கும், அவசரமில்லை. அதனால்தான் கிழக்கு சோம்பேறியாக உள்ளது. அவசரமில்லை! அதனால்தான் கிழக்கில் நேரவுணர்வு கிடையாது. நான் ஐந்து மணிக்கு வருகிறேன்

என்று சொல்லி அவர் வரவேயில்லை என்றால், அவர் நேரம் குறித்து எந்த பொறுப்பையும் உணரமாட்டார். நீ காத்துக்கொண்டே யிருக்கிறாய். அவர் நான்கு அல்லது ஐந்து மணி நேரம் தாமதமாக வந்து, அதிலென்ன தவறிருக்கிறது? அதனாலென்ன? என்று கூறுவார்.

மேற்கின் பார்வையில் நேரம் மிகக் குறைவு. ஏனெனில் கிருஸ்துவமும், யூதமும், இரண்டும் ஒரே ஒரு வாழ்க்கையைத்தான் நம்புகின்றன. அது பதட்டத்தை உருவாக்கியுள்ளது. ஒரேயொரு வாழ்க்கைதான், அதிகபட்சம் எழுபது வருடங்கள், மூன்றிலொரு பகுதி தூக்கத்தில் கழிகிறது. நீ அறுபது வருடங்கள் வாழ்ந்தால் இருபது வருடங்கள் தூக்கத்தில் தொலைகிறது. மிச்சமிருப்பதில் இருபது வருடங்கள் கல்வியிலும், மற்றவற்றிலும் தொலைகிறது. மிச்சமிருக்கும் இருபது வருடங்கள் வேலை, தொழில், குடும்பம், திருமணம் மற்றும் விவகாரத்து மற்றும் நீ உண்மையிலேயே கணக்கிட்டால், வாழ்வதற்கு அங்கு உண்மையிலேயே நேரமில்லை, எப்போது நான் வாழப்போகிறேன்? பயத்தில் நெஞ்சடைக்கிறது, வாழ்க்கை கடந்து கொண்டிருக்கிறது, நேரம் உனது கைகளைவிட்டு நழுவிக்கொண்டேயிருக்கிறது. மரணம் நிலையான வேகத்தில் ஒவ்வொரு நொடியும் வந்து கொண்டிருக்கிறது, எந்த நொடியில் வேண்டுமானாலும் அது கதவைத் தட்டலாம். மற்றும் நேரம் திரும்பப் பெற முடியாது, போனால் போனதுதான்.

பயம், பதட்டம், நேரத்தைப் பற்றிய உணர்ச்சி, இது நாள்பட்ட நோயாகிக் கொண்டிருக்கிறது. நேரம் போய்க்கொண்டிருக்கிறது என்ற தொடர்வுணர்வும், பயத்தோடிருத்தலும் கிட்டத்தட்ட மேற்கு மனதிற்கு இரண்டாம் இயல்பாக மாறிவிட்டது.

உன்னால் இன்னமும் வாழமுடியவில்லை, காலம் கடந்து கொண்டிருக்கிறது, அதைத் திரும்பப்பெற முடியாது. நீ பின்னால் செல்லமுடியாது, போனால் போனதுதான். தினமும் வாழ்க்கை மேன்மேலும் சிறிதாகச் சுருங்கிக் கொண்டேயிருக்கிறது என்பதே அடிப்படை பயம். பயம் மரணத்தைப்பற்றியதல்ல, பயம் நேரத்தைப்பற்றியது. நீ அதனுள் ஆழமாக நோக்கினால் பயம்

வாழப்படாத வாழ்க்கையைப் பற்றியது என்பதைக் கண்டறிவாய். உன்னால் வாழ இயலவில்லை, நீ வாழ்ந்தால் பிறகு அங்கு எந்த பயமும் இல்லை. வாழ்வு நிறைவடைந்தால் அங்கு எந்த பயமுமில்லை. நீ அனுபவித்திருந்தால், வாழ்வு தரக்கூடிய உச்சங்களை நீ அடைந்திருந்தால், உனது வாழ்க்கை பரவசமான அனுபவமாக இருந்தால், அது உனக்குள் துடிக்கும் ஆழமான கவிதையாக இருந்தால், ஒரு பாடலாக, ஒரு விழாவாக, ஒரு திருவிழாவாக மற்றும் நீ அதனுடைய ஒவ்வொரு நொடியையும் அதன் முழுமையில் வாழ்ந்திருந்தால் பிறகு அங்கு நேரத்தைப்பற்றிய பயமிருக்காது. பிறகு பயம் மறைந்துவிடும்.

இன்று மரணம் வந்தாலும் கூட நீ தயாராக இருக்கிறாய், நீ வாழ்வை அறிந்துவிட்டாய். உண்மையில் நீ மரணத்தை வரவேற்பாய், ஏனெனில் இப்பொழுது ஒரு புதிய வாய்ப்புத் திறக்கிறது, ஒரு புதிய கதவு, ஒரு புதிய மர்மம் வெளிப்படுகிறது. நான் வாழ்க்கையை வாழ்ந்துவிட்டேன். இப்போது மரணம் கதவைத் தட்டுகிறது, நான் கதவைத் திறக்க குதித்தோடுவேன். உள்ளே வா! ஏனெனில் வாழ்க்கையை எனக்குத்தெரியும். நான் உன்னையும் அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

சாக்ரடீஸ் இறக்கும்பொழுது அவருக்கு அதுதான் நடந்தது. அவருடைய சீடர்கள் அழவும், கதறவும் தொடங்கினார்கள். அது இயல்பானதே. சாக்ரடீஸ் கண்ணைத்திறந்து 'நிறுத்துங்கள்! நீங்கள் என்ன செய்கிறீர்கள்? ஏன் அழுது கதறிக்கொண்டிருக்கிறீர்கள்? நான் என்னுடைய வாழ்க்கையை வாழ்ந்து விட்டேன். மற்றும் நான் அதை முழுமையாக வாழ்ந்துவிட்டேன். இப்போது இறப்பு வருகிறது, நான் அதைப்பற்றி ஆர்வத்தோடு இருக்கிறேன்! நான் அன்போடும், தவிப்போடும் நம்பிக்கையோடும் காத்துக் கொண்டிருக்கிறேன். ஒரு புதிய கதவு திறக்கிறது, ஒரு புதிய மர்மத்தை வாழ்வு வெளிப்படுத்துகிறது.'

யாரோ ஒருவர் கேட்டார், 'உங்களுக்கு பயமாக இல்லையா?'

சாக்ரடீஸ், 'மரணத்தைப்பற்றி பயப்படுவதில் எந்தப் பொருளையும் நான் பார்க்கவில்லை. ஏனெனில், அது என்னவாக

இருக்கப்போகிறது என்று எனக்குத் தெரியாது. மற்றும் இரண்டாவதாக அங்கு இரண்டு வாய்ப்புகள் மட்டுமே இருக்கின்றன. ஒன்று நான் இருப்பேன், பிறகு அங்கு பயத்தைக் குறித்த கேள்வியேயில்லை அல்லது நான் அங்கு இருக்கமாட்டேன், பிறகும்கூட பயத்தைப் பற்றிய பிரச்சனையில்லை. நான் இல்லையென்றால் அங்கு பிரச்சனையேயில்லை. நான் இல்லையென்றால் அங்கு எந்த பிரச்சனைகளும் இருக்கமுடியாது மற்றும் நான் இங்கிருப்பது போல் அங்கிருந்தால், என்னுடைய உணர்விருந்தால் பிறகு எந்த பிரச்சனையுமில்லை. ஏனெனில் நான் இன்னமும் அங்கிருக்கிறேன்.

வாழ்விலும் பிரச்சனைகள் இருந்தன. நான் அவைகளைத் தீர்த்திருக்கிறேன். எனவே நான் அங்கிருக்கும் பொழுது அங்கு பிரச்சனைகள் இருந்தால், நான் அவைகளைத் தீர்த்துவிடுவேன். ஒரு பிரச்சனையைத் தீர்ப்பது எப்பொழுதும் ஒரு ஆனந்தம், அது ஒரு சவாலை அளிக்கிறது. நீ சவாலை ஏற்றுக்கொண்டு அதனுள் நுழைந்தால் நீ அதனைத் தீர்க்கும் பொழுது ஒரு மகிழ்ச்சி பொங்குகிறது.' என்றார்.

மரணத்தின் பயம் காலத்தின் பயமே. ஆழத்தில் காலத்தின் பயம் வாழப்படாத வாழ்க்கையின், வாழப்படாத கணங்களின் பயமே.

எனவே என்ன செய்யவேண்டும்? அதிகமாக வாழ், இன்னமும் ஆழமாக வாழ், ஆபத்தாக வாழ்! இது உன்னுடைய வாழ்க்கை. உனக்கு கற்றுக்கொடுக்கப்பட்ட எந்தவிதமான முட்டாள் தனத்திற்கும் வாழ்க்கையைத் தியாகம் செய்யாதே. இது உன்னுடைய வாழ்க்கை, அதனை வாழ். அதனை வார்த்தைகளுக் காகவும், கருத்துகளுக்காகவும், நாடுகளுக்காகவும், அரசியலுக் காகவும், தியாகம் செய்யாதே. யாருக்காகவும் அதனைத் தியாகம் செய்யாதே.

ஆடு வெட்டுபவரைப் போன்று நிறைய பேர் இருக்கிறார்கள், அவர்கள் உன்னைப் பிடித்துக்கொள்ளலாம். அவர்கள் உனக்குள் சட்டதிட்டங்களை விதைக்கலாம். உனது நாடு ஆபத்திலுள்ளது,

அதற்காக இறந்துபோ! வடிகட்டிய முட்டாள்தனம். உன்னுடைய மதம் ஆபத்திலுள்ளது, அதற்காக இறந்துபோ! அபத்தம். இது உன்னுடைய வாழ்க்கை. அதை வாழ்! வேறெதற்காகவும் இறக்காதே, வாழ்விற்காக மட்டும் இறந்துபோ. அதுதான் செய்தி, பிறகு அங்கு எந்த பயமும் இருக்காது. ஆனால் உன்னைப் பயன் படுத்திக்கொள்ளத் தயாராக இருக்கும் மக்கள் இருக்கிறார்கள், அவர்கள் இதற்காக இறந்துபோ, அதற்காக இறந்துபோ என்று சொல்லிக்கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் ஒரேயொரு விஷயத்திற்கு மட்டுமே தயாராகயிருக்கிறார்கள், அது நீ ஒரு தியாகியாக மாறவேண்டும். பிறகு அங்கு பயங்கள் இருக்கும்.

வாழ்க்கையை வாழ். மற்றும் இறப்பது துணிச்சலான செயல் என்று எண்ணாதே. வாழ்க்கையை முழுமையாக வாழ்வது மட்டுமே ஒரே துணிச்சல், அங்கு வேறெந்த துணிச்சலுமில்லை. இறப்பது எளிமையானது, சுலபமானது. நீ ஒரு மலையுச்சியிலிருந்து குதிக்கலாம், நீ தூக்கில் தொங்கலாம். அது மிகவும் சுலபமான விஷயம். நீ ஒரு நாட்டிற்கு, ஒரு கடவுளுக்கு, ஒரு மதத்திற்கு, ஒரு தேவாலயத்திற்கு ஒரு தியாகியாகலாம். எல்லோரும் கசாப்புக் கடைக்காரர்கள், எல்லோரும் கொலைக்காரர்கள். உன்னைத் தியாகம் செய்யாதே. நீ உனக்காக இங்கே இருக்கிறாய், வேறு யாருக்காகவுமல்ல.

பிறகு வாழ். முழுமையான சுதந்திரத்தில் மிக ஆழமாக, ஒவ்வொரு கணமும் நித்தியமாக மாறும் அளவிற்கு வாழ். நீ ஒரு கணத்தை ஆழமாக வாழ்ந்தால் அது நித்தியமாக மாறிவிடுகிறது. நீ ஒரு கணத்தை ஆழமாக வாழ்ந்தால் நீ கிடைமட்ட தளத்திலிருந்து ஆழத்திற்குள் சென்றுவிடுகிறாய்.

காலத்தோடு தொடர்புகொள்ள இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று கடலின் மேல்தளத்தோடு நீச்சலடிப்பது, மற்றொன்று ஆழமாகச் செல்வது, அடி ஆழத்திற்குச் செல்வது. நீ காலத்தின் கடலில் வெறுமனே நீந்திக்கொண்டிருப்பதால் எப்போதும் நீ பயத்தில்தான் இருப்பாய். ஏனெனில், மேல்தளம் உண்மையல்ல.

மேல்தளம் உண்மையிலேயே கடலல்ல, அது வெறும் வரையறை, வெறும் வெளிப்புறம். ஆழத்திற்குச்செல், ஆழத்தை நோக்கிச்செல். நீ ஒரு கணத்தை ஆழமாக வாழும்பொழுது நீ காலத்தின் பகுதியல்ல.

நீ காதலில் இருந்தால், காதலில் ஆழமாக இருந்தால் காலம் மறைந்து விடுகிறது. நீ உனது காதலனுடனோ அல்லது காதலியுடனோ அல்லது நண்பர்களுடனோ இருக்கும்பொழுது திடீரென அங்கு காலம் இல்லாமல் போய்விடுகிறது. நீ ஆழத்திற்குச் செல்கிறாய். நீ இசையை ரசித்திருந்தால், நீ இசைக்கான ஒரு இதயத்தைப் பெற்றிருந்தால் காலம் நின்று விடுகிறது என்பதை நீ அறிவாய். உனக்கு அழகைப் பற்றிய ஒரு உணர்வு, அழகியலைப் பற்றிய உணர்விருந்தால், அதைப் பற்றிய நுண்ணுணர்வு இருந்தால், ஒரு ரோஜாவைப் பார்க்கும் பொழுது காலம் மறந்து விடுகிறது. நிலாவைப் பார்க்கும் பொழுது காலம் எங்கே இருக்கிறது? கடிகாரம் உடனடியாக நின்று விடுகிறது. முட்கள் நகர்ந்து கொண்டிருக்கின்றன. ஆனால், காலம் நின்றுவிடுகிறது.

நீ எதையாவது ஆழமாக நேசித்திருந்தால் நீ காலத்தை கடப்பதை நீ அறிவாய். அந்த ரகசியம் பலமுறை உனக்கு வெளிப் பட்டிருக்கிறது, வாழ்வே உனக்கு அதை வெளிக்காட்டுகிறது.

வாழ்க்கை நீ அனுபவிக்க வேண்டுமென்று விரும்புகிறது, வாழ்க்கை நீ கொண்டாட வேண்டுமென்று விரும்புகிறது, வாழ்க்கை நீ கடந்த காலத்தில் எந்த வருத்தமும் இல்லாத அளவிற்கு, கடந்த காலமே நினைவில் இல்லாத அளவிற்கு முழுமையாக வாழச் சொல்கிறது, ஏனெனில் ஒவ்வொரு கணமும் நீ மேன்மேலும் ஆழமாகச் செல்கிறாய். ஒவ்வொரு கணமும் வாழ்க்கை மேன்மேலும் அழகுள்ளதாக, அதிக பரவசமூட்டுவதாக, உச்சகட்ட அனுபவமாக ஆகுமளவிற்கு மிக ஆழமாக நீ பங்கேற்க வேண்டுமென வாழ்க்கை விரும்புகிறது. மெதுமெதுவாக உச்சகட்டத்திற்கு இசைவாக நீ மாறும்பொழுது அது உனது வசிப்பிடமாக மாறிவிடுகிறது.

ஒரு ஞானம் பெற்ற மனிதன் அப்படித்தான் வாழ்கிறான். அவன் கணத்திற்கு கணம் முழுமையாக வாழ்கிறான்.

ஒரு ஜென் குருவை யாரோ ஒருவர், 'ஞானமடைந்ததில் இருந்து நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டார். அதற்கு அவர் 'நான் கிணற்றிலிருந்து நீர் சேந்துகிறேன், காட்டில் மரம் வெட்டுகிறேன், நான் பசியாக உணரும் போது நான் சாப்பிடுகிறேன், நான் தூக்கமாக உணரும்போது நான் தூங்குகிறேன், அவ்வளவுதான்' என்று கூறினார்.

ஆனால் நன்றாக நினைவில்கொள். அவனுடைய இருப்பைப் பற்றி ஒரு ஆழமான புரிதலுக்கு வந்துவிட்ட ஒரு மனிதன் மரம் வெட்டப்படும் பொழுது அவன் வெறுமனே மரம் வெட்டுகிறான். அங்கு வேறு யாரும் இல்லை. உண்மையில் அங்கு மரம் வெட்டுபவரேயில்லை. மரம் வெட்டுதல், வெட்டுதல் மட்டுமே. அங்கு மரம் வெட்டுபவர் இல்லை. ஏனெனில் மரம் வெட்டுபவர் என்பது கடந்தகாலம். அவர் சாப்பிடும்பொழுது அவர் வெறுமனே சாப்பிடுகிறார்.

ஒரு சிறந்த ஜென்குரு, ''உட்காரும் பொழுது உட்கார், நடக்கும் பொழுது நட, எல்லாவற்றிற்கும் மேலாக தள்ளாடாதே'', என்று கூறியுள்ளார்.

காலம் ஒரு பிரச்சனையாகிறது ஏனெனில், நீ சரியாக வாழவில்லை. அது ஒரு நோய் என்பதற்கான குறியீடு. நீ சரியாக வாழ்ந்தால் காலத்தின் பிரச்சனை மறைந்துவிடுகிறது, காலத்தைப் பற்றிய பயம் மறைந்துவிடுகிறது.

எனவே என்ன செய்யவேண்டும்? ஒவ்வொரு கணமும் நீ என்ன செய்தாலும், அதை முழுமையாகச்செய். எளிமையாக விஷயங்கள், குளிக்கும் பொழுது முழுமையாகக் குளி, முழு உலகத்தையும் மறந்துவிடு. உட்காரும் பொழுது உட்கார், நடக்கும்பொழுது நட. எல்லாவற்றிற்கும் மேலாக தள்ளாடாதே. குளியலறையில் உட்கார்ந்திருக்கும் போது, முழு பிரபஞ்சமும் உன்மேல் விழட்டும், உன்மேல் விழும் அந்த அழகான நீர்த்துளிகளோடு இணைந்திரு.

சிறிய விஷயங்கள் வீட்டைச் சுத்தம் செய்தல், உணவு தயாரித்தல், துணி துவைத்தல், காலை நடைப்பயிற்சிக்கு செல்லுதல் இவைகளை முழுமையாகச் செய். பிறகு எந்த தியானத்திற்கும் அங்கு தேவையிருக்காது.

ஒரு விஷயத்தை முழுமையாகச் செய்வதெப்படி என்று கற்றுக் கொள்ளும் ஒருவழியைத் தவிர தியானமென்பது வேறொன்று மில்லை. ஒருமுறை நீ கற்றுக்கொண்டுவிட்டால் உன்னுடைய முழு வாழ்க்கையும் ஒரு தியானமாக மாற்றிவிடும். தியான முறைகளைப் பற்றி முற்றிலும் மறந்துவிடு. வாழ்க்கை மட்டுமே சட்டமாக இருக்கட்டும். வாழ்க்கை மட்டுமே தியானமாக இருக்கட்டும். பிறகு காலம் மறைந்துவிடுகிறது.

நினைவில்கொள், காலம் மறையும்பொழுது மரணமும் மறைந்துவிடுகிறது. பிறகு நீ மரணத்தைக்கண்டு அஞ்சுவதில்லை, உண்மையில் நீ காத்திருக்கிறாய்.

நினைத்துப்பார், நீ மரணத்திற்காக காத்திருக்கும் பொழுது மரணம் எப்படி இருக்கமுடியும்? இந்த காத்திருத்தல் தற்கொலையல்ல, இந்த காத்திருத்தல் நோயல்ல. நீ உன்னுடைய வாழ்க்கையை வாழ்ந்துவிட்டாய், நீ உன்னுடைய வாழ்க்கையை வாழ்ந்திருந்தால் மரணம் அவை அனைத்திற்கும் சிகரமாகத் திகழ்கிறது. மரணம் வாழ்க்கையின் உச்சக்கட்டம், சிகரமாக வாழ்கிறது.

நீ சாப்பிடுதல், குடித்தல். நடத்தல், காமம் என்ற சிற்றலை களையும் வாழ்ந்துவிட்டாய். சிறிய அலைகள், பெரிய அலைகள் என நீ வாழ்ந்துவிட்டாய், பிறகு பேரலை வருகிறது, நீ இறக்கிறாய்! நீ அதையும் அதன் முழுமையில் வாழவேண்டும். அங்கே ஒருவர் இறப்பதற்குத் தயாராக இருக்கிறார். அந்தத் தயாராக இருத்தலே இறப்பின் இறப்பாகும்.

அப்படித்தான் மக்கள் ஏதும் இறப்பதில்லை என்று கண்டறிந்தார்கள். நீ அதனை வாழத் தயாராக இருந்தால் இறப்பு சக்தியற்றதாகி விடுகிறது. நீ பயப்பட்டால் மரணம் மிகவும்

சக்தியுள்ளதாகி விடுகிறது. வாழப்படாத வாழ்க்கை மரணத்திற்கு சக்தியளிக்கிறது. ஒரு முழுமையாக வாழப்பட்ட வாழ்க்கை மரணத்திடமிருந்து எல்லா சக்தியையும் பறித்துவிடுகிறது, மரணமில்லை.

## புரிந்து கொள்ளுதலே சாவி

***கேள்வி: பயத்தை முற்றிலுமாக வெற்றிகொள்வது அல்லது அழிப்பது எப்படி?***

**ஓஷோ:** பயத்தை முற்றிலுமாக அழிக்கமுடியாது, பயத்தை வெற்றிகொள்ள முடியாது - அதனைப் புரிந்து கொள்ள மட்டுமே முடியும். புரிந்து கொள்ளுதலே இங்கு முக்கியமான வார்த்தை. புரிந்து கொள்ளுதல் மட்டுமே அதனை நிறுத்துகிறது, வேறெதுவுமல்ல. நீ அதனை வெற்றிகொள்ள முயற்சி செய்தால் உன்னுடைய பயம் அடங்கியே இருக்கும், உனக்குள் அது ஆழமாகச் செல்லும், அது உதவி செய்யாது. அது விஷயங்களை இன்னும் சிக்கலாக்கிவிடும். அது மேலே வரும்பொழுது நீ அதை அடக்கலாம், அதுதான் வெற்றிகொள்ளுதல். நீ அதனை அடக்கலாம். நீ அது உனது உணர்வு மனதிலிருந்து முற்றும் மறைந்துபோகும் அளவிற்கு மிகவும் ஆழமாக அடக்கலாம். பிறகு நீ அதைப்பற்றி ஒருபோதும் உணர்வுகொள்ளமாட்டாய். அது அடி ஆழத்தில் இருக்கும், அது ஒரு விசையைக் கொண்டிருக்கும், அது உன்மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிடும். நீ அதைப்பற்றி உணர்வடையாத அளவிற்கு மறைமுகமான வழியில் உன்மீது அது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிடும். ஆனால் பிறகு ஆபத்து ஆழத்திற்கு சென்றுவிட்டது. இப்போது நீ அதனை புரிந்துகொள்ளக் கூட முடியாது.

எனவே பயம் வெற்றிக்கொள்ளப்பட வேண்டிய ஒன்றல்ல, அழிக்கப்பட வேண்டியதல்ல, அது அழிக்கப்பட முடியாது. ஏனெனில் பயம் ஒரு விதமான சக்தியைக் கொண்டிருக்கிறது, எந்த சக்தியையும் அழிக்கமுடியாது. நீ பயப்படும் பொழுது, கோபத்திலிருக்கும் பொழுது இருப்பதைப்போல, உனக்கு

அபரிமிதமான சக்தி இருப்பதை நீ கண்டிருக்கிறாயா? அவை இரண்டும் ஒரே சக்தியின் இரு பக்கங்கள். கோபம் ஆக்ரோஷமானது, பயம் ஆக்ரோஷமற்றது. பயம் கோபத்தின் எதிர்மறைநிலை, கோபம் பயத்தின் நேர்மறைநிலை. நீ கோபமாக இருக்கும் பொழுது எவ்வளவு சக்தியுடைவனாக மாறுகிறாய் என்பதை நீ கவனித்ததில்லையா? எவ்வளவு சக்தி பெற்றிருக்கிறாய்? நீ கோபமாக இருக்கும்பொழுது ஒரு பெரிய பாறையை உன்னால் எறியமுடியும். சாதாரணமாக உன்னால் அதை அசைக்கக் கூட முடியாது. நீ கோபமாக இருக்கும் பொழுது மூன்று அல்லது நான்கு மடங்கு பெரிதாகிறாய். கோபமில்லா விட்டால் செய்யமுடியாத சில விஷயங்களை நீ செய்யமுடியும்.

அல்லது பயத்தில் ஒரு ஒலிம்பிக் ஓட்டப்பந்தய வீரர் கூட பொறாமைப்படும் அளவிற்கு உன்னால் வேகமாக ஓடமுடியும். பயம் சக்தியை உருவாக்குகிறது. பயமே சக்தி. மற்றும் சக்தியை அழிக்கமுடியாது. சக்தியின் ஒரு புள்ளியைக் கூட பிரபஞ்சத்திலிருந்து அழிக்கமுடியாது. இது தொடர்ந்து நினைவில் வைத்துக் கொள்ளப்பட வேண்டும், இல்லாவிடில் நீ தவறாக எதையாவது செய்துவிடுவாய். நீ எதையும் அழிக்கமுடியாது. நீ அதன் உருவத்தை மட்டுமே மாற்றமுடியும். உன்னால் ஒரு சிறிய நீர்குமிழியைக் கூட அழிக்கமுடியாது, ஒரு சிறிய மணல்துகளைக் கூட அழிக்கமுடியாது, அது அதன் உருவத்தை மட்டுமே மாற்றிக்கொள்ளும். நீ, நீரின் ஒரு சொட்டை அழிக்கமுடியாது, நீ அதனைப் பனிக்கட்டியாக மாற்றலாம், நீ அதனை நீராவியாக்கலாம் ஆனால் அது இருக்கும், அது எங்காவது இருக்கும். அது பிரபஞ்சத்திலிருந்து வெளியே செல்லமுடியாது.

நீ பயத்தையும் அழிக்கமுடியாது, பல நூற்றாண்டுகளாக அது முயற்சிக்கப்பட்டு வருகிறது. மக்கள் பயத்தை அழிக்க முயற்சி செய்துகொண்டு இருக்கிறார்கள், கோபத்தை அழிக்க முயற்சி செய்துகொண்டு இருக்கிறார்கள், காமத்தை அழிக்க முயற்சி செய்துகொண்டு இருக்கிறார்கள், ஆசையை அழிக்க முயற்சி செய்துகொண்டு இருக்கிறார்கள், இதையும் அதையும் அழிக்க

முயற்சி செய்துகொண்டு இருக்கிறார்கள். முழு உலகமும் தொடர்ந்து உன்னுடைய சக்திகளை அழிக்க வேலை செய்து கொண்டு இருக்கிறது. மற்றும் முடிவென்ன? மனிதன் ஒரு குழப்பமாக மாறிவிட்டான், எதுவும் அழிக்கப்படவில்லை. எல்லாமும் இன்னமும் அங்கேயே இருக்கிறது. இருப்பவை குழப்பம் மட்டுமே அடைந்துவிட்டன. எதையும் அழிக்க வேண்டிய அவசியமில்லை, ஏனெனில் முதலில் எதையும் அழிக்கமுடியாது, பிறகு என்ன செய்யப்பட வேண்டும்?

நீ பயத்தை புரிந்து கொள்ள வேண்டும். பயம் என்றால் என்ன? அது எப்படி அழிகிறது? அது எங்கிருந்து வருகிறது? அதனுடைய செய்தி என்ன? எந்தவிதமான கருத்துமின்றி அதனுள் பார்க்க வேண்டும். பிறகு மட்டுமே நீ புரிந்துகொள்வாய். பயம் தவறானது, அது இருக்கக் கூடாது, நான் பயப்படக் கூடாது என்ற கருத்து ஏற்கனவே உனக்கிருந்தால் பிறகு உன்னால் பார்க்கமுடியாது. நீ பயத்தை எப்படி சந்திக்கமுடியும்?. அது உன்னுடைய எதிரி என்று நீ முடிவு செய்துவிட்ட பின் அதன் கண்களை நீ எப்படி சந்திக்கமுடியும்? எதிரியின் கண்களுக்குள் யாரும் பார்ப்பதில்லை. நீ எதையாவது தவறு என்று நினைத்தால் பிறகு நீ அதனை கடந்துசெல்ல உதாசினப்படுத்த, தவிர்க்க முயற்சி செய்வாய். நீ அதனை சந்திக்காமலிருக்க முயற்சி செய்வாய். ஆனால் அது அப்படியே இருக்கும். இது உதவி செய்யப்போவதில்லை.

முதலில் எல்லா முடிவுகளையும், தேர்வுகளையும், கண்டங்களையும் விட்டுவிடு. பயம் ஒரு உண்மை. அது சந்திக்கப்பட வேண்டும். அது புரிந்து கொள்ளப்பட வேண்டும். புரிந்து கொள்ளுதல் மூலம் மட்டுமே அதனை மாற்றமுடியும். உண்மையில் புரிந்துகொள்ளுதலின் மூலமே அது மாறுகிறது, புரிந்து கொள்ளுதலே அதனை மாற்றுகிறது. வேறெதுவும் செய்ய அவசியமில்லை.

பயம் என்பது என்ன? முதலில் பயம் ஏதோ ஒரு ஆசையை சுற்றியே இருக்கிறது. நீ ஒரு புகழ் வாய்ந்த மனிதனாக, உலகத்திலேயே புகழ்வாய்ந்த மனிதனாக ஆக விரும்புகிறாய். பிறகு

அங்கு பயமிருக்கிறது. நீ அதனைச் செய்யமுடியாவிட்டால் பயம் வருகிறது. இப்பொழுது பயம் ஆசையின் ஒரு பக்கவிளைவாக வருகிறது. நீ உலகத்திலேயே பணக்காரனாக ஆக விரும்புகிறாய், நீ வெற்றியடையாவிட்டால் என்ன செய்வது? நீ நடுங்கத் தொடங்குகிறாய், பயம் வருகிறது. நீ ஒரு பெண்ணை விரும்பு கிறாய், நாளை ஒருவேளை உன்னால் அவளோடு இருக்க முடியாமல் போகலாம். அவள் ஒருவேளை வேறு யாரோடும் சென்றுவிடலாம். அவள் இன்னமும் உயிரோடிருக்கிறாள். அவள் போகலாம். ஒரு இறந்த பெண்மணி மட்டுமே போக இயலாது, இந்த பெண் இன்னமும் உயிரோடிருக்கிறாள். ஒரு பிணத்தை நீ பிடித்து வைத்துக்கொள்ளலாம், பிறகு அங்கு எந்த பயமுமில்லை. பிணம் அங்கேயேதான் இருக்கும். நீ சாமான்களை பிடித்து வைத்துக் கொள்ளலாம். பிறகு அங்கு எந்த பயமுமில்லை. ஆனால் நீ ஒரு மனிதரைப் பிடித்துக்கொள்ள முயற்சி செய்யும்போது பயம் வருகிறது. யாருக்குத்தெரியும்? நேற்று அவள் உன்னுடையவளல்ல, இன்று அவள் உன்னுடையவள், யாருக்குத்தெரியும்? நாளை அவள் வேறு யாரோ ஒருவருடையவளாக மாறக்கூடும். பயம் எழுகிறது, பிடித்துவைத்துக் கொள்ளவேண்டும் என்ற ஆசையின் காரணமாக பயம் எழுகிறது. அது ஒரு பக்கவிளைவு. நீ பிடித்துக்கொள்ள விரும்புகிறாய், அதனால்தான் பயமாக இருக்கிறது. நீ பிடித்துவைத்துக்கொள்ள விரும்பவில்லை என்றால் பிறகு அங்கு பயமில்லை. எதிர்காலத்தில் நீ இப்படியிருக்க வேண்டும், அப்படியிருக்க வேண்டும் என்ற ஆசையில்லாவிட்டால் பிறகு அங்கு பயமில்லை. நீ சொர்க்கத்திற்கு செல்லவேண்டுமென்று விரும்பாவிட்டால், பிறகு அங்கு பயமில்லை, பிறகு பூசாரி உன்னை பயமுறுத்தமுடியாது. நீ எங்கும் செல்ல விரும்பாவிட்டால் பிறகு யாரும் உன்னை பயமுறுத்த முடியாது.

நீ இந்த கணத்தில் வாழத்தொடங்கினால் பயம் மறைந்து விடுகிறது. ஆசையின் வழியாக பயம் வருகிறது. எனவே அடிப்படையில் ஆசையே பயத்தை உருவாக்குகிறது.

அதற்குள் பார், எப்போதெல்லாம் பயம் வருகிறதோ அப்போதெல்லாம் அது எங்கிருந்து வருகிறதென்று பார், எந்த ஆசை அதை உருவாக்குகிறது என்று பார், பிறகு அதன் பயனற்றத் தன்மையை பார். நீ எப்படி ஒரு பெண்ணை அல்லது ஒரு ஆணை பிடித்து வைத்துக்கொள்ள முடியும்? அது ஒரு சிறுபிள்ளைத் தனமான, முட்டாள்தனமான கருத்து. பொருட்களை மட்டுமே உரிமை கொண்டாட முடியும், மனிதர்களை அல்ல.

ஒரு மனிதர் என்பவர் சுதந்திரமானவர், சுதந்திரத்தினாலேயே ஒரு மனிதர் அழகாக இருக்கிறார். ஒரு பறவை வானத்தில் பறந்து கொண்டிருக்கும்போது அழகாக இருக்கிறது. நீ அதைப் பிடித்து கூண்டில் அடைக்கலாம். நினைவில்கொள், அது இன்னமும் அதே பறவையல்ல, அது அதைப்போன்றே தோன்றுகிறது, ஆனால் அது அதே பறவையல்ல. வானம் எங்கே? சூரியன், காற்று மற்றும் அந்த மேகங்கள் எங்கே? வானத்தில் பறந்தபோது இருந்த சுதந்திரம் எங்கே? எல்லாம் மறைந்துவிட்டது. இது, அதே பறவையல்ல.

நீ ஒரு பெண்ணைக் காதலிக்கிறாய், ஏனெனில் அவள் சுதந்திரமானவள், பிறகு நீ அவளை பதிவு அலுவலகத்தில் திருமணம் செய்துகொள்கிறாய், இப்போது நீ அவளை கூண்டிலடைக்கிறாய், மற்றும் நீ அவளைச் சுற்றி ஒரு அழகான கூண்டை உருவாக்குகிறாய். அந்த கூண்டு தங்கத்தால் ஆனதாக, வைரங்கள் பதிக்கப்பட்டதாக இருக்கலாம். ஆனால் அவள் இன்னமும் அதே பெண்ணல்ல, மற்றும் இப்போது பயம் வருகிறது. நீ பயப்படுகிறாய். ஏனெனில், அந்த பெண்ணிற்கு இந்த கூண்டு பிடிக்காமல் போய்விடக்கூடும். மீண்டும் அவள் சுதந்திரத்திற்கு ஏங்கக்கூடும் என்று பயப்படுகிறாய். சுதந்திரம் உச்சகட்ட மதிப்பு வாய்ந்தது. ஒருவர் அதனைக் கைவிட முடியாது.

மனிதன் சுதந்திரத்தால் ஆக்கப்பட்டுள்ளான். தன்னுணர்வு சுதந்திரத்தால் ஆக்கப்பட்டுள்ளது. எனவே விரைவில் அந்தப்பெண் சலிப்பாக உணரத்தொடங்குவாள், அவள் வேறு யாராவது ஒருவரைத் தேடத்தொடங்குவாள், நீ பயப்படுகிறாய். உனக்கு

பயம் வருகிறது. ஏனெனில் நீ உரிமை கொண்டாட விரும்புகிறாய், ஆனால் முதலில் நீ ஏன் உரிமை கொண்டாட விரும்புகிறாய்? உரிமையற்று இரு. பிறகு அங்கு எந்த பயமும் இருக்காது. அங்கு பயமில்லாத போது பயத்தினால் பிரித்துவைக்கப்பட்ட, பயத்தினுள் அடக்கி வைக்கப்பட்ட, பயத்தோடு சம்பந்தபட்டிருந்த சக்தி கிடைக்கிறது. அந்த சக்தி உனது படைப்பாற்றலாக மாறமுடியும். அது ஒரு ஆடலாக, ஒரு கொண்டாட்டமாக மாறமுடியும்.

நீ இறப்பதற்கு பயப்படுகிறாயா? நீ இறக்க முடியாது. ஏனெனில், முதலில் நீ இல்லை. நீ எப்படி இறக்கமுடியும்?. உன்னுடைய இருப்பினுள் பார், அதனுள் ஆழமாகச் செல், இறப்பதற்கு அங்கு யார் இருக்கிறார்கள்? நீ ஆழமாக பார்க்கும்பொழுது நீ எந்த 'நானை'யும், எந்த ஆணவத்தையும் அங்கே கண்டறியமாட்டாய். பிறகு அங்கு இறப்பிற்கு வாய்ப்பில்லை. ஆணவத்தின் கருத்து மட்டுமே இறப்பின் பயத்தை உருவாக்குகிறது. அங்கு எந்த ஆணவமும் இல்லாதபோது அங்கு எந்த மர்மமும் இல்லை. நீ தூய மௌனம், மரணமற்றத்தன்மை, நித்தியம், நீ இப்போதிருப்பதை போலல்ல, ஆனால் ஒரு திறந்த வானமாக, நான் என்ற கருத்தினால் கெடுக்கப்படாததாக, வரையறையற்றதாக, எல்லைகளற்றதாக இருந்தால் பிறகு அங்கு எந்த பயமுமில்லை.

பயம் வருகிறது, ஏனெனில் அங்கு மற்ற விஷயங்கள் இருக்கின்றன. நீ அந்த விஷயங்களுக்குள் பார்த்தாக வேண்டும், மற்றும் நீ அவைகளுக்குள் பார்ப்பது அவைகளை மாற்றத் தொடங்கும்.

எனவே தயவுசெய்து அதை எப்படி வெற்றிக்கொள்வது, அழிப்பது என்று கேட்காதே. அது வெற்றிக்கொள்ளப்பட வேண்டியதல்ல. அதை வெற்றிகொள்ள முடியாது. அதை அழிக்க முடியாது. அதைப் புரிந்துகொள்ள மட்டுமே முடியும். புரிந்து கொள்ளுதல் மட்டுமே உன்னுடைய ஒரே சட்டமாக இருக்கட்டும்.

## தெய்வீக பாதுகாப்பற்றத்தன்மை

***கேள்வி: வெளிப்புற பாதுகாப்பு பற்றிய எல்லாக் கருத்தும் முட்டாள்தனமானது, மற்றும் உண்மையற்றது என்பதை நான் அறிவேன். ஆனால் நாம் தேடக்கூடிய உட்புற பாதுகாப்பு ஏதாவது உள்ளதா?***

**ஓஷோ:** உட்புறமோ, வெளிப்புறமோ எந்த பாதுகாப்பும் இல்லை. பாதுகாப்பு என்பதேயில்லை. அதனால்தான் பிரபஞ்சம் மிக அழகாக உள்ளது. ஒரு ரோஜா மலர் காலையில் பாதுகாப்பாக இருப்பதைப் பற்றி எண்ணத்தொடங்கினால் பிறகு என்ன நிகழும்? ரோஜா மலர் உண்மையிலேயே பாதுகாப்படைந்தால் அது பிளாஸ்டிக் பூவாக மாறிவிடும். இல்லாவிடில் அங்கு பாதுகாப்பற்ற தன்மை உள்ளது. ஒரு பலமான காற்றடித்தால் இதழ்கள் போய்விடும், ஒரு குழந்தை ஓடிவந்து பூவைப் பறித்துவிடும், ஒரு ஆடு அவசரமாக வந்து அதனைச் சாப்பிட்டுவிடும், அல்லது எதுவும் நடக்காமல் போகலாம். எந்த குழந்தையும் வரவில்லை, ஆடும் இல்லை, காற்றுமில்லை. ஆனால் மாலையில் அது போய்விடும். சாதாரணமற்ற எதுவும் நடக்காமல் இருந்தால் கூட, அப்போதும் கூட அது போய்விடும்.

ஆனால் ரோஜாமலரின் அழகு அதுதான். அதனால்தான் அது அவ்வளவு அழகாக இருக்கிறது. ஏனெனில் அது இறப்பின் நடுவே வாழ்கிறது, அது இறப்பிற்கு சவால் விடுகிறது, அது காற்றுக்கு சவால் விடுகிறது. மிகச்சிறிய குட்டிமலர் மற்றும் ஒரு சிறந்த சவால், அது எல்லா சிரமங்களிலிருந்தும், அபாயங்களிலிருந்தும் மேலே எழுகிறது. ஒரு சில நிமிடங்களுக்கு அல்லது ஒருசில மணி நேரங்களுக்கு மட்டுமேயாக அது இருந்தாலும்கூட, அது ஒரு பொருட்டல்ல. நேரம் பொருட்டல்ல, அது அதற்கேயான நாளைக் கொண்டது, அது வாழ்ந்துவிட்டது. அது காற்றுடனும், சூரிய சந்திரனுடனும் பேசிவிட்டது, மேகங்களைப் பார்த்துவிட்டது. அங்கு ஆனந்தம் இருந்தது, அங்கு சிறந்த ஆர்வம் இருந்தது, பிறகு அது இறந்துவிடுகிறது, அது பிடித்துகொள்ளவில்லை, பிடித்து

கொண்டிருக்கும் ஒரு ரோஜாமலர் அசிங்கமாக இருக்கும். மனிதர்கள் மட்டுமே அவ்வளவு அசிங்கமாக மாறுவார்கள். நேரம் வரும்பொழுது மலர் வெறுமனே இறந்து, அது வந்த பூமிக்குள்ளேயே மறைந்து விடுகிறது. அங்கு எந்த வெளிப்புற பாதுகாப்புமில்லை, எந்த உட்புற பாதுகாப்புமில்லை. பாதுகாப்பற்ற தன்மையினால் தான் வாழ்க்கை உருவாக்கப்பட்டிருக்கிறது.

என்னுடைய வேலைக்கும், மற்றவர்களுடைய வேலைக்கும் இருக்கும் வித்தியாசம் அதுதான். அவர்கள் உனக்கு பாதுகாப்பளிக்கிறார்கள். நான் எல்லா பாதுகாப்பையும் உன்னிடமிருந்து பறித்துக் கொள்கிறேன். நான் உன்னை வாழ்வில் அழகுகளைப் பற்றி, அதன் ஆபத்துகள், அபாயங்கள், அதன் பாதுகாப்பற்றத் தன்மைகளைப் பற்றி உணர்வுறச் செய்கிறேன். நான் மேலும் நுண்ணுணர்வு கொள்ளச் செய்கிறேன். மேலும் அந்த மேம்பட்ட நுண்ணுணர்வில் சிறந்த சவாலும், சாகசமும் உள்ளன. பிறகு ஒருவர் நாளை இறக்கப்போகிறதா இல்லையா என்பதைப்பற்றி கவலை கொள்வதில்லை. இன்றே போதும் என்பதை விட அதிகம். நம்மால் நேசிக்கமுடிந்தால், நம்மால் வாழமுடிந்தால் அந்த நாளே போதும் என்பதை விட அதிகம்.

ஆழமாக நேசித்தலில் இருக்கும் அந்த ஒருகணம் நித்தியம், நிரந்தரமானது. பாதுகாப்பைப் பற்றி அப்போது யார் கவலைப்படுகிறார்கள்? அதைப்பற்றிய கருத்து ஆசையிலிருந்து எழுகிறது, அந்த கருத்து ஆணவத்திலிருந்து எழுகிறது. உட்புற பாதுகாப்பு என்று அழை அல்லது வெளிப்புற பாதுகாப்பு என்று அழை, அது எவ்வித வித்தியாசத்தையும் ஏற்படுத்தப்போவதில்லை. எவ்வளவு சுற்றிச் சுற்றி கவனமாகப் பார்த்தாலும் அங்கு எந்த பாதுகாப்புமில்லை, பிரபஞ்சத்தின் சூழலில் அது சாத்தியமேயில்லை என்பதை ஒருவர் பார்த்தாக வேண்டும். அந்த கணத்தில் உனது இருப்பில் மிகப்பெரிய புரட்சி நிகழ்கிறது, நீ நிலைமாற்றம் அடைந்துவிட்டாய்.

யேசு அந்த கணத்தை அடிப்படை மாற்றம் என்று அழைக்கிறார், நீ மாற்றப்பட்டுவிட்டாய். நீ ஒரு கிறிஸ்துவனாக, ஒரு

கத்தோலிக்கனாக மாறிவிட்டாய் என்பதல்ல. அந்த கணத்தில் நீ இனிமேலும் உலகியலைச் சார்ந்தவனல்ல.

பாதுகாப்பைத் தேடுவது என்பது உலகியலைச் சார்ந்திருப்பது. ஒரு ரோஜாமலரைப் போல பாதுகாப்பற்றத் தன்மையில் வாழ்வது என்பது மறுஉலகைச் சார்ந்திருப்பது.

பாதுகாப்பு இந்த உலகிற்கானது, பாதுகாப்பற்ற தன்மை தெய்வீகத்திற்குரியது.

# 2

# மரண பயம் - பயத்தின் வேர்களை ஆராய்தல்

மக்கள் பயத்தில் வாழும்பொழுது அவர்களுடைய வாழ்வு துடிப்போடு இருப்பதில்லை. பயம் அடக்கி முடக்குகிறது. அது உனது வேர்களை வெட்டுகிறது. நீ உனது முழு உயரத்தை அடைவதற்கு, உனது முழு இருப்பை அடைவதற்கு அது அனுமதிப்பதில்லை. அது மக்களைக் குள்ளர்களாக்குகிறது, ஆன்மீகக் குள்ளர்களாக்குகிறது. உன்னுடைய நிறைவை நோக்கி நீ வளர்வதற்கு மிகவும் துணிச்சல் தேவை, அதற்கு பயமற்றத்தன்மை வேண்டும். பயமற்றத்தன்மை மிகவும் மதத்தன்மை வாய்ந்த குணம்.

பயத்தால் நிறைந்திருக்கும் மக்கள் அறிந்தவைகளைக் கடக்க முடியாது. அறிந்தவைகள் உனக்கு ஒருவிதமான சுகத்தை, பாதுகாப்பை, அபாயமற்றத்தன்மையை அளிக்கிறது. ஏனெனில் அவை அறிந்தவை. ஒருவர் முற்றிலும் அறிவார், அதனை எப்படி சமாளிப்பது என்று ஒருவருக்குத் தெரியும். ஒருவர் கிட்டத்தட்ட தூங்கிக்கொண்டே அதனைச் சமாளித்துவிட முடியும். அங்கே எழவேண்டிய தேவையில்லை, அதுதான் அறிந்தவைகளின் வசதி.

நீ அறிந்தவைகளின் எல்லையைக் கடக்கும் கணத்தில் பயம் எழுகிறது. ஏனெனில் இப்போது நீ அறியமாட்டாய். உனக்கு இப்போது என்ன செய்வது, என்ன செய்யக்கூடாது என்று

தெரியாது. இப்பொழுது நீ உன்னைப்பற்றி அவ்வளவு நிச்சயமாக இருக்கமாட்டாய். இப்பொழுது தவறுகள் நடக்கக்கூடும். நீ தவறாக சென்றுவிடக்கூடும். அந்த பயம்தான் மக்களை அறிந்தவைகளுடன் கட்டிப்போட்டுள்ளது. ஒருமுறை ஒரு மனிதன் அறிந்தவைகளுடன் இணைக்கப்பட்டுவிட்டால் அவன் இறந்துவிடுகிறான்.

வாழ்க்கை ஆபத்தாக மட்டுமே வாழப்பட முடியும். அதனை வாழ வேறெந்த வழியுமில்லை. ஆபத்தின் வழியாக மட்டுமே வாழ்க்கை வளர்கிறது, வளர்ச்சியடைகிறது. ஒருவர் சாகசக்காரராக இருக்கவேண்டும். அறியாதவைகளுக்காக அறிந்தவைகளை பணயம் வைக்க தயாராக இருக்கவேண்டும். மற்றும் ஒருமுறை ஒருவர் சுதந்திரத்தின் ஆனந்தங்களை, பயமற்றத்தன்மையை சுவைத்துவிட்டால் அவர் ஒருபோதும் வருந்தமாட்டார். ஏனெனில் பிறகு ஒருவர் அதிகபட்சமாக வாழ்வது என்றால் என்ன என்பதை அறிந்துவிடுகிறார். பிறகு ஒருவர் வாழ்வின் மெழுகுவர்த்தியை ஒரே சமயத்தில் இருபக்கங்களிலும் எரிப்பதென்றால் என்னவென்று அறிந்துவிடுகிறார். தீவிரத்தன்மையுடன் கூடிய ஒருகணம் கூட நித்தியமான சாதாரண வாழ்க்கையைவிட அதிக மனநிறைவைத் தரக்கூடியதாக இருக்கும்.

வாழ்க்கை என்றால் என்னவென்று உணராத காரணத்தினாலேயே ஒருவர் மரணத்தைக் கண்டு பயப்படுகிறார். வாழ்க்கை என்றால் என்னவென்று உனக்குத் தெரிந்தால் மரணத்தைப் பற்றிய பயம் தானாகவே மறைந்துவிடுகிறது. கேள்வி முற்றிலுமாக மரணத்தைப் பற்றியதல்ல, கேள்வி வாழ்க்கையைப் பற்றியது. நமக்கு வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியாத காரணத்தால் ஒருநாள் அது முடிந்துவிடக்கூடும் என்று அஞ்சுகிறோம். நாம் வாழக்கூட இல்லை. அது என்னவென்று தெரியாமல் நீ எப்படி வாழமுடியும்? நீ வாழவோ, நேசிக்கவோ இல்லை. வெறுமனே நீ வாழ்க்கையை இழுத்துக் கொண்டிருக்கிறாய், வெறுமனே சாப்பிட்டுக்கொண்டிருக்கிறாய் மற்றும் ஒரு விஷயத்தை நீ நிச்சயமாக அறிவாய். இறப்பு ஒவ்வொருநாளும், ஒவ்வொரு கணமும் பக்கத்தில் வந்துகொண்டிருக்கிறது. பயம்

அதனால்தான். பயம் இயல்பானது, ஏனெனில் இறப்பு கதவை நிரந்தரமாக மூடிவிடும், வாழ்க்கையென்றால் என்னவென்று அறிந்துகொள்ளாமல் நீ தூக்கிச்செல்லப்படுவாய். உனக்கு ஒரு வாய்ப்பு தரப்பட்டது. ஒரு சிறந்த வாய்ப்பு, மற்றும் நீ அதனை தவறவிட்டுவிட்டாய்.

நீ, நாளை என்று தள்ளிப்போட்டுக் கொண்டேயிருக்கிறாய். நீ, நாளை நான் வாழ்வேன் என்று கூறுகிறாய். ஆனால் கூடவே பக்கத்தில் உனக்கொரு பயமிருக்கிறது. நாளை யாருக்குத்தெரியும். நாளை இறப்பு வந்துவிடலாம், பிறகென்ன செய்வது? நீ வாழக்கையை நாளை என்று தள்ளிப்போட்டாய். இனிமேல் நாளை என்பது இல்லை, பிறகென்ன செய்வது? பிறகு பயம் எழுகிறது.

இப்போது எப்படி வாழ்வது என்று உனக்குத் தெரியாது. இப்போது எப்படி வாழ்வது என்று யாரும் உனக்குச் சொல்வதில்லை. போதகர்கள், அரசியல்வாதிகள், பெற்றோர்கள், இவர்கள் அனைவரும் நாளையைப்பற்றி உனக்குச் சொல்கிறார்கள். நீ ஒரு குழந்தையாக இருக்கும் பொழுது அவர்கள் நீ வாலிபனானால் பிறகு நீ வாழ்க்கை என்றால் என்னவென்று அறிந்துகொள்வாய் என்று கூறுகிறார்கள். நீ வாலிபனாக இருக்கும்பொழுது அவர்கள் நீங்கள் முட்டாள்கள், எல்லாமே முட்டாள்தனமானது, உனக்கு வயதாகும்போது நீ புரிந்து கொள்வாய் என்று கூறுகிறார்கள். உனக்கு வயதாகும்போது அவர்கள் நீ முடிந்துவிட்டாய், இப்போது எதுவும் மிச்சமில்லை, நீ ஒரு பயன்படுத்தப்பட்ட மைக்குப்பி என்று கூறுகிறார்கள். இது ஒரு வினோதமான உலகம்.

என்னுடைய குழந்தைப்பருவத்தில் எல்லா குழந்தைகளின் வாழ்க்கையிலும் நடப்பதைப்போல நான் பெரியவர்களிடமெல்லாம் ஆயிரக்கணக்கான கேள்விகளைக் கேட்பேன். அது கிட்டத்தட்ட அவர்களுக்கு ஒரு சித்ரவதையாக மாறிவிட்டது. ஏனெனில் என்னுடைய கேள்விகள் அவர்களை தர்மசங்கடத்தில் ஆழ்த்தின. எனவே அவர்களுக்கு கிடைத்த எளிமையான வழி

என்னவென்றால் நீ சின்னப்பையன், காத்திரு என்று கூறுவதேயாகும்.

என்னுடைய தந்தையின் நண்பர்களில ஒருவர் நகரம் முழுவதும் ஒரு சாமியார் என்று அறியப்பட்டிருந்தார். அவரைப் பார்க்க எனது தந்தையுடன் நான் செல்வேன். அதிகபட்சமாக அவரை சித்ரவதை செய்வது வழக்கம். அவர் எப்பொழுதும் 'பொறு, நீ சின்னப் பையன், உன்னுடைய கேள்விகள் மிகவும் சிக்கலானவை. நீ சிறிது வளர்ந்த பிறகு உன்னால் புரிந்துகொள்ள இயலும்,' என்று கூறுவார். நான் அவரிடம் 'நீங்கள் தயவுசெய்து எந்த வருடத்தில் நான் வளருவேன் என்று எழுதிக் கொடுத்துவிடுங்கள், பிறகு நான் உங்களை இந்தக் கேள்விகளை கேட்கிறேன். ஏனெனில் இது உங்களது தந்திரம்! எப்பொழுது நான் கேட்டாலும் - நான் குறைந்தபட்சம் ஐந்து வருடங்களாக கேட்டு வருகிறேன் - நீங்கள் எப்பொழுதும் இதே விஷயத்தைச் சொல்கிறீர்கள், நீ வளர்ந்த பிறகு...... நீங்கள் இதைத் திரும்ப திரும்ப எப்போதும் எனக்குச் சொல்லிக்கொண்டிருக்கலாம்! எனவே காகிதத்தில் வருடத்தை எழுதி கையெழுத்திட்டு கொடுத்துவிடுங்கள், என்று கேட்டேன்.

அவருடைய கை நடுங்குவதை நான் பார்த்தேன். நான், 'உங்களுடைய கைகள் ஏன் நடுங்குகின்றன? நீங்கள் எதற்கு பயப்படுகிறீர்கள்? நீங்கள் எந்த வயதில் ஒரு மனிதன் புரிந்துகொள்ள முடியும் என்று தெரிந்தால் அதைக் காகிதத்தில் எழுதுங்கள். நீங்கள் இருபது வயது என்று கூறினால் நான் இருபத்தொரு வயதில் கேட்கிறேன். நான் உங்களுக்கு ஒரு வருடம் அதிகமாகத் தருகிறேன்' என்று கூறினேன். எனவே அவர் இருபத்தொரு வருடங்கள் என எழுதினார். எனவே நான், சரி. ''எனக்கு இருபத்தொரு வயதாகும்போது மட்டுமே திரும்பவருவேன்'', என்று கூறினேன். அவர் கண்டிப்பாக குறைந்தபட்சம் இப்போதைக்கு பிரச்சனை தீர்ந்தது, யாருக்குத் தெரியும்? அவனுடைய இருபத்தியிரண்டு வயதிற்குப்பிறகு எதுவும் நடக்கலாம் என்று எண்ணியிருப்பார். எனக்கு கண்டிப்பாக அப்போது பதினான்கு வயதிருக்கும்.

சரியாக எனக்கு இருபத்தியிரண்டு வயதானபோது நான் திரும்பச் சென்றேன். நான் ஒரு கூட்டத்தோடு சென்றேன். நான் என்னுடன் வர பல மக்களை சேர்த்துக்கொண்டேன். நான் அவரிடம், 'இதோ உங்களுடைய கடிதம். இப்போது பதில் கூறுங்கள்!' என்று கூறினேன், அவர், 'நீ ஒரு தொந்தரவு! நீ எதற்காக இந்த மக்களையெல்லாம் அழைத்து வந்தாய்?' என்று கேட்டார். நான், 'நீங்கள் என்னை ஏமாற்றி வருகிறீர்கள் என்பதைப் பார்ப்பதற்காக. அது மட்டுமல்ல, நீங்கள் என்னை ஏமாற்றுவது மட்டுமல்ல, இதுதான் உலகம் முழுவதும் நடந்து கொண்டிருக்கிறது. வயதான ஒவ்வொரு மனிதனும் நாளை என்று சொல்லி இளைஞர்களை ஏமாற்றிக்கொண்டிருக்கிறீர்கள். மற்றும் அந்த நாளை ஒருபோதும் வருவதில்லை. இப்போது எனக்கு இருபத்தியிரண்டு வயதாகிறது. நீங்கள் காகிதத்தில் இருபத்தியொரு வயது என்று எழுதியிருக்கிறீர்கள். ஒருவேளை போதுமான புத்திசாலித்தனம் இல்லாமல் போகக்கூடும், வளர்வதற்கு சிறிது அதிக காலம் ஆகக்கூடும் என்பதால் நான் உங்களுக்கு ஒரு வருடம் அதிகமாக அளித்துள்ளேன். ஆனால் இப்பொழுது என்னுடைய எல்லா கேள்விகளுக்கும் விடை தெரியும்வரை நான் இங்கே இருக்கப்போகிறேன். நான் போகப்போவதில்லை. அதன் சாட்சியாகவே அவர்களை அழைத்து வந்துள்ளேன்' என்று கூறினேன்.

அவர், 'உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் எனக்கெதுவும் தெரியாது. தயவுசெய்து என்னைத் திரும்பவும் கேட்காதே. என்னை மன்னித்துவிடு. நீ சொன்னது சரிதான். நான் உன்னிடம் பொய் சொல்லிக்கொண்டிருந்தேன்' என்று கூறினார்.

நான் அவரிடம், 'ஒரு குழந்தையிடம் ஏன் பொய் சொன்னீர்கள்? உங்களை நம்பி உன்னதமான வெகுளித்தனத்திலிருந்து கேள்வி கேட்கும் ஒரு குழந்தையிடம் உங்களால் எப்படி பொய்சொல்ல முடிந்தது? நீங்கள் அவனை ஏமாற்றியிருக்கிறீர்கள். உங்களுக்கு கடவுள் இருக்கிறாரா, இல்லையா என்று தெரியாது. ஆனால் நீங்கள் கடவுள் இருக்கிறார் மற்றும் நான் அதனை பிறகு புரிந்து

கொள்வீர்கள் என்று சொல்லி வந்திருக்கிறீர்கள். அந்த கணத்திலேயே புரியவில்லை என்பதை நான் அறிவேன். உங்களுக்கு கடவுளைப்பற்றி ஒன்றும் தெரியாது. நீங்கள் ஒரு கிளிப்பிள்ளை போல திரும்ப திரும்பச் சொல்லியிருக்கிறீர்கள்.' என்று கேட்டேன்.

ஆனால் இதுதான் சூழ்நிலை. ஆசிரியர்களுக்கு தெரியாது. பேராசிரியர்களுக்குத் தெரியாது, பூசாரிகளுக்குத் தெரியாது. ஆனால் தெரியாமலேயே அவர்கள் தெரிந்ததைப்போல நடந்து கொண்டேயிருக்கிறார்கள். முழு தந்திரமும் ஒரே ஒரு சூழ்ச்சியைக் கொண்டுள்ளது. அது தள்ளிப்போட்டுக் கொண்டே செல்லுதல். காலம் கனியும்போது நீயும் அறிந்துகொள்வாய் அது ஒருபோதும் கனிவதில்லை. நீ ஒருபோதும் வளர்வதில்லை மற்றும் உனக்கு போதுமான வயதாகும்போது, நீ உனது சொந்த முகத்தை காப்பாற்ற வேண்டியுள்ளது. எனவே நீ அதே விஷயங்களை உனது குழந்தைகளுக்கு சொல்லத் தொடங்குகிறாய்.

நீ உனது குழந்தைகளை நேசித்தால், நீ உனது தம்பிகளை, தங்கைகளை நேசித்தால் ஒருபோதும் அவர்களிடம் பொய் சொல்லாதே. உண்மையாக இரு. எனக்குத் தெரியாது, நான் தேடிக்கொண்டிருக்கிறேன் என்று சொல். அதனை நாளை என்று தள்ளிப்போடாதே.

நம்முடைய முழு வாழ்க்கையும் ஒரு தள்ளிப்போடுதல். அதனால் தான் இறப்பின்பயம். 'நான் இன்னமும் தெரிந்துகொள்ள வில்லையே, இறப்பு வருகிறதே.' எல்லோரும் இறப்பைக்கண்டு பயப்படுகிறார்கள். அதன் எளிமையான காரணம் என்னவெனில், நாம் இன்னமும் வாழ்வைச் சுவைக்கவில்லை என்பதே. வாழ்க்கை யென்றால் என்னவென்று அறிந்த மனிதன் ஒருபோதும் இறப்பைக் கண்டு அஞ்சமாட்டான். அவன் இறப்பை வரவேற்கிறான். இறப்பு எப்போது வந்தாலும் அவன் அதனை தழுவிக்கொள்கிறான். அவன் அதனை வரவேற்கிறான். அவன் இறப்பை ஒரு விருந்தாளியாக ஏற்றுக்கொள்கிறான். வாழ்க்கையென்றால் என்னவென்று தெரியாத ஒரு மனிதனுக்கு இறப்பு ஒரு எதிரி. மற்றும் வாழ்க்கை

யென்றால் என்னவென்று அறிந்த ஒரு மனிதனுக்கு இறப்பு வாழ்வின் உச்சகட்ட சிகரம்.

ஆனால் எல்லோரும் இறப்பைக் கண்டு பயப்படுகிறார்கள். அதுவும் தொற்றிக்கொள்ளக் கூடியது. உன்னுடைய பெற்றோர் மரணத்தைக்கண்டு பயப்படுகிறார்கள். உன்னுடைய பக்கத்து வீட்டுக்காரர்கள் மரணத்தைக்கண்டு பயப்படுகின்றனர். சுற்றிலும் எப்போதும் இருக்கும் இந்த பயத்தினால் சிறு குழந்தைகள் பாதிப்படையத் தொடங்குகிறார்கள். இறப்பைக்கண்டு எல்லோரும் பயப்படுகிறார்கள். மக்கள் அதைப்பற்றி பேசக்கூட விரும்புவதில்லை.

ஒரு மனிதன் இறக்கும்போது உடலை அலங்கரிக்க நிபுணர்கள் இருக்கிறார்கள். இறப்பின் பிறகு அந்த மனிதன் அழகாயிருக்கும் அளவிற்கு உயிருடன் இருக்கும்பொழுது இருந்திருக்கமாட்டான். அலங்கரிக்கப்பட்டு அவனுடைய கன்னங்கள் சாயம்பூசப்பட்டு கடற்கரையில் மூன்றுமாதம் விடுமுறையில் கழித்ததைப்போல காட்சியளிக்கிறான். அவ்வளவு ஆரோக்கியமாக உடற்பயிற்சி செய்துகொண்டிருப்பவனை போல, யோகாசனத்தில் சவாசனத்தில் இருப்பவனைப்போல, அவன் உண்மையிலேயே இறக்கவில்லை. அவன் இறக்கவில்லை என்பதைப்போல பிம்பம் உருவாக்கப்பட வேண்டும். சமாதியில் கூட அவன் இறக்கவில்லை, தூங்கிக் கொண்டு மட்டுமே இருக்கிறான் என்று எழுதப்படுகிறது. எல்லா மொழிகளிலும் யாராவது இறக்கும்பொழுது அவன் வெறுமனே இறந்துவிட்டான் என்று சொல்வதில்லை. நாம் சொர்க்கத்திற்கு சென்றுவிட்டார், இறைவனோடு சேர்ந்து விட்டார், கடவுள் அவரைத் தேர்ந்தெடுத்து அழைத்துக்கொண்டார், அவர் மறு உலகிற்கு சென்றுவிட்டார், இறைவனடி சேர்ந்து விட்டார் என்று கூறுகிறோம். நீ மக்களின் தெய்வீகத்தன்மை குறித்து அவர்கள் இறந்தபிறகு மட்டுமே பேசுகிறாய்.

ஒரு மனிதன் இறந்துவிட்டால் அவனுக்கெதிராக யாரும் பேசுவதில்லை, அவனுக்கெதிராக யாரும் எதையும் சொல்வதில்லை. அவன் திடீரென ஒரு துறவியாக, திடீர் என்று

சிறந்தவனாக ஆகிவிடுகிறான். அவனுடைய இடம் ஒருபோதும் நிரப்பப்படப் போவதில்லை. உலகம் எப்போதும் அவன் இல்லாததைக் குறையாகவே உணரும். அவன் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவன், மற்றும் அவன் உயிருடன் இருந்தபோது யாரும் அவனைக் கவனிக்கவேயில்லை! இவை சூழ்ச்சிகள். இறப்பை தள்ளிவைக்க சூழ்ச்சிகள். கதவுகளை மூடி இறப்பைப்பற்றி சுத்தமாக மறந்துவிட ஏற்படுத்தப்பட்ட சூழ்ச்சிகள்.

ஒரு உண்மையான மனித சமுதாயம் எந்த மூடக்கருத்துக் களையும் கொண்டிருக்காது. காமத்தைப்பற்றியும், இறப்பைப் பற்றியும் எந்த மூடக்கருத்தையும் கொண்டிருக்காது. வாழ்க்கை அதன் முழுமையில் வாழப்படவேண்டும் மற்றும் இறப்பு வாழ்க்கையின் ஒரு பகுதி. ஒருவர் முழுமையாக வாழப்பட வேண்டும் மற்றும் ஒருவர் முழுமையாக இறக்கவேண்டும்.

***நான் மக்களிடம் அகநல சிகிச்சையில் ஆழமாக வேலைசெய்யும்போது தொடர்ந்து மூன்று பயங்கள் அவர்களுக்குள் எழுகின்றன. பைத்தியமாகி விடுவோம் என்ற பயம், காமக்கிளர்ச்சியில் தன்னை இழந்து விடுவோம் என்ற பயம் மற்றும் மரணத்தைப்பற்றிய பயம். இந்த மூன்று பயங்களும் என்னுடைய வேலையில் திரும்பத் திரும்ப வருகின்றன. தயவுசெய்து இதைப்பற்றி நீங்கள் ஏதாவது சொல்லமுடியுமா?***

இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த வாழ்வியல் சார்ந்த கேள்வி.

மனித சமுதாயம் ஆயிரக்கணக்கான வருடங்களாக இந்த மூன்று பயங்களிலும் வாழ்ந்து வருகிறது. அவை தனிப்பட்டவையல்ல, அவை கூட்டுமனப்பான்மை, அவை கூட்டுமனப்பான்மையின் உணர்வற்ற தன்மையிலிருந்து வருகின்றன.

பைத்தியமாகி விடுவோம் என்ற பயம் எல்லோரிடமும் உள்ளது. எளிய காரணம் என்னவென்றால், அவர்களுடைய புத்திசாலித் தனம் வளர்வதற்கு அனுமதிக்கப்படவில்லை. புத்திசாலித்தனம் கும்பலின் அதிகாரத்திற்கு ஆபத்தானது. எனவே ஆயிரக்கணக்கான

வருடங்களாக அவர்கள் அதன் வேர்களையே வெட்டி வருகிறார்கள்.

ஜப்பானில் ஒரு குறிப்பிட்ட வகையான மரம் இருக்கிறது. அது ஒரு சிறந்த கலையாகக் கருதப்படுகிறது, ஆனால் அது வெறுமனே ஒரு கொலை. நானூறு அல்லது ஐந்நூறு வருட பழமையான மரங்கள் ஆனால் உயரம் அரைஅடி. பரம்பரை தோட்டக்காரர்கள் அவைகளைப் பார்த்துக்கொள்கிறார்கள். யுக்தி என்னவென்றால் மரங்கள் அடிப்பாகமில்லா தொட்டியில் வைக்கப்படுகின்றன. மற்றும் அவர்கள் வேர்களை வெட்டிக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் மரங்களின் வேர்களை பூமிக்குள் செல்ல அனுமதிப்ப தில்லை. நீ வேர்களை ஆழமாகச் செல்ல அனுமதிக்காதபோது மரத்திற்கு வெறுமனே வயதாகிறது. அது ஒருபோதும் மேலே வளர்வதில்லை. அந்த விதமான மரத்தைப் பார்ப்பதற்கு ஒரு விநோதமாக இருக்கிறது. அது பழமையானதாகத் தெரிகிறது. ஆனால் அதற்கு வயதாகியுள்ளது, மேலும் வயதாகிறது, வயதாகிக்கொண்டே செல்கிறது. அது ஒருபோதும் பூப்பதில்லை, அது ஒருபோதும் பழங்களைக் கொடுத்ததில்லை.

மிகச்சரியாக மனிதனின் சூழ்நிலையும் அதேதான். அவனுடைய வேர்கள் வெட்டப்பட்டுள்ளன. அவன் கிட்டத்தட்ட வேர்கள் பிடுங்கப்பட்டு வாழ்ந்துகொண்டிருக்கிறான். அவன் வேர்கள் பிடுங்கப்பட வேண்டும். அப்போதுதான் அவன் சமுதாயத்தை, பண்பாட்டை, மதத்தை, நாட்டை, பெற்றோர்களை எல்லோரையும் சார்ந்திருப்பான். அவனுக்கு வேர்களில்லை. எனவே அவன் சார்ந்திருந்தாக வேண்டும். அவன் தனக்கு வேர்களில்லை என்று உணரும் கணத்தில் அவன் தான் பைத்தியமாவதாக, கிறுக்கனாவதாக உணர்கிறான். ஆதரவு அனைத்தையும் இழந்துவிடுகிறான். அவன் ஒரு இருண்ட சாக்கடையில் விழுகிறான். ஏனெனில், அவனுடைய அறிவு அவனுக்குச் சொந்தமானதல்ல, கடன்வாங்கப்பட்டது. அவனுடைய மரியாதை கடன்வாங்கப்பட்டது. அவனுடைய இருப்பைப்பற்றி அவனுக்கே எந்த மரியாதையுமில்லை. அவனுடைய முழு

குணநலங்களும் பல்கலைக்கழகம், தேவாலயம், நாடு ஆகியவற்றில் ஏதோவொன்றிலிருந்து கடன்வாங்கப்பட்டவை. அவனிடம் தன்னுடையது என்று சொல்லும்படி ஏதுமில்லை.

ஒரு சிறந்த அரண்மனையில் நாம் எண்ணிப்பார்க்கக்கூடிய எல்லா வழிகளுடன் ஒரு மனிதன் வாழ்வதாக எண்ணிக்கொள். திடீரென ஒருநாள் அவனிடம் நீ இந்த அரண்மனை அவனுடையதல்ல, இந்த வசதிகள் எதுவும் அவனுடையதல்ல என்று உணரவைத்து, நீ அவனிடம் இவை அனைத்தும் யாருக்குரியனவோ அவர் வருகிறார், நீ வெளியே தூக்கி எறியப்படுவாய் என்று கூறுகிறாய். அவன் கிறுக்கனாகிவிடுவான். எனவே ஆழமான அகநல சிகிச்சையில் நீ இந்தப்புள்ளியை அடைவாய். அந்த மனிதன் அதைச் சந்தித்து கிறுக்கனாக அனுமதித்தாக வேண்டும்.

அகநல சிகிச்சையில் அந்த மனிதன் கிறுக்கனாகப்போகும் சூழ்நிலையை அனுமதி. ஒருமுறை அவன் கிறுக்கனானால் அவன் பயத்தை விட்டுவிடுவான். இப்போது அவனுக்கு கிறுக்குதன மென்றால் என்னவென்று தெரியும். பயம் எப்போதும் அறியாததைப் பற்றியதே. அவனைக் கிறுக்கனாக விடு. மற்றும் அவன் விரைவில் அமைதியடைந்து விடுவான். ஏனெனில் அவனுடைய பயத்திற்கு எந்த உண்மையான அடிப்படையும் இல்லை. இது சமுதாயத்தால் பிரதிபலிக்கப்பட்ட ஒரு பயம்.

பெற்றோர், ‘நீ நாங்கள் சொல்வதை கேட்கவில்லையென்றால், நீ எங்களைப் பின்பற்றவில்லையென்றால், நீ கண்டனம் செய்யப்படுவாய்.’ என்கிறார்கள். தால்மத்தில் யூதக்கடவுள், ‘நான் ஒரு பொறாமையான கடவுள், மிகவும் கோபக்கார கடவுள், நினைவில்கொள்! நான் கனிவானவனல்ல, நான் உனது மாமனல்ல’ என்று கூறுகிறார். எல்லா மதங்களும் அதைச் செய்து கொண்டிருக் கின்றன. மற்றும் நீ கூட்டத்தால் பின்பற்றப்படும் வழியைவிட்டு விலகினால், அவர்கள் நீ கிறுக்கன் என்று அறிவித்துவிடுவார்கள். எனவே எல்லோரும் கூட்டத்தைப் பிடித்து தொங்கிக்கொண்டிருக் கிறார்கள். ஒரு மதத்தின், ஒரு தேவாலயத்தின், ஒரு கட்சியின், ஒரு தேசத்தின், ஒரு இனத்தின் பகுதியாக இருக்கிறார்கள். ஒரு மனிதன்

தனியாக இருக்க பயப்படுகிறான், நீ அவனை, அவனுடைய சொந்த ஆழங்களுக்கு கொண்டு செல்லும்போது நீ அதைத்தான் செய்கிறாய். அந்த கூட்டங்களெல்லாம், அந்த தொடர்புகளெல்லாம் மறைந்துவிடுகின்றன. அவன் எப்போதும் சார்ந்திருந்த யாரும் அங்கில்லை. அவன் தனியாக விடப்படுகிறான்.

அவனுடைய சொந்த புத்திசாலித்தனம் என்று அவனிடம் ஏதுமில்லை. அவனுடைய சொந்த புத்திசாலித்தனத்தை அவன் வளர்த்துக்கொள்ளும் வரை அவன் எப்போதும் கிறுக்கனாகி விடுவோமோ என்ற பயத்தோடிருப்பான். அதுமட்டுமல்ல, எந்த கணத்தில் வேண்டுமானாலும் சமுதாயம் அவனைக் கிறுக்கனாக்க விரும்பினால், அது அவர்களுக்கு ஆதாயமாக இருந்தால் அவர்கள் அவனைக் கிறுக்கனாக்கி விடுவார்கள்.

சோவியத் யூனியனில் அது கிட்டத்தட்ட தினமும் நடந்தது. சோவியத் யூனியனை எடுத்துக்காட்டாக எடுத்துக்கொள்கிறேன். ஏனெனில், அவர்கள் அதை அறிவியல் பூர்வமாக முறையாகச் செய்தனர். அது உலகம் முழுவதும் நடக்கிறது, ஆனால் அவர்களுடைய வழிமுறைகள் மிகவும் பழமையானவை. எடுத்துக் காட்டாக இந்தியாவில் ஒரு மனிதன் ஏற்றுக்கொள்ளப்படாத ஒரு வழியில் நடந்தால் அவன் தள்ளிவைக்கப்படுவான். அவன் நகரத்திலிருக்கும் யாரிடமிருந்தும் எந்த ஆதரவையும் பெற முடியாது. அவனிடம் மக்கள் யாரும் பேசக்கூட மாட்டார்கள். அவனுடைய சொந்த குடும்பம்கூட கதவுகளை மூடிவிடும். அந்த மனிதன் கண்டிப்பாக கிறுக்கனாகிவிடுவான். நீ அவனை கிறுக்குத்தனத்தை நோக்கி தள்ளிக்கொண்டிருக்கிறாய்.

ஆனால் சோவியத் ரஷ்யாவில் அவர்கள் அதனை மேலும் முறைப்படுத்தி செய்தார்கள் மற்றும் அவர்கள் அதனை நோபல்பரிசு வாங்கியவர்களுக்கு, புத்திசாலித்தனம் கொண்டவர்களுக்கு செய்தார்கள். அந்த புத்திசாலித்தனம் எப்போதும் கட்டு பாட்டிலேயே வைக்கப்பட்டது. நாட்டின் மேற்பார்வையிலேயே இருந்தது. ஒரே ஒரு விஷயத்தில் சொன்னபடி கேட்காமல் நடந்து கொண்டாலும்கூட... - ஏனெனில் அந்த மனிதன் நோபல்பரிசு

வாங்கிவிட்டான், சோவியத் அரசாங்கம் அவன் அதைப் பெறுவதை விரும்பவில்லை. ஏனெனில் அந்தப்பரிசு முதலாளித்துவ உலகிலிருந்து வருகிறது. அது அரசாங்கத்திற்கு லஞ்சம் போல காட்சியளிக்கிறது. இப்படித்தான் அவர்கள் மக்களை வாங்கினார்கள். இந்த மக்களிடம் அறிவியலின் அனைத்து ரகசியங்களும் இருந்தன. அவர்கள் உலகம் முழுவதும் அறியப்படுவதை மற்ற விஞ்ஞானிகளுடன் தொடர்புகொள்வதை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் நோபல்பரிசு பெற்றுக் கொள்வதை அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள். ஆனால் அந்த மனிதன் வற்புறுத்தினால் பிறகு அவன் ஒரு மருத்துவமனையில் அனுமதிக்கப்படுவதே முடிவாகும்.

அவன் நான் முழு ஆரோக்கியத்தோடு இருக்கிறேன். என்னை ஏன் மருத்துவமனையில் அனுமதித்திருக்கிறீர்கள்? என்று கேட்டுக்கொண்டேயிருப்பான். அவர்கள் அவனிடம் நீங்கள் நோய்வாய்ப்பட இருப்பதாக மருத்துவர்கள் கருதுகிறார்கள். ஆரம்பகட்ட அறிகுறிகள் உள்ளன. நீங்கள் உணராமல் இருந்திருக்கலாம் என்று கூறுவர். அவர்கள் அந்த மனிதனுக்கு மருந்தேற்றிக்கொண்டேயிருப்பர். அவர்கள் செய்வது எதுவும் அவனுக்கு தெரியாது. பதினைந்து நாட்களுக்குள்ளாக அவன் பைத்தியமாகிவிடுவான். ரசாயனங்களின் வாயிலாக அவர்கள் அவனைப் பைத்தியமாக்கிவிட்டார்கள். அவன் முற்றிலும் பைத்தியமான பின் அவனை நீதிமன்றத்தில் ஒப்படைத்து, இந்த மனிதன் மனநிலை தவறியவன், அவன் தனது வேலையிலிருந்து நீக்கப்பட்டு ஒரு மனநல விடுதிக்கு அனுப்பப்படவேண்டும் எனக் கூறுவார்கள். பிறகு யாரும் அந்த மக்களுக்கு என்ன நடந்தது என்று கேள்விப்பட்டதில்லை. இதுதான் அதனை அறிவியல் பூர்வமாகச் செய்வது. ஆனால் ஒவ்வொரு சமுதாயமும் இதனைச் செய்து வருகிறது. பயம் உணர்வற்ற மனதின் ஆழமான பகுதிகளுக்கு சென்றுவிட்டது. அந்த பயத்திலிருந்து மனிதனை விடுவிப்பதே அகசிகிச்சையின் வேலையாகும். அவன் அந்த பயத்திலிருந்து விடுபட்டுவிட்டால் அவன் சமுதாயத்திலிருந்து, பண்பாட்டிலிருந்து, கடவுளிடமிருந்து, சொர்க்கம், நரகத்திலிருந்து மற்றும் எல்லா

அபத்தங்களிலிருந்தும் விடுதலையடைந்து விடுகிறான். இந்த பயத்தின் காரணமாகவே அந்த அபத்தங்கள் அனைத்தும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகின்றன, அந்த அபத்தங்களை முக்கியத்துவம் வாய்ந்தவையாக மாற்றுவதற்காக இந்த பயம் உருவாக்கப்படுகிறது.

ஒருவர் எண்ணிப்பார்ப்பதிலேயே அருவருக்கத்தக்க குற்றம் இதுதான். இது ஒவ்வொரு கணத்திலும் உலகம் முழுவதிலும் ஒவ்வொரு குழந்தையிடமும் செய்யப்பட்டு வருகிறது. அதை செய்பவர்கள் எந்த கெட்ட எண்ணமும் கொண்டவர்கள் அல்ல. குழந்தையின் நன்மைக்காக ஏதோ ஒன்றைச் செய்வதாக அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அவர்களுடைய பெற்றோர்களால் பழக்கப்படுத்தப்பட்டுள்ளனர். மற்றும் அவர்கள் அதே பழக்கப்படுத்துதலை அவர்களுடைய குழந்தைகளுக்குக் கடத்துகிறார்கள். ஆனால் அடிப்படையில் முழு மனித சமுதாயமும் பைத்தியக்காரத்தனத்தின் முனையிலேயே நிற்கிறது. ஆழ்ந்த அகநலசிகிச்சையில் திடீரென மனிதனை அந்த பயம் கவ்வுகிறது, ஏனெனில், அவன் எல்லா முட்டுகளையும், எல்லா ஆதரவுகளையும் இழந்துவிடுகிறான். கூட்டம் தொலைவில், வெகுதொலைவில் மறைந்துகொண்டிருக்கிறது. அவன் தனியாக விடப்படுகிறான். திடீரென அங்கு இருள் இருக்கிறது. பயம் இருக்கிறது. அவன் ஒருபோதும் தனியாக இருக்க பயிற்சிபெறவோ, ஒழுக்கம் பெறவோ இல்லை. மற்றும் அதுதான் தியானத்தின் செயல்பாடு. தியானமில்லாமல் எந்த அகசிகிச்சையும் முழுமை பெறுவதில்லை, ஏனெனில் தியானம் மட்டுமே அவனுக்கு அவனுடைய இழந்த வேர்களை தரமுடியும், தனிமனிதனாக இருக்கக்கூடிய வலிமையை தரமுடியும். அங்கு பயப்பட ஏதுமில்லை. ஆனால் பழக்கம் என்னவென்றால் நீ ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு அடியும் பயப்படவேண்டும் என்பதேயாகும்.

மனித சமுதாயம் பீதியில் வாழ்கிறது, மனித சமுதாயம் சொர்க்கத்தில் வாழ்ந்திருக்க முடியும். அது நரகத்தில் வாழ்கிறது. எனவே அங்கு கவலைப்பட ஏதுமில்லை, பயப்பட ஏதுமில்லை

என்பதைப் புரிந்துகொள்ள அவனுக்கு உதவிசெய். அது ஒரு உருவாக்கப்பட்ட பயம். எல்லா குழந்தைகளும் பயமின்றியே பிறக்கின்றன. அவன் எந்த பயமுமில்லாமல் பாம்புகளுடன் விளையாட முடியும், குழந்தைக்கு பயத்தைப் பற்றியோ, இறப்பைப் பற்றியோ எந்தக் கருத்தும் கிடையாது. தியானம் ஒரு மனிதனை குழந்தைப் பருவத்திற்கு திரும்ப அழைத்துவருகிறது. அவன் மறு பிறப்பெடுக்கிறான்.

எனவே பயம் ஏன் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வதற்கு அவனுக்கு உதவிசெய். அது ஒரு போலியான விஷயம். அவன்மேல் திணிக்கப்பட்டது என்பதைத் தெளிவாக்கு. எனவே கவலைப்பட தேவையில்லை. இந்தச் சூழ்நிலையில் நீ கிறுக்கனாகலாம், பயப்படாதே. முதன்முறையாக நீ கிறுக்கனாக ஆனாலும் உன்னை கண்டனம் செய்யாத ஆனால் அன்பு செலுத்தக்கூடிய, மதிப்பளிக்கக்கூடிய ஒரு சூழலில் இருக்கிறாய் என்பதை அனுபவி. குழு அந்த மனிதனுக்கு மதிப்பளிக்க வேண்டும். அந்த மனிதன் மீது அன்பு செலுத்தவேண்டும். அவனுக்கு அது தேவை, மற்றும் அவன் குளிர்ந்து விடுவான். மற்றும் அவன் பயத்திலிருந்து அதிக சுதந்திரமாக, சிறந்த வலிமையோடு, பலத்தோடு, நேர்மையோடு வெளிவருவான்.

இரண்டாவது பயம் காமக்கிளர்ச்சி குறித்தது. அதுவும் மதங்களால் உருவாக்கப்பட்டதுதான். மனிதனை அவனுடைய சொந்த சக்திகளுக்கு எதிராக திருப்பி விட்டதினாலேயே எல்லா மதங்களும் இருக்கின்றன. காமம் மனிதனின் முழுசக்தி, அவனுடைய வாழ்வின் சக்தி, மற்றும் மதம்சார்ந்த காப்பான்கள், இறைத் தூதர்கள், அவர்கள் அனைவரும் ஒரே வேலையைத்தான் செய்துவருகிறார்கள். வேறுபட்ட வார்த்தைகளால், வேறுபட்ட மொழிகளால், ஆனால் அவர்கள் வேலை ஒன்றுதான், மனிதனை அவனுக்கே எதிரியாக மாற்றுவது. அடிப்படை தந்திரம் காமம்தான் உன்னிடம் இருப்பதிலேயே சக்திவாய்ந்தது. எனவே அது கண்டனம் செய்யப்பட வேண்டும், குற்ற உணர்வு உருவாக்கப்பட வேண்டும். பிறகு தனிமனிதனுக்கு ஒரு பிரச்சனை எழுகிறது.

அவனுடைய இயல்பு புலன்சார்ந்தது, காமம்சார்ந்தது மற்றும் அவனுடைய மனமோ அதற்கு எதிரான குப்பைகளால் நிரம்பியுள்ளது. அவன் பிளவுபட்டிருக்கிறான். அவன் தன்னுடைய இயல்பை விடமுடியாது, அவனால் தன்னுடைய மனதையும் விடமுடியாது. ஏனெனில் மனதை விடுவது என்பதன் பொருள் சமுதாயத்தை, மதத்தை, தூதரை, ஏசுவை, கடவுளை எல்லா வற்றையும் விடுவது. அவன் தனிமனிதனாக மாறும்வரை பயமின்றி அவனால் தனியாக இருக்கமுடியும் வரை அதை அவனால் விடமுடியாது.

எனவே மனிதன் அவனுடைய மனதைப் பொறுத்தவரை காமத்தைக்கண்டு அஞ்சுகிறான், ஆனால் அவனுடைய உடற்கூறு மனதோடு சம்பந்தப்பட்டதல்ல. உடற்கூறு மனதிலிருந்து எந்த செய்தியையும் பெறவில்லை. அங்கு எந்த தொடர்புமில்லை. உடற்கூறு அதற்கே உரிய வழியில் செயல்படுகிறது, எனவே உடற்கூறு அவனை காமத்தை நோக்கி இழுக்கிறது மற்றும் மனம் அங்கே நின்று கொண்டு அவனைத் தொடர்ந்து கண்டனம் செய்துகொண்டேயிருக்கிறது. எனவே அவன் காமத்தில் ஈடுபடுகிறான். ஆனால் ஒரு அவசரத்தில் ஈடுபடுகிறான். அந்த அவசரத்திற்கு ஒரு மனரீதியான காரணம் உள்ளது. அவன் ஏதோ தவறைச் செய்கிறான் அதுவே அந்த அவசரம். அவன் கடவுளுக் கெதிராக, மதத்திற்கெதிராக ஏதோ ஒன்றைச் செய்கிறான். அவன் குற்ற உணர்ச்சி கொள்கிறான். ஆனால் அவனால் அதைச் செய்யாமலும் சமாளிக்க முடியாது, எனவே ஒரே சமாதானம் என்னவென்றால் செய்வது, ஆனால் வேகமாகச் செய்வது! அது கிளர்ச்சியைத் தவிர்த்துவிடும்.

இப்போது இது தாக்கத்தின் மீது தாக்கத்தை உருவாக்குகிறது. கிளர்ச்சியை உணராத ஒரு மனிதன் நிறைவு பெறாதவனாக, சலிப்பு கொண்டவனாக, கோபம் கொண்டவனாக, உணர்கிறான். ஏனெனில், அவன் ஒருசில கணங்களுக்காவது பிரபஞ்சத்தோடு ஒன்றாகும் அனுபவத்தை, முற்றிலும் ஓய்வாகயிருக்கும் அனுபவத்தை இயற்கை இலவசமாக அளிக்கும் அனுபவத்தை

பெறவில்லை. அவனுடைய அவசரத்தின் காரணமாக அவனால் கிளர்ச்சியடைய முடியவில்லை. காமம் விந்து வெளியேறுதலுக்கு இணையானதாகிவிட்டது. இயற்கையைப் பொறுத்தவரை அது உண்மையல்ல. விந்து வெளியேற்றம் ஒருபகுதி மட்டுமே. நீ அதனைக் கிளர்ச்சியில்லாமலே செய்துவிடமுடியும். நீ குழந்தைகளைப் பெற்றுவிடமுடியும், எனவே உடற்கூறு உனது கிளர்ச்சியைப் பற்றி கவலைப்படுவதில்லை. உன்னுடைய உடலியல் உன்னால் குழந்தைகளைப் பெறமுடிந்தால் திருப்தியடைந்துவிடுகிறது, மற்றும் அதற்கு விந்து வெளியேற்றம் மட்டுமே போதுமானது, கிளர்ச்சி தேவையில்லை.

கிளர்ச்சி இயற்கையின் மிகப்பெரிய பரிசு. மனிதனுக்கு அது கிடைப்பதில்லை. மனிதன் காமத்தில் மிக விரைவாக ஈடுபடுவதால் பெண்ணுக்கும் அது கிடைப்பதில்லை. பெண் தயாராக நேரம் தேவை. அவளுடைய முழு உடலும் கிளர்ச்சியடையக்கூடியது மற்றும் அவளுடைய முழு உடலும் இன்பத்தில் துடித்தாலன்றி, அவளால் கிளர்ச்சியை அனுபவிக்கமுடியாது. அதற்கு அங்கு நேரமில்லை.

எனவே ஆயிரக்கணக்கான வருடங்களாக பெண்களுக்கு முற்றிலுமாக அவர்களுடைய பிறப்புரிமை மறுக்கப்பட்டு வந்துள்ளது. அதனால்தான், அவர்கள் நச்சரிப்பவர்களாக மாறி விடுகிறார்கள். தொடர்ந்து கேள்வி கேட்பவர்களாக மாறி விடுகிறார்கள், எப்போதும் சண்டைபோட தயாராக இருக்கிறார்கள். ஒரு பெண்ணுடன் உரையாடல் சாத்தியமே இல்லை. நீ ஒரு பெண்ணுடன் வருடக்கணக்கில் வாழ்ந்தால்கூட நீங்கள் இருவரும் அமர்ந்து வாழ்வின் சிறந்த விஷயங்களைப் பற்றி பேசிக்கொண்டிருக்கும் ஒரு உரையாடல்கூட இருக்காது. இல்லை, உனக்கு நினைவிற்கு வருவதெல்லாம் சண்டைபோடுதல், பொருட்களை எறிதல், கசமுசவென்று இருத்தல்! ஆனால் அதற்கு பொறுப்பு பெண்ணல்ல. பரவசத்திற்குரிய முழு வாய்ப்பும் அவளிடமிருந்து பறிக்கப்பட்டுள்ளது. பிறகு அவள் எதிர்மறையாக மாறிவிடுகிறாள்.

இது பூசாரிகளுக்கு ஒரு வாய்ப்பை அளித்துவிடுகிறது. ஆண்களைவிட பெண்கள் இழப்பது அதிகமாக இருப்பதினாலேயே எல்லா தேவாலயங்களும், கோவில்களும் பெண்களால் நிறைந் துள்ளன. ஆணின் பரவசம் பகுதியைச் சார்ந்தது, அவனுடைய முழு உடலும் பரவசப்படுவதில்லை. பரவச அனுபவம் இல்லாவிடில் அவனுடைய முழு உடலும் பாதிப்படைவதில்லை, ஆனால் பெண்ணுடைய முழு உடலும் வேதனையடைகிறது.

ஆனால் மதங்களுக்கு இது ஒரு நல்ல வியாபாரம். மக்கள் மனரீதியாக சிரமப்படாவிட்டால் அவர்கள் தேவாலயங்களுக்கு வரமாட்டார்கள். அவர்கள் எல்லாவிதமான முட்டாள்தனமான கருத்துகளையும் கேட்கமாட்டார்கள். அவர்கள் சிரமப்படுவதால் அவர்களுக்கு ஏதோ ஒரு ஆறுதல் தேவைப்படுகிறது. அவர்களுக்கு ஏதாவதொரு நம்பிக்கை குறைந்தபட்சம் இறந்த பிறகாவது தேவைப்படுகிறது. வாழ்க்கையில் எந்த நம்பிக்கையும் இல்லை என்பதை அவர்கள் அறிவார்கள். அதுமுடிந்துவிட்டது. இது, காமம் வீண் என்பது ஆணுக்கும் பெணுக்கும் காட்டுவதற்கு மதத்திற்கு ஒரு வாய்ப்பை அளித்துவிடுகிறது. அதற்கு எந்த அர்த்தமுமில்லை, முக்கியத்துவமுமில்லை. நீ தேவையில்லாமல் உன்னுடைய சக்தியை இழந்துகொண்டிருக்கிறாய். உனது சக்தியை வீணடித்து கொண்டிருக்கிறாய். நீ எதுவும் அனுபவிக்காத காரணத்தால் அவர்களுடைய வாதம் சரியானதைப்போல தோன்றுகிறது.

கிளர்ச்சி அனுபவத்தை தடுப்பதன் மூலமாக, மதங்கள் ஆணையும், பெண்ணையும் அடிமைகளாக மாற்றிவிட்டன. இப்போது அதே அடிமைத்தனம் கும்பலின் மற்ற அதிகாரங்களுக்கு பயன்படுகிறது. புதிய பூசாரி மனோதத்துவ நிபுணர்கள்தான் இப்போது அதே விஷயத்தைத்தான் அவர்களும் பயன்படுத்து கிறார்கள். புதிய பூசாரிகள் அனைவரும் குறிப்பாக கிறிஸ்துவ பாதிரியார்கள் அனைவரும் அவர்களுடைய பல்கலையில் மனோதத்துவம் பயில்கிறார்கள் என அறிந்து நான் ஆச்சரியமடைந்தேன். மனோதத்துவமும், மனநல சிகிச்சையும் ஒரு கண்டிப்பான பகுதியாக அவர்களது கல்வியில் மாறிவிட்டன.

இப்போது பைபிளுக்கும், மனோதத்துவத்துக்கும் என்ன சம்பந்தம்? அவர்கள் மனோவியலில் பயிற்சியளிக்கப்படுகிறார்கள். ஏனெனில், பழைய பூசாரிகள் மறைந்து வருகின்றனர். அவருடைய படிப்பை மக்களிடம் இழந்து வருகின்றனர். பூசாரிகள் இன்றைய தேதிக்கு கொண்டுவரப்பட வேண்டும், எனவே அவர் பூசாரியாக மட்டுமல்ல, ஒரு மனோதத்துவவியலாளராகவும் செயல்படுவார். இயல்பாகவே மனோதத்துவவியலாளர்கள் அவர்களுடன் போட்டிபோட முடியாது. ஏனெனில் அவர்களிடம் இவர்களிடம் இல்லாத ஒன்று - மதம் - உள்ளது.

ஆனால் முழுவிஷயமும் காமத்தைக் கண்டனம் செய்வது என்ற எளிமையான ஒரு கருவியின் மூலமாகவே நிகழ்ந்துள்ளது. எனவே அகச்சிகிச்சைக் குழுக்களில் கிளர்ச்சி குறித்து யாராவது பயப்படுவதை நீ அறிந்தால் கிளர்ச்சி அவர்களை இன்னும் அமைதியானவர்களாக, அதிக புத்திசாலித்தனம் கொண்டவர்களாக, கோபம் குறைந்தவர்களாக, வன்முறையில்லாதவர்களாக, அதிக அன்பு கொண்டவர்களாக மாற்றும் என்பதை அவர்கள் புரிந்துகொள்ள உதவிசெய். கிளர்ச்சி உன்னிடமிருந்து பாதிக்கப் பட்ட உன்னுடைய வேர்களை உனக்கு திரும்பத் தரும். எனவே கவலைப்படாதே. கிளர்ச்சியைப் பற்றிய பயத்தில் கிறுக்கனாகக் கூடும் என்ற பயமும் கலந்திருக்கிறது. கிளர்ச்சியில் ஒருவர் கிறுக்கனாக மாறினால் கிறுக்கனாக மாற அவருக்கு உதவிசெய். அப்போதுதான் அதனை முழுமையாக அனுபவிக்க முடியும். ஆனால் கிளர்ச்சி உன்னுடைய மனம், உன்னுடைய இதயம், உன்னுடைய உடல் ஆகியவற்றின் ஒவ்வொரு அணுவையும் ஓய்வுகொள்ளச் செய்கிறது.

ஒரு மனிதன் கிளர்ச்சியின் அனுபவத்தைப் பெற்றிருப்பது தியானத்தைப் பொறுத்தவரை ரொம்ப முக்கியம். பிறகு நீ, அவன் தியானம் என்றால் என்னவென்று புரிந்துகொள்வதற்கு உதவிசெய்யமுடியும். அது முழுபிரபஞ்சத்துடனான கிளர்ச்சி அனுபவம். ஒரு மனிதருடன் கிளர்ச்சி கொள்வதே இவ்வளவு அழகாகவும், இவ்வளவு ஆதாயங்களோடும், இவ்வளவு

ஆரோக்கியமாகவும் இருக்கும்பொழுது..., தியானம் என்பது சிறிய புல்லிலிருந்து ஆயிரக்கணக்கான வருடங்கள் தொலைவில் இருக்கும் பிரமாண்டமான விண்மீன்களையும் கொண்ட முழுமையுடன் ஒன்றிவிடுதலே ஆகும்.

ஒருமுறை அவன் இதை அனுபவித்துவிட்டால்..., கேள்வி எப்போதும் முதல் அனுபவத்தைப் பற்றியதே. ஒருமுறை கிறுக்குத்தனமென்பது கிறுக்குத்தனமல்ல, அது ஒருவிதமான ஆனந்தத்தின் வாணவேடிக்கை, பிறகு அது அவனை மேலும் ஆரோக்கியமானவனாகவும், மேலும் முழுமையானவனாகவும், மேலும் புத்திசாலித்தனமானவனாகவும் மாற்றுகிறது என்பதை அவன் அறிந்துவிட்டால், பிறகு கிளர்ச்சியின் பயம் மறைந்து விடுகிறது. அதனோடு அவனுடைய மதத்தினுடனான, மனோவியலுடனான மற்றும் அவன் அதிகமாக விலைகொடுக்கும் எல்லா அபத்தங்களுடனான பிணைப்பும் முடிந்துவிடுகிறது.

நீ சொல்லும் மூன்றாவது பயம் மரணத்தைப்பற்றியது. முதலாவது தனியாக இருப்பதைப்பற்றியது. தனியாக பயமில்லா மலிருக்கும் முதல் அனுபவத்திலேயே மரணத்தைப்பற்றிய பயத்தின் பெரும் பகுதி அழிக்கப்பட்டுவிடும். மிச்சமிருக்கும் மரணபயம் கிளர்ச்சியின் அனுபவத்தால் அழிக்கப்பட்டுவிடும். ஏனெனில், கிளர்ச்சியில் மனிதன் மறைந்துவிடுகிறான். ஆணவம் மறைந்து விடுகிறது. அனுபவமிருக்கிறது, ஆனால் அனுபவிப்பவரில்லை.

இந்த முதல் இரண்டு அடிகளும் மூன்றாவது அடியை மிகவும் சுலபமாக தீர்க்க உதவிசெய்யும். ஒவ்வொரு அடியிலும் நீ அந்த மனிதனின் தியானத்தன்மையை ஆழப்படுத்திக் கொண்டே செல்கிறாய். தியானமில்லாத எந்த அகச்சிகிச்சையும் பெரிதாக உதவிபுரிய முடியாது. அது வெறுமனே மேலோட்டமானது, இங்குமங்கும் தொடும். விரைவில் அந்த மனிதன் மீண்டும் பழைய ஆளாகிவிடுவான். தியானமில்லாமல் ஒரு உண்மையான நிலைமாற்றம் ஒருபோதும் நிகழ்ந்ததில்லை. தியானத்தைப் பொறுத்தவரை இவை அழகான சூழ்நிலைகள்.

எனவே, முதலாவதைப் பயன்படுத்தி அவனைத் தனியாக்கு. இரண்டாவதை அவனுக்கு துணிச்சல் அளிப்பதற்கும் எல்லா எண்ணங்களையும் விட்டுவிட்டு கிறுக்காக கிளர்ச்சிக்குள் போ. என்ன நடக்குமென்று கவலைப்படாதே, உன்னை கவனித்துக் கொள்ள நாங்களிருக்கிறோம் என்று கூற உபயோகப்படுத்து. இந்த இரண்டுபடிகளுக்குப் பின் மூன்றாவது மிகவும் சுலபம். அதுதான் இருப்பதிலேயே மிகவும் சுலபமானது. அது மனிதனின் மாபெரும் பயத்தைப்போல காட்சியளிக்கிறது, அது உண்மையல்ல. உனக்கு மரணத்தைத் தெரியாது. பிறகெப்படி அதைப்பற்றி பயப்பட முடியும்? நீ எப்பொழுதும் மற்றவர்கள் இறப்பதைப் பார்த்திருக்கிறாய், நீ இறப்பதை நீ பார்த்ததில்லை. யாருக்குத் தெரியும்? நீ விதிவிலக்காகக்கூட இருக்கலாம். ஏனெனில் நீ இறக்கப்போகிறாய் என்பதற்கு எந்த நிரூபணமும் இல்லை. இறந்துவிட்டவர்கள், அவர்கள் அழியக்கூடியவர்கள்தான் என்பதற்கு நிரூபணமாக இருக்கிறார்கள். நான் பல்கலைக் கழகத்தில் என்னுடைய பேராசிரியரிடமிருந்து தர்க்கத்தை கற்றுக்கொண்டிருந்தபொழுது உலகம் முழுவதுமுள்ள எல்லா பல்கலைக் கழகத்திலும், எல்லா தர்க்கபுத்தகத்திலும் மனிதன் அழியக்கூடியவன், சாக்ரடீஸ் ஒரு மனிதன், அதனால் சாக்ரடீஸ் அழியக்கூடியவன் என்ற அரிஸ்டாடிலின் கோட்பாடு கற்றுக்கொடுக்கப்படுகிறது. அந்த கோட்பாடு எனக்கு முதன்முறையாக கற்றுக்கொடுக்கப் பட்டபோது, நான் எழுந்துநின்று பொறுங்கள், ஒருவேளை நான் விதிவிலக்காக இருக்கலாம், இப்போதுவரை நான் விதிவிலக்காக இருக்கிறேன், நாளை ஏன் இருக்கக்கூடாது? சாக்ரடீஸைப்பற்றி இந்த கோட்பாடு உண்மையென்று நான் ஒத்துக்கொள்கிறேன். ஏனெனில் அவர் இறந்துவிட்டார். ஆனால் என்னைப்பற்றி என்னசெய்வது? உங்களைப்பற்றி என்னசெய்வது? இப்போது வாழ்ந்துகொண்டிருக்கும் இந்த மனிதர்களைப்பற்றி என்ன சொல்வது? அவர்கள் இன்னும் சாகவில்லை.

இறப்பை அனுபவித்தால் மக்கள் துன்பத்தில், சிரமத்தில், எல்லா விதமான வலிகளுடனும், வயதானதாலும் இறந்திருக்கின்றனர்.

அது உனக்கு மரணத்தைப்பற்றிய பயத்தைத் தருகிறது. ஒரு ஞானமடைந்த மனிதன் எப்படி இறக்கிறான், எவ்வளவு அழகாக அவன் இறக்கிறான், எவ்வளவு ஆனந்தத்துடன் அவன் இறக்கிறான். அவனுடைய இறப்பின் கணம் எவ்வளவு ஒளி பொருந்தியதாக, மௌனமானதாக, அவனுடைய இருப்பின் ஒவ்வொரு துளியும் மகிழ்ச்சியில் பொங்கிப் பெருகுவதைப்போல இருக்கிறது என்பதை யாரும் அறியமாட்டார்கள். அவனுக்கு அருகிலிருக்க அதிர்ஷ்டம் செய்த மக்கள், வாழ்வு எப்போதும் இருந்ததை விட அதிக ஒளி பொருந்தியதாக இருக்கிறதென்று ஆச்சரியம் அடைந்து விடுவார்கள்.

ஆனால் இந்தவிதமான இறப்பு, இந்த முட்டாள்களைப் பற்றியோ, அவர்கள் என்னசொல்கிறார்கள் என்பதைப்பற்றியோ கவலைப்படாமல், கிளர்ச்சிபூர்வமாக வாழ்ந்து, பயமில்லாமல் முழுமையாக வாழ்ந்த மக்களுக்கு மட்டுமே நிகழும். அந்த முட்டாள்கள் அதைப்பற்றி ஒன்றுமே தெரியாமல் அதைப்பற்றி பேசிக்கொண்டே இருக்கிறார்கள்.

இந்த மூன்றில் மிகவும் எளிமையானது இறப்பின் பயம். நீ முதலிரண்டை தீர்த்தபிறகு இறப்பென்பது வாழ்வின் முடிவல்ல. நீ ஆழமாக தியானம் செய்தால் நீ உள்ளார்ந்த மையத்தை அடையும்பொழுது நீ திடீரென அழிவற்ற வாழ்க்கை ஓட்டத்தைக் கண்டறிவாய். பல உடல்கள் இறந்திருக்கின்றன. உன்னுடைய இருப்பிற்கு பல உருவங்கள் இருந்திருக்கின்றன. ஆனால் நீ ஒன்றேதான் என்பது தெரிய வரும். ஆனால் அது ஒரு வெறும் நம்பிக்கையாக இருக்கக்கூடாது. அது அவர்களுடைய அனுபவமாக மாற்றப்படவேண்டும்.

எனவே ஒரு விஷயத்தை நினைவில்கொள். உன்னுடைய அகச்சிகிச்சைக் குழுக்கள் சாதாரண அகச்சிகிச்சையாக இருக்கக் கூடாது. எப்படியோ வெள்ளையடித்து அவன் ஏதோவொன்றை கற்றுக்கொண்டதாக உணர்வை அளித்து, ஏதோவொன்றை அனுபவித்ததாக உணர்வளித்தால் பிறகு அவன் திரும்பவும் பழைய

ஆளாகிவிடுவான். இந்த முழு உலகத்தில் முழுமையாக மனோவியல் செய்யப்பட்ட ஒரு மனிதன் கூட இல்லை. ஆயிரக்கணக்கான மனோ தத்துவவியலாளர்கள் மனதை ஆராய்ச்சி செய்துகொண்டேயிருக்கிறார்கள். ஒன்றைக்கூட முழுமையாக நிறைவுசெய்யமுடியவில்லை. எளிமையான காரணமென்ன வென்றால், அவர்களுக்கு தியானத்தோடு எந்த சம்பந்தமுமில்லை. தியானமில்லாமல் நீ மேல்புறத்தை பூசிக்கொண்டேயிருக்கிறாய். ஆனால் உள்ளார்ந்த உண்மை அப்படியே இருக்கிறது.

என்னுடைய அகச்சிகிச்சை வல்லுநர்கள் தியானத்தை அகச்சிகிச்சையின் மையமாக அறிமுகம் செய்யவேண்டும். மற்றவை அனைத்தும் அதைச்சுற்றி வரவேண்டும். பிறகு நாம் அகச்சிகிச்சையை உண்மையிலேயே மதிப்பு வாய்ந்த ஒன்றாக மாற்றிவிட்டோம். பிறகு அது உடல்நிலை சரியில்லாத, மனதில் சமநிலையில்லாத அல்லது பயங்களுடைய, பொறாமை பிடித்த, வன்முறையுடைய மக்களுக்கு மட்டுமே உரியதல்ல. இது அகச்சிகிச்சையின் எதிர்மறைப் பகுதியாகும்.

நம்முடைய அகச்சிகிச்சைகள் ஒரு மனிதனுக்கு அவனுடைய தனித்தன்மையை திரும்பத்தருவதாக அமையவேண்டும். நாம் அவனுக்கு அவனுடைய குழந்தைப் பருவத்தையும், வெகுளித் தனத்தையும் திரும்பித்தருவோம். நாம் அவனுக்கு நேர்மையையும், வைராக்கியத்தையும் அவனுக்குத் தருவோம். எனவே அவன் ஒருபோதும் இறப்பைக்கண்டு பயப்படமாட்டான் மற்றும் ஒருமுறை மரணத்தைப்பற்றிய பயம் மறைந்துவிட்டால் மற்ற எல்லா பயங்களும் மிகச்சிறியவை, அவை அதனைப் பின்தொடரும், அவை வெறுமனே மறைந்துவிடும்.

எல்லா மதங்களின் போதனைக்களுக்கெதிராக முழுமையாக, முற்றிலுமாக வாழ்வதெப்படி என்று நாம் மக்களுக்கு கற்றுக் கொடுக்கவேண்டும். அவர்கள் துறத்தலைப் போதிக்கிறார்கள். நான் விழிப்போடு களித்திரு என்று போதிக்கிறேன்.

## கிழக்கு மற்றும் மேற்கின் உண்மைகள்

மேற்கத்திய விஞ்ஞானம் ஒரேயொரு உண்மையை மட்டுமே அறிந்திருக்கிறது, அது பொருளைப்பற்றியது, அது ஏழ்மையானது, அது வகைகளற்றது. கிழக்கின் மெய்ஞ்ஞானம் உன்னுடைய உள்ளார்ந்த சுயத்தின் உண்மையை, நீ பார்க்க முடியாத, நீ புரிந்து கொள்ள முடியாத, நீ எதுவாக இருக்கிறாயோ அதை ஏற்றுக் கொள்கிறது. உன்னை அதை நோக்கி எழுப்பமுடியும். இல்லை, நீ தூங்கிக்கொண்டிருக்கலாம். அது உனது இருப்பின் உள்ளார்ந்த குணத்திற்கு எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை. அது உனது உச்சக்கட்ட உண்மை.

உடல் இருக்கிறது. அது வெறும் தோற்றம் மட்டுமே. அது எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கும் வகையில் ஒரு தோற்றம் மட்டுமே. நீ ஒரு அழகான பெண்ணை, ஒரு அழகான ஆணைப் பார்க்கிறாய். அவர்களுக்கு ஏற்கனவே வயதாகிக் கொண்டிருக்கிறது. நீ ஒரு ரோஜாவின் அழகை அந்த கணத்தில் களிக்கிறாய். அது பூமிக்குள் திரும்பச்செல்லும் நேரம் வெகுதொலைவில் இல்லை. கிழக்கத்திய பார்வையில் இந்த விதமான உண்மையும் அதனுடைய இடத்தைப் பெற்றுள்ளது. அவர்கள் அதனை தோற்றம் என்று அழைக்கின்றனர். கணத்துக்கு கணம் மாறுவது. பிறப்பதற்கொரு நேரமிருக்கிறது, இறப்பதற்கொரு நேரமிருக்கிறது. பருவகாலங்கள் திரும்பவரும், மலர்கள் திரும்பவும் பூக்கும். பிரபஞ்சத்தின் இந்த சுற்றுவட்டத்தில் உன்னுடைய இருப்பை, உன்னுடைய மையத்தைத் தவிர அனைத்தும் மாறிக்கொண்டேயிருக்கின்றன. இந்த மாறும் உலகம் ஒரு தொடர்புள்ள உண்மை.

பிறகு கனவுகளைப் போன்ற மற்ற உண்மைகள் அங்குள்ளன. அவை உண்மையல்ல என்பதை நீ அறிவாய். ஆனாலும் நீ அவற்றைப் பார்க்கிறாய். நீ அவற்றைப் பார்க்கிறாய் என்பது மட்டுமல்ல, நீ அவற்றால் பாதிக்கப்படுகிறாய். நீ ஒரு திகில்கனவு கண்டு எழுந்தால் உன்னுடைய இதயத்துடிப்பு அதிகமாக இருக்கிறது, உன்னுடைய மூச்சு திகில்கனவால் மாறிவிடுகிறது.

உனக்கு பயத்தினால் வேர்வை கூட வரலாம். நீ திகில்கனவு அங்கில்லை என்று சொல்லமுடியாது, இல்லாவிடில் எங்கிருந்து இந்த இதயத்துடிப்பு மாறுவதும் வியர்வையும் எங்கிருந்து வருகின்றன? கிழக்கின் மெய்ஞ்ஞானம் உண்மையின் இந்த மூன்றாம் தளமான கனவையும் ஒத்துக்கொள்கிறது. நீ உன்னைச் சுற்றிலும் தொடுவானத்தைப் பார்க்கிறாய், அது எங்குமில்லை. ஆனால், அதை நீ எல்லா இடங்களிலிருந்தும் பார்க்கலாம்.

எனவே கிழக்கத்திய மெய்ஞ்ஞானத்தைப் பொறுத்த வரையில் எல்லாமும் நகர்கிறது, ஆனால் எப்போதும் நகராத ஏதோ ஒன்று இருக்கிறது. எல்லாமும் பிறந்து இறக்கிறது, ஆனாலும் பிறக்காத மற்றும் இறக்காத ஏதோவொன்று இருக்கிறது. நீ அந்த நித்திய மூலத்தில் மையம் கொண்டால் அன்றி, நீ அமைதியடைய முடியாது, நீ சாந்தமடைய முடியாது, நீ பரவசமடைய மாட்டாய், நீ நிறைவடைய மாட்டாய், நீ வீட்டிற்கு வந்து சேர்ந்து விட்டதாக உணர மாட்டாய், பிரபஞ்சத்துடன் நீ இசைவாக உணர மாட்டாய், நீ வெறும் ஒரு விபத்தாக இருப்பாய், நீ ஒருபோதும் இன்றியமையாதவனாக மாட்டாய்.

எந்த தியான யுக்தியாக இருந்தாலும் அதன் முழுமுயற்சியும் என்னவென்றால் ஒருபோதும் மாறாத எப்போதும் இருக்கும் ஒன்றின் அருகில் உன்னைக் கொண்டுவருவதே. அதற்கு காலம் கிடையாது. மாற்றம் இல்லாவிட்டால் கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எப்படியிருக்க முடியும்? கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் கொண்டுள்ள ஒரு உலகம் தொடர்புள்ள உண்மையாக மட்டுமே இருக்கமுடியும். இன்று அது இங்கிருக்கிறது, நாளை அது மறைந்துவிடுகிறது. நீ மிகவும் நம்பிக்கை வைத்த உடல் ஒருநாள் இறந்துவிடுகிறது, நீ மிகவும் நம்பிக்கை வைத்த மனம் உன்னைப் பின்தொடர்வதில்லை. அது உடலோடு இறந்துவிடுகிறது. அது உடலின் ஒரு பகுதியாக இருந்துவந்துள்ளது.

இறப்பில் உடலை விட்டு வெளியே பறப்பது புலனாகாத பறவை கண்ணுக்குத் தெரியா வானத்தினுள் பறப்பது. ஆனால் நீ உணர்வுடன் இருந்தால் நீ நடனமாடிக் கொண்டிருப்பாய்.

ஏனெனில், முதன்முறையாக சுதந்திரமென்றால் என்னவென்று நீ அறிந்துவிட்டாய். இது அரசியல் சுதந்திரமல்ல, அல்லது பொருளாதார சுதந்திரமல்ல. இது மிகவும் அடிப்படையான இருப்பின் சுதந்திரம். இந்த சுதந்திரத்திலிருந்து எது வளர்ந்தாலும் அது அழகானது, நளினமானது. உன்னுடைய கண்கள் அதேதான். பார்வை மாறிவிட்டது. உன்னுடைய அன்பு அங்கிருக்கிறது. ஆனால் அது இப்போது இச்சையாக இல்லை, அது இப்போது உரிமை கொள்ளுதலாக இல்லை, அது கருணையாக தன்னை நிலைமாற்றம் செய்து கொண்டுவிட்டது. நீ உனது ஆனந்தத்தை உனது பாடல்களில், உனது நடனங்களில், உனது கவிதைகளில் பகிர்ந்து கொள்கிறாய், ஆனால் பகிர்ந்து கொள்ளும் ஆனந்தத்திற்காக மட்டுமே பகிர்ந்து கொள்கிறாய்.

கலை எதற்காக என்பது நூற்றாண்டுகளுக்கும் மேலாக நிகழும் ஒரு விவாதம். கலை ஏதாவது ஒரு பயனளிக்க வேண்டும். இல்லாவிடில் அது பயனற்றது என்று கூறும் நடைமுறை பயனாளிகள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு கலை என்றால் என்னவென்றே தெரியாது. கலை என்பது கலைக்காக மட்டுமே இருக்கமுடியும். அது ஒரு தனிமையான குயிலின் ஆனந்தம், மூங்கிலின் மௌனம், வானத்தில் பறக்கும் பறவையின் பரவசம். வெறும் பறத்தலே, வெறும் சுதந்திரமான உணர்வே போதுமானது. அது வேறெதற்கும் சேவை செய்ய வேண்டிய தேவையில்லை.

ஆனால் இது, நீ உனது அடிப்படைத்தன்மையை அறிந்திருந்தால் மட்டுமே சாத்தியம்.

நீ கடன் வாங்கப்பட்ட, வளர்க்கப்பட்ட, கல்வி கற்பிக்கப்பட்ட மனதோடு பரிச்சயப்பட்டிருக்கிறாய். மிகவும் மேலோட்டமாக உள்ள உடல் என்பதுடன் உன்னைப் பிணைத்துக் கொண்டிருக்கிறாய். அது உனது உடலாக இருந்தாலும் கூட அது எப்படி வேலை செய்கிற தென்று உனக்குத் தெரியாது. அது எப்படி உணவை ரத்தமாக மாற்றுகிறது, அது எப்படி ஆக்ஸிஜனை உடலின் வெவ்வேறு பாகங்களுக்கு கடத்துகிறது என்று உனக்குத் தெரியாது. உடலுக்கு அதற்கே உரிய விவேகமிருக்கிறது. இயற்கை மூச்சுவிடுதலை

உன்னுடைய கைகளில் கொடுக்கவில்லை. ஏனெனில், நீ மறந்துவிடக்கூடும். நீ மிகவும் தூக்கக் கலக்கத்தில் இருக்கிறாய். இயற்கை ஆபத்தான முயற்சியை எடுக்கமுடியாது. மூச்சு விடுதலை நீ நினைவில் வைத்திருக்க வேண்டுமெனில் நீ வெகுகாலம் முன்பே மறந்திருப்பாய், நீ இங்கிருப்பாய் என நான் நினைக்கவில்லை.

ஆனால் நீ நினைவில் வைத்திருக்கிறாயோ, இல்லையோ, நீ விழித்திருக்கிறாயோ, தூங்கிக் கொண்டிருக்கிறாயோ சுவாசம் தொடர்ந்து தானாகவே நடந்துகொண்டிருக்கிறது, இதயம் தானாகவே தொடர்ந்து வேலை செய்து கொண்டிருக்கிறது. வயிறு தானாகவே ஜீரணம் செய்துகொள்கிறது. அது உன்னுடைய அறிவுரையைக் கேட்பதில்லை, அதற்கு எந்த மருத்துவப்படிப்பும் தேவையில்லை. அதற்கு எந்த ஆலோசனையும் தேவையில்லை. அதற்கு, அதற்கே உரிய உள்ளார்ந்த விவேகம் இருக்கிறது. ஆனால், அது வெறும் உனது வீடு மட்டுமே. நீ அதுவல்ல. இந்த வீடு ஒருநாள் பழையதாகிவிடும். ஒருநாள் அதன் சுவர்கள் இடிந்து விழுந்துவிடும், அதன் கதவுகள் கழன்றுவிடும். ஒருநாள் இந்த வீட்டின் ஒரு சுவடு கூட இருக்காது. எல்லாமும் மறைந்துவிடும். ஆனால் அந்த வீட்டில் வாழ்ந்து வந்த மனிதனுக்கு என்னவாயிற்று?

நீ அந்த கோட்பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும். நீ அதனை விழிப்புணர்வு, ஞானம், தன்னுணர்வு, புத்தத்தன்மை நீ அதற்கு என்ன பெயர் கொடுக்கிறாய் என்பது முக்கியமல்ல. ஆனால் சாதாரண விஷயங்களில் காலத்தை வீணடிக்காமல் இருப்பது ஒவ்வொரு மனிதனின் முதல் பொறுப்பு. முதல் விஷயங்கள் முதலில்! இந்த இருப்பு என்றால் என்னவென்று அறிவது மற்றும் இருப்பாய் இருப்பதே முதல் விஷயம். பட்டாம்பூச்சிகளுக்குப் பின்னால் ஓடாதே. தொடுவானத்தைப் பார்த்துக் கொண்டிருக் காதே, அது அங்கு இருப்பதுபோல தோற்றமளிப்பது மட்டுமே.

எனக்கு நினைவுக்கு வருகிறது, இருபத்தி மூன்று நூற்றாண்டு களுக்கு முன் பேரரசர் அலெக்ஸாண்டர் இந்தியாவுக்கு வந்தார். அவர் இந்தியாவுக்கு கிளம்பும்முன் அவரது ஆசிரியர் - ஒரு சிறந்த தத்துவவாதியான, தர்க்கத்தின் தந்தையான அரிஸ்டாட்டில் -

அவரிடம், 'நீ திரும்பி வரும் பொழுது எனக்கொன்றை பரிசாகக் கொண்டு வருகிறாயா?' என்று கேட்டார். அலெக்ஸாண்டர், 'எதுவாக இருந்தாலும் சொல்லுங்கள்!' என்று சொன்னார்.

அரிஸ்டாட்டில், 'அது அவ்வளவு சுலபமல்ல. தயவு செய்து நீ திரும்பி வரும் பொழுது ஒரு சந்நியாசியை - தன்னை அறிந்தவனை - அழைத்து வா. ஏனெனில் அப்படியென்றால் என்னவென்று எனக்குத் தெரியாது. ஒரு ஞானியாக இருப்பதென்றால் என்ன வென்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஒரு ஞானியைப் பிடித்து உன்னோடு அழைத்து வா. நான் காத்துக் கொண்டிருப்பேன்' என்றார்.

அலெக்ஸாண்டர் தான் என்ன உறுதியளிக்கிறோம் என்று தெரியாமலேயே, 'கவலைப்படாதீர்கள். அலெக்ஸாண்டர் இமயமலையை நகர்த்த விரும்பினால் அவர்கள் நகர்த்தியேயாக வேண்டும். நீங்கள் ஒரு மனிதரை மட்டுமே கேட்கிறீர்கள். வெறுமனே காத்திருங்கள். ஒரு சில மாதங்களில் நான் திரும்ப வந்துவிடுவேன்' என்றார்.

அலெக்ஸாண்டர் செய்வதற்கு நிறைய விஷயங்கள் இருந்த காரணத்தால், தன் உள்ளார்ந்த உண்மையை அறிந்த ஒருவனை பிடித்துச் செல்வதை மறந்துவிட்டார். திரும்பிச் செல்லும் கடைசிகணங்களில்தான் அவருக்கு நினைவு வந்து இந்தியாவின் எல்லைகளில் விசாரித்தார். அதைக் கேட்டவுடன் மக்கள் சிரித்தனர். அவர்கள், 'முதலில் ஒருவரை ஞானி என்று அறிந்து கொள்வதே மிகவும் சிரமம். இரண்டாவதாக நீங்கள் ஒரு ஞானியின் ஒளிவீச்சை உள்வாங்குமளவிற்கு திறந்திருந்தால் நீங்கள் அவருடைய பாதங்களில் விழுந்துவிடுவாய். நீங்கள் அவரை உன்னுடன் கூட்டிச் செல்வதைப்பற்றி சுத்தமாக மறந்துவிடுவீர்கள். நீங்கள் ஒரு ஞானியைக் கண்டுபிடிக்க மாட்டீர்கள் என்று நம்புகிறோம். வெறுமனே உங்கள் நாட்டிற்கு திரும்ப செல்லுங்கள்', என்று கூறினர்.

அலெக்ஸாண்டரால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஒரு ஞானி என்பவன் என்னமாதிரியான மனிதன்? ஏன் அவனை அதிகாரத்தால்

அழைத்துச் செல்லமுடியாது?' முடிவாக அவன் எல்லா இடங்களுக்கும் ஆட்களை அனுப்பச் சொன்னான். வீட்டை அடைந்து விட்டதாக கூறும் யாராவது இங்கிருக்கிறார்களா என்று கண்டறியச் சொன்னான். அவனுடைய வீரர்கள் திரும்பி வந்து, ஆற்றங்கரையில் அம்மணமாக இருக்கும் ஒருவர், 'நான் வேறெங்கு இருக்கமுடியும்? நான் இங்கிருக்கிறேன். நான் வேறு யாராக இருக்கமுடியும்? நான் ஒரு ஞானி! என்று கூறுகிறார்' என்றனர்.

இந்த மனிதனைச் சந்திப்பதற்கு அலெக்ஸாண்டரே செல்கிறார். அந்த வசனம் மிகவும் அழகானது. ஆனால் அது பேரரசர் அலெக்ஸாண்டருக்கு மிகவும் அதிர்ச்சியாக இருந்தது. அவர் ஒருபோதும் இப்படிப்பட்ட மனிதனைப் பார்த்ததில்லை. ஏனெனில், அலெக்ஸாண்டர் கையில் உருவப்பட்ட வாளுடன் இருந்தார். அலெக்ஸாண்டர் ஒரு வார்த்தை பேசும் முன் அந்த வயதான, ஏழ்மையான, அம்மணமான மனிதன், 'உனது வாளை உறையிலிடு. அது இங்கு தேவைப்படாது. ஒரு புத்திசாலியான மனிதன் வாளைச் சுமந்து கொண்டிருப்பதா!. நான் உன்னை அடித்துவிடுவேன். வாளை உறையிலிடு' என்றார்.

அலெக்ஸாண்டர் முதன்முறையாக அவனுக்கு கட்டளையிடும் ஒருவரை அறிந்தான். மேலும் அவன் அதைப் பின்பற்றியாக வேண்டும். தன்னையும் தாண்டி அவர் அதைக் கேட்டாக வேண்டும். அவன், அவரிடம் 'நான் ஒரு பிரார்த்தனையோடு வந்துள்ளேன். என்னுடைய நாட்டிற்கு என்னுடன் வாருங்கள். என்னுடைய ஆசிரியர் ஒரு ஞானியைப் பார்க்க விரும்புகிறார். மேற்கில் எங்களுக்கு இந்த உள்ளார்ந்த சுயம் என்றால் என்னவென்று தெரியாது.' என்று கேட்டுக்கொண்டான்.

அந்த வயதான மனிதன் சிரித்தான். 'இது வேடிக்கையாக உள்ளது. உன்னுடைய ஆசிரியருக்கு தெரியவில்லையென்றால் அவர் ஒரு ஆசிரியரே அல்ல. மற்றும் அவர் ஒரு ஞானியைப் பார்க்க விரும்பினால் அவர்தான் ஞானியிடம் வந்தாக வேண்டும். ஞானியை அவரிடம் கொண்டு செல்ல முடியாது. உனது

ஆசிரியரிடம் போய்ச் சொல். உனக்கு தாகமாக இருந்தால் கிணற்றிற்கு வா, கிணறு உன்னிடம் வரப்போவதில்லை.'

'மேலும் உன்னைப் பொறுத்தவரை, அலெக்ஸாண்டர் குறைந்தபட்சம் ஒரு மனிதனாக இருக்கவாவது கற்றுக்கொள். நீ உன்னைப் பேரரசர் அலெக்ஸாண்டர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டாய். இந்த ஆணவம் உன்னுடைய புத்தரை அறிவதிலிருந்து உன்னைத் தடுத்துக் கொண்டிருக்கிறது. நீ உனக்குள் அதைச் சுமந்து கொண்டிருக்கிறாய். ஆனால் நான் சிறப்பானவன் என்ற இந்த எண்ணம், உலகையே கைப்பற்ற நினைக்கும் ஆசை......! உலகத்தையே கைப்பற்றுவதன் மூலம் நீ என்ன சாதிக்கப் போகிறாய்? விரைவில் மரணம் எல்லாவற்றையும் பறித்துக் கொண்டுவிடும். நீ அம்மணமாக இறப்பாய். மாபூமியில் புதைக்கப்படுவாய். உன்மேல் நடப்பதைப் பற்றி யாரும் கவலைப்பட மாட்டார்கள். விலகிச் செல்லுங்கள். நான் பேரரசர் அலெக்ஸாண்டர் என்று உன்னால் மறுப்புக் கூற முடியாது. தயவுசெய்து இந்த சிறந்த என்ற கருத்தை விட்டுவிடு. மேலும் அலெக்ஸாண்டர் என்ற பெயர்கூட உன்னுடையதல்ல என்பதை நினைவில் வைத்துக்கொள்.'

அலெக்ஸாண்டர் அவரிடம், 'அது என் பெயரல்ல என்று எந்த விதத்தில் கூறுகிறீர்கள்? அதுதானே எனது பெயர்?'

'இந்த உலகத்திற்கு யாரும் பெயருடன் வருவதில்லை. எல்லாவிதமான பெயர்களும் தரப்பட்டவையே. உன்மீது ஒட்டப்பட்ட அடையாளங்களே. ஆனால் நீ அடையாளமாகவே மாறிவிடுகிறாய். நீ எந்தப் பெயருமில்லாமல், எந்தப் புகழுமில்லாமல் வந்தாய் என்பதை நீ முற்றிலும் மறந்துவிடுகிறாய். மேலும் அதே முறையில்தான் நீ இறக்கப்போகிறாய்.'

'உன்னுடைய ஆசிரியரிடம் இங்கு வந்து சிங்கத்தை சந்திக்கச் சொல். அவருக்கு உள்முகமாக நகரக்கூடிய வல்லமை இருந்தால் அப்போது மட்டுமே ஒரு ஞானியாக இருப்பதென்றால் என்னவென்று, ஞானமடைதல் என்றால் என்னவென்று அறிந்து கொள்ள முடியும். வெறுமனே ஞானமடைந்த ஒருவரைச்

சந்திப்பதால் மட்டுமே அதனை நீ புரிந்து கொள்ள முடியாது. அது வேறு யாரோ ஒருவர் குடிக்கும் நீர், உனது தாகத்தை தணிப்பது என்பதைப் போன்றது.'

அலெக்ஸாண்டர் அந்த வயதான மனிதனின் பாதங்களைத் தொட்டு கும்பிட்டு, 'உங்களைத் தொந்தரவு செய்தமைக்கு என்னை மன்னித்து விடுங்கள். ஒருவேளை நாம் ஒருவர் மற்றவரின் மொழியைப் புரிந்து கொள்ளவேயில்லை போலும், என்றான்.

இன்னும்கூட அது உண்மைதான். மேற்கத்திய மனம் மேற்கத்திய வழியில் கல்வி கற்பிக்கப்பட்ட மனம் மெய்ஞ்ஞானத்தின், கிழக்கின் மொழியை மறந்துவிட்டது. நீ மிகவும் உணர்வுடன் மிகவும் விழிப்புடன் இருந்து இதை தவறாக புரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டும். ஒரு மாறுபட்ட உலகம், ஒரு மாறுபட்ட சூழ்நிலை இருந்தது. அது இந்த உலகத்தை ஒரு அழகான தேடும் தேடுதலுடைய புனிதப்பயணமாக ஆக்கியது. இப்போது அது ஆயுதங்கள் வாங்குவதற்கும், சண்டையிடுதவதற்கும், கொல்வதற்கும், போர்களுக்குமான வெறும் ஒரு சந்தைக்கடை மட்டுமே. தியானத்தைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள். அது மிகவும் தொலைதூர எதிரொலியாகத் தோன்றுகிறது. அது எந்த விதத்திலும் நம்மோடு சம்பந்தப்பட்டதைப் போல தோன்ற வில்லை. அதனால் உன்னால் இந்தத் தொலைதூர எதிரொலியைக் கேட்க முடியாவிட்டால் நீ புரிந்து கொள்ள மாட்டாய்.

இது நடந்தது கௌதமபுத்தரின் காலத்தில். மிகவும் கல்வி கற்ற பண்டிதர் ஒருவர் கண்பார்வை அற்றவராக இருந்தார். அவர் வாதபிரதிவாதங்களில் மிகவும் திறமை வாய்ந்தவராக இருந்தார், அதனால் முழு கிராமமும் அவரால் சித்ரவதை பட்டது. ஏனெனில், எல்லோரும் அவரிடம், 'நீ குருடாயிருக்கிறாய், எனவேதான் வெளிச்சத்தை உன்னால் பார்க்க முடியவில்லை!' என்று கூற முயற்சி செய்தனர்.

ஆனால் அவன், 'அதனை பிற வழிகளில் எனக்கு காட்டுங்கள். என்னால் கேட்கமுடியும். மத்தளத்தைப் போல அதை அடியுங்கள்; என்றான். நீ ஒளியை ஒலி போல கேட்க செய்யமுடியாது. அவன்,

'என்னால் தொட முடியும். என்னைத் தொடவிடுங்கள். எனக்கு கைகள் உள்ளனவே. என்னால் நுகரமுடியும். என்னிடம் ஒளியைக் கொண்டுவாருங்கள்.' என்றான். ஆனால் இந்தப் புலன்களின் உதவியால் ஒளியை உணர முடியாதே. கண்களால் மட்டுமே பார்க்க முடியும். முழு கிராமமும் அவதி கொண்டது. 'இந்த மனிதனோடு என்ன செய்வது? இவன் புரியும் வாதம் சரியானதே. நமக்கு ஒளி என்றால் என்னவென்று தெரியும். ஆனால் அவன் அதன் இருப்பையே மறுக்கிறான். சரியான காரணங்களைக் கூறுகிறான். நம்மால் இதை நிருபிக்க முடியவில்லையே.'

கௌதமபுத்தர் தங்களுடைய கிராமத்தின் வழியாக வருவதைக் கேள்விப்பட்டனர். இவனை அவரிடம் கொண்டு செல்லலாம், இது ஒரு வாய்ப்பு எனக் கருதினர். கௌதமபுத்தரால் இவனை சமாதானப்படுத்த முடியவில்லையென்றால் பின் யாராலும் இவனுக்கு புரிய வைக்க முடியாது. எது எப்படியிருந்தாலும் அது ஆர்வமூட்டுவதாக இருக்கும். இந்த மனிதனுடன் கௌதமபுத்தர் எப்படி பேசுகிறார் என்று பார்ப்போம் என எண்ணினர்.

ஆனால் அவர்கள் எண்ணியது தவறு. கௌதமபுத்தர் அந்த மனிதனிடம் விவாதம் செய்யவில்லை. அவர் இவர்களிடம், 'வெறுமனே அவனைத் தொந்தரவு செய்யாதீர்கள். வெளிச்சம் இருக்கிறது என்று நீங்கள் அவரிடம் சொல்வது அசிங்கமாக உள்ளது. நீங்கள் போதுமான அளவு கருணை கொண்டவராக இருந்திருந்தால் ஏதாவது ஒரு மருத்துவரைக் கொண்டு அவருடைய கண்களை குணப்படுத்த முயற்சி செய்திருக்கலாம். ஒளி என்பது விவாதமல்ல. அதைப் பார்ப்பதற்கு கண்கள் தேவை. பிறகு அதைப் பற்றி எந்த சந்தேகமும் இருக்காது' என்றார்.

புத்தர் தன்னுடன் பயணம் செய்து கொண்டிருந்த தன்னுடைய சொந்த மருத்துவரைப் பார்த்து நீ இந்த மனிதனின் கண்கள் குணமாகும் வரை இந்த கிராமத்திலேயே இரு. நான் எனது குழுவுடன் தொடர்ந்து சென்று கொண்டிருக்கிறேன் என்று கூறினார்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு அந்த மருத்துவரும் அந்த மனிதனும் புத்தர் இருக்கும் இடத்திற்கு வந்தனர். இப்போது அந்த மனிதன் குருடனல்ல. அவன் நடனமாடிக் கொண்டே வந்தான். அவன் புத்தரின் கால்களில் விழுந்து, 'நீங்கள் என்னுடன் விவாதம் புரியவில்லை, என்னை அவமானப்படுத்தவில்லை. விவாதம் செய்வதற்கு பதிலாக ஒரு எளிமையான விஷயத்தைப் புரிய வைத்துவிட்டீர்கள். அது என்னவென்றால் இது ஒளியைப் பற்றிய கேள்வியல்ல. கண்களைப் பற்றிய கேள்வி. இதற்கு நான் உங்களுக்கு மிகவும் நன்றியுடையவனாக இருப்பேன்' என்றான்.

உள்ளார்ந்த சுயத்தைப் பொறுத்தவரையும் உண்மை இதுவே தான். அது உனது புத்திசாலித்தனத்தைப் பற்றிய கேள்வியல்ல. அது உனது காரணகாரியத்தைக் குறித்த கேள்வியல்ல. அது உனது தர்க்கத்தைக் குறித்த கேள்வியுமல்ல. உனது அறிவியல் அறிவைக் குறித்த கேள்வியுமல்ல. உனது வேதங்களைக் குறித்த கேள்வியல்ல. அது உனது எலும்புகளுக்கு பின்னால் மறைந்திருக்கும் உனது சொந்த இருப்பினுள் கண்களை மூடிக்கொண்டு நேரடியாக ஊடுருவுவதைப் பற்றிய கேள்வியாகும். ஒருமுறை அது அறியப்பட்டு விட்டால் பின் ஒரு ஆழ்ந்தஓய்வு பின்தொடர்கிறது. வாழ்வில் முதன் முறையாக ஒரு நடனமாக மாறுகிறது. இனிமேல் மரணம் கூட ஒரு தொந்தரவல்ல.

பழமையான கதையொன்று இருக்கிறது. ஒரு இளமையான ஆர்வமான மீன் 'நான் கடலைப் பற்றி மிகவும் கேள்விப்பட்டிருக் கிறேன். ஆனால் அதை இன்னும் பார்க்கவில்லை. அது எங்கே இருக்கிறது?' என்று கேட்டது.

ஒரு வயதான மீன் அதனிடம், 'முட்டாளாக இருக்காதே. நாம் கடலுக்குள்தான் இருக்கிறோம். மேலும் நாம்தான் கடல். நாம் அதற்குள்ளிருந்து தான் வருகிறோம், நாம் அதிலேயே மறைந்து விடுவோம். நாம் அதிலுள்ள அலைகள் போலத்தான்; என்றது.

பறவைகளைப் பற்றிய உண்மையும் அதேதான். அவை வானத்தை அறியும் என நீ நினைக்கிறாயா? அவை நாள்முழுவதும்

பறந்துகொண்டிருந்தாலும் தொலைதூரரங்களுக்கு சென்றாலும் அவை வானத்தை அறியமுடியாது. ஏனெனில் வானத்திலிருந்து பிறக்கின்றன, மேலும் அவை ஒருநாள் வானத்தினுள் மறைந்துவிடும்.

அவை குறியீட்டு வாக்கியங்கள். அவை உண்மையில் நீ பிரபஞ்சத்தின் ஒரு பகுதி என்று கூறுகின்றன. நீ பிரபஞ்சத்தில் ஒரு அலையைப் போல எழுகிறாய், மேலும் ஒருநாள் பிரபஞ்சத்தினுள் மறைந்துவிடுவாய். இந்த பிரபஞ்சம் பொருள்தன்மை கொண்டதல்ல. அது அகஉணர்வுத்தன்மைக் கொண்டது. அது உன்னுடைய உள்ளார்ந்த மையத்துடன் தொடர்புடைய ஒன்று. நீ உன்னை அறிந்துவிட்டால் நீ முழுசுதந்திரத்தையும், முழு வானத்தையும் அதன் எல்லா விண்மீன்களோடு, எல்லா மலர்களையும் எல்லா பறவைகளையும் அறிந்துவிடுகிறாய். ஒருவரை அறிவது எல்லாவற்றையும் அறிவதாகும். ஆனால் தன்னை தவற விட்டால்... உன்னிடம் அரண்மனைகளும், பேரரசுகளும், மிகச்சிறந்த செல்வங்களும் இருக்கலாம். எல்லாம் வீணே.

பறவைகளும், மீன்களும் தன்னிச்சையான உயிரினங்கள். மனிதனைத்தவிர இந்த முழு பிரபஞ்சத்திலும் யாரும் பைத்தியமாவதில்லை. வேலை செய்ய தேவையில்லாத பொழுதுகூட நீ வேலை செய்து கொண்டிருக்கிறாய். இல்லாவிடில் யாராவது உன்னைப் பார்த்து நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்று கேட்கும் பொழுது நான் வெறுமனே இருக்கிறேன் என்று சொல்லக்கூடிய தைரியம் உனக்கில்லை. மக்கள் சிரித்து, ஏதாவது செய். வெறுமனே இருப்பது உதவி செய்யாது. ஒரு வேலையைத் தேடு, வருவாய் ஈட்டு என்று ஆலோசனை வழங்குவார்கள். ஆனால் ஒரு மீன்கூட, தேவைப்படுவதை விட அதிகமாக வேலை செய்யாது.

ஹென்றிபோர்ட் இறப்பதற்கு முன் அவரிடம், 'நீங்கள் வெகு காலத்திற்கு முன்பே எல்லைகளைத் தாண்டி விட்டீர்கள். சொத்து சுகங்களை பொறுத்தவரை எல்லா வரம்புகளையும் உடைத்து

விட்டீர்கள். ஆனால் இன்னும் ஏன் நீங்கள் வேலை செய்து கொண்டேயிருக்கிறீர்கள்?' என்று கேட்டனர்.

அவர் தினமும் காலை ஏழு மணிக்கு அலுவலகம் வருவார். அலுவலக பொறுப்பாளர்கள் எட்டு மணிக்கு வருவார்கள். கணக்காளர்கள் ஒன்பது மணிக்கு வருவார்கள். மேலாளர்கள் பத்து மணிக்கு வருவார்கள். மேலாளர்கள் நான்கு மணிக்கு போய் விடுவார்கள், கணக்காளர்கள் ஐந்து மணிக்கு போய்விடுவார்கள், பொறுப்பாளர்கள் ஆறு மணிக்கு போய்விடுவார்கள், ஆனால் ஹென்றிபோர்ட் இன்னமும் வேலை செய்துகொண்டிருப்பார். அவருடைய காலத்தில் அவர்தான் முதல்பணக்காரர்.

எனவே கேள்வி கேட்டவர் அவரை கேட்ட கேள்வி சரியே. 'நீங்கள் ஏன் போய்க்கொண்டேயிருக்கிறீர்கள்? இது தேவை யில்லாத வேலை. நீங்கள் மிக அதிகமாக சம்பாதித்துள்ளீர்கள். நீங்கள் விரும்பும் எதை வேண்டுமானாலும் செய்யலாம்.'

அவருடைய பதில் ஒரு அனுபவமுள்ள மனிதனுடையது. அவர் ஞானமடைந்தவரல்ல, ஆனால் கண்டிப்பாக வாழ்க்கை அவரை அனுபவமுள்ளவராக மாற்றியுள்ளது. அவர், 'அது ஒரு பழக்கமாகி விட்டது. வேலை செய்வதை என்னால் நிறுத்த முடியவில்லை. மேன்மேலும் செல்வம் சேர்க்க நான் வேலை செய்யவில்லை. அது இனிமேலும் தேவை இல்லை என்பதை நான் அறிவேன், ஆனால் வாழ்நாள் முழுவதும் கடைபிடித்த ஒரு பழைய பழக்கத்தை விடுவது மிகவும் கடினம்' என்றார்.

மனிதனைத் தவிர மரங்களுக்கோ, பறவைகளுக்கோ, மீன்களுக்கோ எந்தப் பழக்கமுமில்லை. முழு இயற்கையும் தன்னிச்சையானது. தேவைப்படும்போது அது செயல்படுகிறது. தேவையில்லாத போது செயல்படுவதை நிறுத்திவிட்டு வெறுமனே மௌனமாகி விடுகிறது. உண்மையில் என்னைப் பொறுத்தவரை இதுதான் சரியான நிலை. எவ்வளவு தேவையோ அதை மட்டுமே செய்வது. ஒரு துளி மேலே சென்று விட்டால்கூட நீ சரியான நிலையைத் தாண்டி சென்றுவிட்டாய். நீ நிலை தவறிவிட்டாய். மேலும் நிலைதவறுதலுக்கு முடிவேயில்லை.

இது பலவிதங்களில் புரிந்து கொள்ளப்படலாம். மனிதனைத் தவிர எந்த மிருகமும் வருடம் முழுவதும் காமத்தில் ஆர்வம் கொள்வதில்லை. அதற்கொரு பருவமுண்டு. இணை தேடும் பருவம். அந்த பருவம் சென்றுவிட்டால் வருடத்தின் மிச்சமிருக்கும் காலத்தில் எதுவும் காமம் கொள்வதில்லை. நீ பறவைகளில் காமவெறியர்களையோ பிரம்மச்சரியர்களையோ காணமாட்டாய். அவைகளின் இணைதேடும் பருவத்தில்கூட அவைகள் அதை மகிழ்வோடு செய்து நீ பார்த்திருக்கமாட்டாய்.

நான் பறவைகளையும், விலங்குகளையும் கவனித்து வந்துள்ளேன். அவைகளின் காமச்செயல்பாடு அவைகளின் மீது திணிக்கப்பட்டதாக இருக்கிறது என்பதைக் கண்டு ஆச்சரியமடைந் துள்ளேன். அப்போது அவை ஆனந்தமாக காட்சியளிப்பதில்லை. ஒரு நாய் காமத்தில் ஈடுபடுவதைப் பார். அது அதனை ஏதோ கட்டாயத்தில், உடல்ரீதியான கட்டாயத்தின் பேரில் செய்கிறது. இல்லாவிடில் அதற்கு ஆர்வமில்லை. பருவம் கடந்துவிட்டால் முற்றிலும் ஆர்வமிருப்பதில்லை. அதனால்தான் விலங்குகளின் உலகத்தில் திருமணம் தோன்றவில்லை. திருமணத்தோடு நீ என்ன செய்வாய்? இணை தேடும் பருவம் முடிந்துவிட்டால் பிரிந்து விடவேண்டியதுதான்.

ஆனால் மனிதனுக்கு அது ஒரு பழக்கம். அவன் உடல்ரீதியான தேவையைக் கூட பழக்கமாக மாற்றிவிட்டான். நீ அறிந்தால் ஆச்சரியப்படுவாய். மனோவியலாளர்களையும் அவர்களுடைய கணக்கெடுப்பையும் பொறுத்தவரை ஒவ்வொரு ஆணும் குறைந்தபட்சம் நான்கு நிமிடங்களுக்கொரு முறை பெண்ணைப் பற்றி நினைக்கிறான். மேலும் ஒவ்வொரு பெண்ணும் குறைந்தபட்சம் ஏழு நிமிடங்களுக்கு ஒரு முறை ஆணைப்பற்றி நினைக்கிறாள். இந்த வித்தியாசம்தான் துன்பத்திற்கு பெரிய காரணம்.

அதனால்தான் ஒவ்வொரு இரவும் கணவன் வீட்டிற்கு வரும்போது அதுவரை சரியாக இருந்த மனைவி திடீரென வேறுமுகம் எடுக்கிறாள். அவளுக்கு தலைவலி வருகிறது.

புத்திசாலியான கணவன் வீட்டிற்கு வரும்போது ஆஸ்பிரின் மாத்திரையோடு வருகிறான். மிகவும் அபூர்வமாகவே புத்திசாலியான கணவன்மார்கள் இருக்கிறார்கள். ஏனெனில், புத்திசாலியாக நீ இருந்தால் கணவனாக மாறியிருக்க மாட்டாய். அந்த விஷயம் புத்திசாலித்தனமற்ற மக்களுக்குரியது. புத்திசாலித்தனமானவர்கள் முற்றிலும் சுதந்திரமானவர்களாக இருப்பார்கள்.

நீ மனித சமுதாயத்தை கவனித்தால், இது ஒரு பைத்தியக்கார விடுதியல்ல என்பதை நீ நம்பமாட்டாய். பெட்டியில் 'இது உங்கள் வாழ்க்கைக்கு அபாயகரமானது' என்று எழுதியிருந்தாலும் கூட ஒருவர் புகைபிடிக்கிறார். சூவிங்கத்தை பயன்படுத்தும் மக்கள் இருக்கிறார்கள். இதைவிட முட்டாள்தனமான விஷயத்தை உன்னால் யோசிக்கமுடியாது. சூவிங்கம்? மெல்லுவதற்கு கோந்து. மக்கள் எல்லாவிதமான தவறுகளையும் செய்கிறார்கள். அவர்கள் அதை கவனித்து குறிப்பெடுத்து பார்த்தால், கடவுளே நான் இவ்வளவு செயல்கள் செய்த பின்னும்கூடவா மக்கள் நான் நல்ல மனநிலையில் உள்ளவன் என்று நினைக்கிறார்கள் என்று ஆச்சரியப்பட்டுப்போவார்கள். ஆனால் எல்லோரும் ஒரு முகமூடியை போட்டுக்கொண்டு எல்லா பைத்தியக்காரத் தனங்களையும் அதன் பின்னால் மறைக்க முயற்சி செய்கிறார்கள். டைனமிக் தியானத்தின் முழு நோக்கமும் அதுதான். அது உன்னுடைய முகமூடியை விலக்கி வைத்துவிட்டு நூற்றாண்டு களாக உள்ளிருக்கும் பைத்தியக்காரத்தனங்கள் அனைத்தையும் வெளியே கொண்டு வர உனக்கு வாய்ப்பளிக்கிறது. பிடித்து வைத்துக் கொள்ளாதே. ஏனெனில் அது ஒரு ஆற்றல் மிக்க சுத்தப்படுத்துதல். மேலும் ஒருமுறை உன்னுடைய தன்னுணர்வு தூய்மையடைந்து தெளிவாகி விட்டால், உன்னுடைய புத்தத் தன்மையை நீ உணர்ந்து கொள்ளும் நாள் வெகுதொலைவில் இல்லை. மேலும் ஒரு அடியாக மட்டுமேகூட இருக்கலாம்.

மனிதனின் பிரபஞ்சத்துடனான ஒன்றிணைந்த உணர்வு முற்றிலுமாக அறுபட்டுவிட்டது. அங்கு எந்த பாலமும் இல்லை. இதுதான் அவனை எல்லாவிதமான முட்டாள்தனங்களையும்

செய்யவைக்கிறது. மூவாயிரம் வருடங்கள், ஐயாயிரம் போர்கள். நாம் ஒருவரையொருவர் கொல்வதற்காகவே இங்கிருக்கிறோம் என்பதை யாரும் நம்பமுடியாது. ஆனால் அணுஆயுதங்களை விட முக்கியமான விஷயம் வேறெதுவும் இல்லையா என்ன? மனித சமுதாயத்தின் செல்வத்தின் எழுபது சதவீகிதம் போர் முயற்சிகளுக்கே செல்கிறது. ஏழ்மையான நாடுகள் கூட - வறுமைக் கோட்டிற்கு கீழே வாழும் மக்களைக் கொண்ட - தம் மக்களுக்கு இருவேளை உணவு கூட கொடுக்க முடியாத நாடுகள் கூட அவர்களது வருமானத்தில் எழுபது சதவிகிதத்தை ஆயுதங்களைத் தயார் செய்வதில் வீணாக்குகின்றன. போரைவிட அதிக பைத்தியக்காரத்தனம் வேறெதாவது இருக்கமுடியும் என்று நீ நினைக்கிறாயா?

ஜெர்மனியைப் போன்ற ஒரு நாடு, மிகவும் பண்பாடுடைய ஒரு நாடு, பைத்தியக்காரனான அடால்ப் ஹிட்லரின் கரங்களில் விழுந்துவிட்டது. அது ஏன் நடந்தது என யாரும் எண்ணிப் பார்ப்பதில்லை. ஜெர்மனியின் மிகச்சிறந்த தத்துவவாதியான மார்ட்டின் ஹைடிகர் கூட அடால்ப் ஹிட்லரை பின்பற்றுபவரே.

அடால்ப்ஹிட்லர் ஒரு பைத்தியம். அவரை மருத்துவமனையில் தான் சேர்த்திருக்க வேண்டும். ஆனால் அவனை ஏற்றுக் கொள்ளத்தக்க ஏதோ ஒன்று ஒவ்வொரு'மனிதனுக்குள் உள்ளது. முழு ஜெர்மனியும் அதன் முழு புத்திசாலித்தனத்துடன் அந்த முழு பைத்தியக்காரமனிதனுக்கு பலியாகிவிட்டனர். நீயும் இந்த முட்டாள்தனத்தை பார்க்கமுடியும். அவன், 'யூதர்களின் காரணமாகவே ஜெர்மனி ஒரு உலக சக்தியாக மாறமுடியவில்லை. இல்லாவிடில் இந்த உலகத்தை ஆள்வது நமது பிறப்புரிமை. அது இயலாமல் போனது இந்த யூதர்களால்தான்.' என்றான்.

மக்கள் இப்படிப்பட்ட ஒரு முட்டாள்தனமான விஷயத்தை - ஜெர்மனி ஒரு உலக சக்தியாக மாறுவதை யூதர்கள்தான் தடை செய்கிறார்கள் என்ற விஷயத்தை - எப்படி ஏற்றுக் கொண்டார்கள்? யூதர்கள் ஜெர்மனிக்கு செல்வத்தையும், அவர்களுடைய புத்திசாலித்தனத்தையும், பல விஷயங்களையும் அளித்தார்கள். ஏன்

எல்லா ஜெர்மனியர்களும் இதனை ஏற்றுக் கொண்டார்கள்? அது பொறாமையின் காரணமேயாகும். யூதர்களிடம் செல்வம் இருந்தது, புத்திசாலித்தனம் இருந்தது, யூதர்கள் எல்லாவற்றிலும் உச்சத்தில் இருந்தார்கள்.

பைத்தியக்கார உலகத்தில் வெற்றிகரமாக இருப்பது மிகவும் ஆபத்தானது. ஏனெனில் எல்லோரும் - சரியோ, தவறோ - ஏதாவது ஒரு விதத்தில் கொல்வதை விரும்புவார்கள். அது ஒரு பொருட்டல்ல. முழு ஜெர்மனியும் ஒத்துக்கொண்டது அடால்ப் ஹிட்லரின் வாக்கியங்களிலுள்ள வாதத்தாலோ, காரணத்தாலோ அல்ல. ஒவ்வொரு ஜெர்மானியனும் யூதர்களின் புத்திசாலித் தனத்திலும், அவர்களுடைய வெற்றியிலும், அவர்களுடைய செல்வத்திலும், அவர்களுடைய வாழ்க்கை முறையிலும் கொண்டிருந்த பொறாமையிலேயே ஆகும். இந்த பொறாமை கொண்டு மிகவும் புத்திசாலித்தனமான ஜெர்மானியர்களைக்கூட மிருகங்களைப் போல மாற்றி, யூதர்களைக் கொல்வதற்கு அடால்ப் ஹிட்லர் ஒத்துக் கொள்ள செய்துவிட்டான்.

அடால்ப்ஹிட்லர் அப்போது உபயோகப்படுத்திய ஆயுதங்கள் இப்போது சிறு குழந்தையின் விளையாட்டுச்சாமான்கள் போன்றவை. இரண்டாம் உலகப்போரிலிருந்து தொழில்நுட்பம் மிகவும் வளர்ச்சியடைந்து விட்டது. மேலும் அது எல்லாவிதமான அரசியல்வாதிகள் கையிலும் உள்ளது. மேலும் அரசியல்வாதிகள் என்பவர்கள் மனரீதியான நோய் பிடித்தவர்கள். வெறும் அதிகாரத்திற்கான ஆசையே நோய்தான்.

ஒரு ஆரோக்கியமான மனிதன் அன்பு செலுத்த விரும்புவான். பிடித்து வைத்துக் கொள்ள, அதிகாரம் செலுத்த விரும்பமாட்டான். ஒரு ஆரோக்கியமான மனிதன் வாழ்க்கையை அனுபவிப்பான். அவன் ஓட்டு வாங்க பிச்சை கேட்டு செல்ல மாட்டான். ஆழமான தாழ்வு மனப்பான்மை கொண்ட மக்கள்தான் அவர்கள் தாங்கள் மேன்மையானவர்கள் என்று மற்றவர்களுக்கு நிரூபிப்பதற்காக அதிகாரம் பெற விரும்புவார்கள். உண்மையிலேயே மேன்மையான ஒரு மனிதன் அதிகாரத்தைப் பற்றி கவலைப்பட மாட்டான்.

அவனுடைய மேன்மையை அவன் அறிவான். அவனுடைய மேன்மையில் அவன் வாழ்கிறான். அவனுடைய பாடல்களில், அவனுடைய நடனத்தில், அவனுடைய கவிதையில், அவனுடைய ஓவியத்தில், அவனுடைய இசையில் அவனுடைய மேன்மையில் அவன் வாழ்கிறான். அரசியலுக்கு என தாழ்வு மனப்பான்மை கொண்டவர்கள் மட்டுமே மிச்சமிருக்கிறார்கள். உன்னுடைய புத்ததன்மை குறித்து நீ உணர்வோடிக்கலாம், அல்லது அதைக் குறித்த உணர்வில்லாமல் இருக்கலாம். கவலைப்படாதே. சரியான நேரம் சரியான பருவம் வரும்போது கனியும்போது நீ ஒரு புத்தராக மலருவாய். எனவே வெறுமனே காத்திரு. புத்திசாலித் தனத்துடன் காத்திரு, ஆசையில்லாமல் காத்திரு. காத்திருப்பதை அனுபவி. காத்திருத்தலை ஒரு பரவசமான மௌனமாக மாற்றிக்கொள். எது உனது பிறப்புரிமையோ, அது கண்டிப்பாக மலர்ந்தே தீரும். ஒரு பறவையை பறப்பதிலிருந்து யாரும் தடுக்கமுடியாது. ஒரு குயில் பாடுவதை யாரும் நிறுத்தமுடியாது. ஒரு ரோஜா மலர்வதை யாராலும் தடுத்து நிறுத்தமுடியாது. நீங்கள் ஞானிகளாக மலர்வதை யார் தடுக்கிறார்கள்? உன்னைத்தவிர வேறு யாரும் அதற்கு பொறுப்பல்ல.

நீ உன்னுடைய உள் உலகத்திற்கு, உன்னுடைய உள் வானத்திற்குச் சென்றால் அங்கு நீ நிரந்தரமான நித்தியத்தை அறிவாய், எந்தத் தொடக்கமும், எந்த முடிவும் அற்ற ஒரு புனிதப்பயணம், ஒரு அழிவற்றதன்மை, ஒரு இறப்பற்ற தன்மை. அது உன்னை எந்த முயற்சியுமின்றி, எளிமையாக, எந்த சுயவதையுமில்லாமல் திடீரென உன்னை நிலைமாற்றம் செய்து விடுகிறது. நீ என்னவாக இருக்க விரும்புகிறாயோ, நீ ஏற்கனவே அதுவாகவே இருக்கிறாய். வெறும் ஒரு சிறு விஷயம் தவறி இருக்கிறது, மிகவும் சிறியது. விழித்துக்கொள். நீ விழித்துக் கொண்டால் நீ ஒரு புத்தர்.

உன்னுடைய உறக்கத்திலும் நீ ஒரு புத்தராகவே இருக்கிறாய். ஆனால் நீ அதை உணர்வதேயில்லை. ஒரு மனிதன் புத்தராகும் பொழுது மற்றவர்கள் அனைவரும் புத்தர்கள்தான் என அறிகிறான்.

யாரோ ஒருவர் தூங்கிக் கொண்டிருக்கிறார், யாரோ ஒருவர் குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறார், யாரோ ஒருவர் ஒரு பெண்ணுக்கு பின்னால் ஓடிக் கொண்டிருக்கிறார், யாரோ ஒருவர் வேறொரு முட்டாள்தனத்தைச் செய்து கொண்டிருக்கிறார். ஆனால் புத்தர்கள் புத்தர்கள்தான். நீ புகை பிடித்துக் கொண்டிருந்தால்கூட நீ உன்னுடைய அடிப்படைத் தன்மையை இழந்துவிட்டாய் என்று பொருளல்ல. அது நீ உறங்கிக் கொண்டிருக்கிறாய் என்பதை மட்டுமே காட்டுகிறது. வேறொன்றுமல்ல.

விட்டுவிடு. ஓய்வு கொள். உன்னுள் நிலை கொள். மையம் திரும்பவும் கைகொள்ளப்பட்டது.

## மனரீதியானது மற்றும் உடல்ரீதியானது

***கேள்வி: நான் இறப்பைக் கண்டு அஞ்சவில்லை, ஆனால் அதை நோக்கி கொண்டு செல்லும் ஏதாவது ஒரு நோயைப்பற்றி மற்றும் வயதான காலத்தின் வலியைப் பற்றி மிகவும் பயப்படுகிறேன். ஒருவர் எவ்வாறு உடலின் வலிகுறித்த பயத்தைக் கடப்பது?***

**ஓஷோ:** மனரீதியான வலியைக் கரைக்கலாம், மேலும் மனரீதியான வலியை மட்டுமே போக்க முடியும். மற்றொரு வலி, உடல்ரீதியான வலி. வாழ்வு மற்றும் இறப்பின் ஒரு பகுதி. அதனைக் கரைக்க எந்த வழியுமில்லை. ஆனால் அது ஒருபோதும் பிரச்சனையை உருவாக்குவதில்லை. நீ எப்போதாவது கவனித்திருக் கிறாயா? நீ அதைப்பற்றி யோசிக்கும்போது மட்டுமே பிரச்சனை இருக்கிறது. வயதாவதை நினைத்துப்பார்த்தால் நீ பயப்படுகிறாய். ஆனால் வயதான மக்கள் நடுங்குவதில்லை. நோயைக் குறித்து எண்ணினால் நீ பயம் கொள்கிறாய். ஆனால் நோய் வந்துவிட்ட பிறகு அங்கு எந்த பயமும் இல்லை. எந்த பிரச்சனையுமில்லை. ஒருவர் அதனை நிதர்சனமாக எதிர்கொள்கிறார். உண்மையான பிரச்சனை எப்போதும் மனரீதியானதுதான். உடல்ரீதியான வலி வாழ்வின் ஒருபகுதி. நீ அதைப்பற்றி எண்ணத் தொடங்கினால் அது

உடல்ரீதியானது அல்ல. அது மனரீதியாக மாறிவிடுகிறது. நீ மரணத்தைப்பற்றி எண்ணும்போது அங்கு பயமிருக்கிறது. ஆனால் உண்மையில் மரணம் நிகழும்போது அங்கு எந்த பயமுமில்லை. பயம் எப்போதும் எதிர்காலம் குறித்த ஏதோ ஒன்றைப் பற்றியது. பயம் ஒருபோதும் இக்கணத்தில் நிகழ்வதில்லை.

நீ ஒரு போரில் முன்னிலைக்குச் சென்றால் நீ பயம் கொள்வாய், நீ மிகவும் பயம் கொள்வாய். நீ நடுங்குவாய், உன்னால் தூங்கமுடியாது. பல திகில் கனவுகள் உன்னை ஆட்டிப்படைக்கும். வீரர்களைக் கேட்டுப்பார். ஆனால் ஒருமுறை நீ முன்னணியில் இருந்தால், நீ அதைப்பற்றி முற்றிலுமாக மறந்துவிடுவாய். தலைக்கு மேல் தோட்டாக்கள் சீறிப்பாயும், நீ மதிய உணவை ரசித்து சாப்பிட்டுக்கொண்டிருப்பாய், அணுகுண்டுகள் வீழ்ந்து கொண்டிருக்கும் போதுகூட நீ சீட்டு விளையாடிக் கொண்டிருக்க முடியும்.

உண்மை ஒருபோதும் பிரச்சனையாக வருவதில்லை. உண்மையைப்பற்றிய கருத்துக்கள் மட்டுமே பிரச்சனையை உருவாக்குகின்றன. எனவே புரிந்து கொள்ள வேண்டிய முதல் விஷயம் என்னவென்றால், உன்னால் மனரீதியான வலியைக் கரைக்கமுடிந்தால் பிறகு எந்த பிரச்சனையும் மிச்சமிருக்காது. நீ இந்தக்கணத்தில் வாழத் தொடங்குவாய். மனரீதியான வலி கடந்தகாலத்தைப் பற்றியது, எதிர்காலத்தைப் பற்றியது, ஒருபோதும் நிகழ்காலத்தைப் பற்றியதல்ல. ஒருபோதும் மனம் நிகழ்காலத்தில் இருப்பதில்லை. நிகழ்காலத்தில் உண்மை இருக்கிறது. மனம் இல்லை. எதிர்காலம் மற்றும் கடந்தகாலத்தில் மனம் இருக்கிறது. மேலும் கடந்த காலத்திலும், எதிர்காலத்திலும் உண்மை இருப்பதில்லை. உண்மையில் மனமும், உண்மையும் ஒருவரை யொருவர் சந்திப்பதே இல்லை. அவர்கள் இன்னொருவரின் முகத்தை பார்த்ததேயில்லை. உண்மை மனதிற்கு அறியப்படாத தாகவும், மனம் உண்மையைத் தெரிந்துகொள்ளாமலும் இருக்கிறது.

ஒரு பழங்கால கதை... இருட்டு கடவுளிடம் சென்று, 'உங்களுடைய சூரியன் என்னை எப்போதும் துரத்தி

வேட்டையாடிக் கொண்டே இருக்கிறான். போதும், போதும் என்றாகி விட்டது. நான் ஓய்வெடுக்கவே முடிவதில்லை. நான் எங்கு ஓய்வெடுக்க சென்றாலும் அவன் அங்கு வந்துவிடுகிறான். நான் திரும்ப ஓட வேண்டியதாக இருக்கிறது. நான் அவனுக்கு எந்த தீங்கும் செய்யாத போது இது நியாயமல்ல. நீதியை நாடி நான் உங்களிடம் வந்துள்ளேன்' என்று கூறியது. இந்த புகார் மிகவும் சரியானதுதான். கடவுள் சூரியனை அழைத்து, 'நீ ஏன் அந்த இருளெனும் ஏதுமறியாத பெண்ணை துரத்திக் கொண்டேயிருக் கிறாய்? அவள் உனக்கு என்ன தீங்கு செய்தாள்?' என்று கேட்டார். சூரியன், 'அவளை எனக்கு யாரென்றே தெரியாது. நான் அவளைப் பார்த்ததேயில்லை, நீங்கள் அவளை என்முன் கொண்டு வாருங்கள். அதன் பிறகு மட்டுமே நான் ஏதாவது கூறமுடியும். ஏனெனில் எனக்கு அவளைத் தெரியாது. எங்களுக்குள் எந்த பழக்கமுமில்லை. யாரும் எங்களை அறிமுகப்படுத்தி வைக்கவில்லை. நாங்கள் பார்த்தது கூட இல்லை. இந்த இருள் என்ற பெண்ணைப் பற்றி நான் கேள்விப்படுவதே இதுதான் முதன்முறை!. நீங்கள் அவளை என்முன் கொண்டு வாருங்கள்' என்றது.

வழக்கு இன்னமும் நிலுவையில்தான் உள்ளது. ஏனெனில் கடவுளால் சூரியனுக்கு முன் இருளைக் கொண்டுவர முடிய வில்லை. அவர்கள் இணைந்திருக்கமுடியாது. அவர்கள் ஒருவரை யொருவர் சந்திக்கமுடியாது. இருளிருக்கும் இடத்தில் சூரியன் இருக்க முடியாது. சூரியன் இருக்கும் இடத்தில் இருள் இருக்க முடியாது.

மிகச்சரியாக அதைப் போன்றதேதான் மனதிற்கும் உண்மைக்குமான உறவு. உளவியல்தான் பிரச்சனை, உண்மை எப்போதும் ஒரு பிரச்சனையல்ல. நீ உனது உளவியல் பிரச்சனையைக் கரைத்துவிட்டால் மேலும் அவை, அவை அனைத்திற்கும் மையமான ஆணவத்தைக் கரைப்பதன்மூலம் கரைந்துவிடுகின்றன. ஒருமுறை நீ பிரபஞ்சத்திலிருந்து உன்னைத் தனியாக எண்ணிக்கொள்வதை நிறுத்திவிட்டால் பிரச்சனைகள் காலையில் சூரியன் எழும்போது பனித்துளி மறைவதைப் போல ஒரு

சுவடுகூட இல்லாமல் ஆவியாகி விடுகின்றன. அவை வெறுமனே மறைந்துவிடுகின்றன.

உடல்வலி இருக்கும். ஆனால் அது ஒருபோதும் ஒரு பிரச்சனையாக யாருக்கும் இருப்பதில்லை என்பதை நான் திரும்பவும் வலியுறுத்துகிறேன். உன்னுடைய கால் உடைந்து விட்டால், அது உடைந்துவிட்டது ஒரு பிரச்சனையல்ல. பிரச்சனை கற்பனையில் மட்டுமே இருக்கிறது. ஒருவேளை என்னுடைய கால் உடைந்துவிட்டால் பிறகு நான் என்ன செய்வது? அதை எப்படி தவிர்ப்பது? அல்லது என்னுடைய கால் உடையாதபடி எப்படி நடந்துகொள்வது? இப்போது நீ இப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றி பயப்பட தொடங்கினால் நீ வாழ முடியாது. ஏனெனில் உனது கால்கள் உடைந்துபோகலாம், உனது கழுத்து உடைந்து போகலாம், உனது கண்கள் குருடாகலாம், எது வேண்டுமானாலும் சாத்தியம். கோடிக்கணக்கான விஷயங்கள் சாத்தியம். சாத்தியமாகக்கூடிய பிரச்சனைகள் எல்லாவற்றின் மீதும் நீ ஆர்வம் கொண்டால் - அவை சாத்தியமற்றவை என்று நான் கூறவில்லை - அவை அனைத்தும் சாத்தியம்தான். எக்காலத்திலும் மனிதனுக்கு நேர்ந்துள்ள எது வேண்டுமானாலும் உனக்கு நேரலாம். புற்று நோய் வரலாம், ஆஸ்துமா வரலாம், மரணம் நிகழலாம், எல்லாமும் சாத்தியம்தான். மனிதன் தற்காப்பு அற்றவன். நீ வெளியே செல்லும்போது ஒரு கார் உன்னை மோதிவிடலாம்.

சாலையில் வெளியே செல்லாதே என்று நான் கூறவில்லை. உன்னுடைய அறையில் உள்ளபோது கூரை இடிந்து உன்மேல் விழக்கூடும். உன்னை முழுமையாக சரியாக காப்பாற்றிக் கொள்ள எந்த வழியுமில்லை. நீ உன்னுடைய படுக்கையில் படுத்துக் கொண்டேயிருக்கலாம். ஆனால் தொண்ணூறு சதவிகித மக்கள் படுக்கையில்தான் இறக்கிறார்கள் என்பதை நீ அறிவாயா? அதுதான் மிகவும் ஆபத்தான இடம். முடிந்தவரை அதனைத் தவிர்த்து விடு. படுக்கைக்கு எப்போதும் செல்லாதே. ஏனெனில் 97% சதவிகித மக்கள் அங்குதான் இறக்கிறார்கள். ஆகாய விமானத்தில் பறப்பதுகூட அவ்வளவு அபாயமில்லை. படுக்கையில் இருப்பது

அவ்வளவு அபாயம். மேலும் நினைவுகொள். இரவில் அதிக மக்கள் இறக்கிறார்கள். எனவே நடுங்கிக்கொண்டேயிரு.

பிறகு அது உன்னைப் பொறுத்த விஷயம். பிறகு உன்னால் சுத்தமாகவே வாழ முடியாது. மனரீதியான பிரச்சனைகள் மட்டுமே பிரச்சனைகள். நீ பீதியடையலாம். நீ பிளவுபடலாம். பயத்தின் காரணமாக நீ முடங்கிப்போகலாம். ஆனால் இது உண்மையோடு எந்தவகையிலும் சம்பந்தப்பட்டதல்ல. நீ ஒரு கண்பார்வையற்ற மனிதன் சாலையில் சரியாக நடப்பதைப் பார்க்கலாம். பார்வையற்றநிலை அவனைப் பொறுத்தவரை ஒரு பிரச்சனையல்ல. நீ, கைகால்கள் அற்ற பிச்சைக்காரர்கள் இன்னமும் சிரித்துக்கொண்டு, ஒருவருடன் ஒருவர் பேசிக்கொண்டு, இன்னும் பெண்களைப் பற்றி பேசிக்கொண்டு, கேலி செய்துகொண்டு, பாடிக்கொண்டு இருப்பதைக்காணலாம்.

வெறுமனே வாழ்க்கையைப் பார். வாழ்க்கை ஒருபோதும் பிரச்சனையல்ல. நமக்கு நிதர்சனத்தை அனுசரித்துக் கொள்ளக்கூடிய மிகப்பெரிய வல்லமை உள்ளது. ஆனால் நமக்கு வரும்காலத்தை எதிர்கொள்ளும் வல்லமை இல்லை. உன்னை எதிர்காலத்தில் பாதுகாத்துக் கொள்ள முயற்சி செய்தால், பிறகு நீ கொந்தளிப்பும், குழப்பமும் அடைவாய். நீ சிதறத் தொடங்குவாய். பிறகு கோடிக்கணக்கான பிரச்சனைகள் தெரியும். பிரச்சனை, பிரச்சனை, பிரச்சனையோபிரச்சனை. நீ தற்கொலைகூட செய்து கொள்ளமுடியாது. ஏனெனில் விஷம்கூட சரியான விஷமாக இல்லாமல் இருக்கலாம். யாராவது எதையாவது அதனுள் கலந்திருக்கலாம். நீ அதனைக் குடித்துவிட்டு, படுத்துக் கிடந்து காத்திருந்து இறப்பு வராமலே போய்விடக்கூடும். பிறகு எல்லாமே பிரச்சனையை உருவாக்குகின்றன.

முல்லா நசுரூதீன் தற்கொலை செய்து கொள்ள சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு ஜோதிடரை சந்தித்தார். ஜோதிடர், 'முல்லா, பொறுங்கள். நான் உங்களின் கைகளைப் பார்க்கிறேன்' என்றார். முல்லா, 'நான் இப்போது தற்கொலை செய்துகொள்ளப் போகிறேன். இப்போது எந்த எதிர்காலமுமில்லை. நான் ஏன்

இப்போது ஜோதிடத்தைப் பொருட்படுத்த வேண்டும்?, அதில் எந்த அர்த்தமுமில்லை!' என்று கூறினார். ஜோதிடர், 'பொறுங்கள்!, நீங்கள் அந்தச் செயலில் வெற்றி பெறுவீர்களா என்று பார்க்கிறேன்' என்றார்.

எதிர்காலம் மிச்சமிருக்கிறது. நீ வெற்றி பெறாமல் போகலாம். காவல்துறை உன்னை தடுத்துவிடக்கூடும். நீ துப்பாக்கியை தவறாக உபயோகப்படுத்தி விடலாம். எதிர்காலத்தைக் குறித்து, மரணத்தைக் குறித்து, தற்கொலையைக் குறித்துக்கூட நிச்சயத் தன்மையோடு இருக்க எந்த வழியுமில்லை. வாழ்க்கையைக் குறித்து என்ன செய்வது? வாழ்க்கை மிகவும் சிக்கலான விஷயம். நீ எப்படி நிச்சயத்தன்மையோடு இருக்கமுடியும்? எல்லாமும் சாத்தியம்தான். மேலும் எதுவும் நிச்சயமல்ல.

நீ பயப்பட்டால் அது வெறும் உளவியல்தான். உனது மனதை ஏதாவது செய்யவேண்டும். மேலும் நீ என்னைச் சரியாக புரிந்து கொண்டால் தியானம் என்பது மனமில்லாமல் உண்மையைக் காண ஒரு முயற்சி என்பதைத் தவிர வேறொன்றுமில்லை. ஏனெனில், உண்மையைப் பார்ப்பதற்கு அது மட்டுமே வழி. அங்கு மனமிருந்தால் அது குழப்புகிறது, அது உண்மையை கெடுக்கிறது. மனதை விட்டுவிட்டு உண்மையை நேரடியாக உடனடியாக முகத்திற்கு நேராகச் சந்தித்தால் அங்கு எந்தப் பிரச்சனையுமில்லை. உண்மை யாருக்கும் எந்த பிரச்சனையையும் உருவாக்கியதில்லை. ஒருவேளை நான் நோயில் விழுந்துவிட்டால், நான் நோயில் விழுந்துவிட்டேன், அவ்வளவுதான். அதில் கவலைப்பட என்ன இருக்கிறது? அதை ஒரு விஷயமாக ஏன் மாற்றவேண்டும்? நான் இறந்துவிட்டால், நான் இறந்துவிடுவேன்.

ஒரு பிரச்சனைக்கு இடம் தேவைப்படுகிறது. இந்தக்கணத்தில் எந்த இடமும் இல்லை. விஷயங்கள் நிகழ்கின்றன, அதைப்பற்றி நினைக்க நேரமில்லை. நீ கடந்தகாலத்தைப் பற்றி நினைக்கமுடியும், ஏனெனில், அது தொலைவாக உள்ளது. நீ எதிர்காலத்தைப் பற்றியும் நினைக்கமுடியும், ஏனெனில் அது தொலைவில் உள்ளது. உண்மையில் நாம் கவலைப்படுவதற்கு இடமளிப்பதற்காகவே

எதிர்காலமும் கடந்தகாலமும் உருவாக்கப்படுகின்றன. உன்னிடம் எவ்வளவு இடமுள்ளதோ அந்தளவு கவலை.

இப்போது இந்தியா போன்ற கலாச்சாரங்களில் உள்ள மக்கள் இன்னமும் அதிக கவலை கொள்கிறார்கள். ஏனெனில் அவர்கள் அடுத்த பிறவியைப் பற்றி நினைக்கிறார்கள். மேலும் அடுத்தபிறவி, மேலும் அதற்கடுத்த பிறவி, மேலும் அதற்கு முடிவேயில்லை. அடுத்த பிறவியில் என்ன நிகழப்போகிறது? ஒரு மனிதன் எதையாவது செய்யும்பொழுது, இப்போது இங்கே நடக்கும் விளைவுகளைப் பற்றி மட்டுமல்ல, தனது அடுத்த பிறவியில் இது என்ன கர்மாவை ஏற்படுத்தும் என்றும் எண்ணுகிறான். அப்போது அவன் இன்னமும் அதிக கவலை கொள்கிறான். இந்தியாவைப் போன்ற கலாசாரத்தில் ஒரு மனிதனுக்கு அதிக இடமுள்ளது. அந்த இடத்தை அவன் எப்படி நிரப்பப்போகிறான். அவன் அதனை மேலும் மேலும் அதிக பிரச்சனைகள் கொண்டு நிரப்புவான். எதிர்காலத்தின் வெற்றிடத்தை நிரப்புவதற்கு கவலை ஒரு வழி.

உடல் வலி ஒரு பிரச்சனையல்ல. அது அங்கே இருக்கும்போது அங்கிருக்கிறது. அது அங்கே இல்லாதபோது அங்கில்லை. ஏதாவதொன்று அங்கே இல்லாதபோது நீ அது அங்கிருக்க வேண்டுமென்று விரும்பினாலோ அல்லது ஏதாவதொன்று அங்கே இருக்கும்போது நீ அது அங்கிருக்க கூடாது என்று விரும்பினாலோ அங்கே பிரச்சனை எழுகிறது. இந்தவிதமான பிரச்சனைகள் மனரீதியானவை. இந்த வலி இங்கே ஏன் இருக்கிறது? இப்போது இது முற்றிலும் மனரீதியானது. அது ஏன் அங்கேயிருக்கிறது என்று யார் சொல்வது? பதில் சொல்வதற்கு அங்கு யாருமில்லை. விளக்கங்கள் கொடுக்கப்படலாம், அவை உண்மையிலேயே விடைகளல்ல.

விளக்கங்கள் எளிமையானவை. அது மிகவும் எளியது. வலி இருக்கிறது. ஏனெனில் இன்பம் இருக்கிறது. இன்பம் இல்லையேல் துன்பமும் இல்லை. உனக்கு முற்றிலும் வலி இல்லாத ஒரு வாழ்க்கை வேண்டுமெனில் நீ முற்றிலும் இன்பம் இல்லாத வாழ்க்கையை வாழவேண்டும். அவை இரண்டும் ஒன்றாகத்தான் வரும். அவை

உண்மையிலேயே இரண்டல்ல. அவை இரண்டும் ஒன்றுதான். ஒரே விஷயம்தான். அவை வேறுபட்டவையல்ல, அவை தனிப்பட்டவையல்ல, அவைகளைப் பிரிக்கமுடியாது.

மனிதன் பல நூற்றாண்டுகளாக அதைத்தான் செய்து கொண்டிருக்கிறான். எப்படியாவது உலகத்தின் எல்லா இன்பங்களையும் தனியாகப் பிரித்து எந்த வலிகளும் இல்லாமலிருக்க முயற்சி செய்கிறான். ஆனால் அது சாத்தியமல்ல. நீ அதிக இன்பங்களை அடைந்தால் அதிக வலியும் இருக்கும். சிகரம் உயரமாக இருக்கும் அளவிற்கு பக்கத்தில் பள்ளத்தாக்கு ஆழமாக இருக்கும். உனக்கு பள்ளத்தாக்குகள் இல்லாமல் உயரமான சிகரங்கள் கிடைக்குமா? அப்படி சிகரங்கள் இருக்கமுடியாது. அவைகள் பள்ளத்தாக்குகளுடனேயே இருக்கமுடியும். ஒரு சிகரம் சாத்தியமாகக்கூடிய சூழ்நிலை என்பதைத்தவிர பள்ளத்தாக்கு வேறொன்றுமில்லை. அவையிரண்டும் ஒன்றாக இணைக்கப் பட்டவை.

உனக்கு இன்பம் வேண்டும், ஆனால் உனக்கு வலி வேண்டாம். எடுத்துக்காட்டாக நீ ஒரு பெண்ணை விரும்புகிறாய். அல்லது ஒரு ஆணை விரும்புகிறாய். மேலும் அந்தப் பெண் உன்னுடன் இருக்கும்போது நீ மகிழ்ச்சியாக இருக்கிறாய். அவள் உடனிருக்கும் போது உண்டாகும் மகிழ்வை அனுபவிக்கும் நீ அவள் சென்றபின் நீ அடையும் வலியை ஏற்றுக்கொள்ள மறுக்கிறாய். நீ உண்மையிலேயே ஒரு பெண்ணுடன் கூட இருக்கும்போது மகிழ்வை அனுபவித்திருந்தால் எப்படி அவள் பிரிந்தால் வரும் வலியை தவிர்க்க முடியும்? நீ அவள் இல்லாமல் தவிப்பாய், அவள் இல்லாத வெறுமையை நீ உணர்வாய். வெறுமை கண்டிப்பாக வலியாக மாறும். நீ உண்மையிலேயே எந்த வலியும் இல்லாமல் இருக்க விரும்பினால் அப்போது எல்லா இன்பங்களையும் நீ தவிர்க்க வேண்டும். பிறகு பெண்ணுடன் மகிழ்ச்சியாக இருக்காதே. வெறுமனே சோகமாகவே இரு. மகிழ்ச்சியை அனுபவிக்காமல் இரு. அப்போது அவள் பிரியும்போது எந்த பிரச்சனையும் இருக்காது. யாராவது உன்னை வாழ்த்தும்போது நீ மகிழ்ச்சியாக உணர்ந்தால்

பிறகு யாராவது உன்னை அவமானப்படுத்தும்போது நீ துன்பத்தை உணர்வாய். இந்த தந்திரம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மதத்தன்மை உடைய மனிதர்கள் என்று அழைக்கப்படும் அனைவரும் உபயோகப்படுத்தும் அடிப்படை தந்திரங்களில் இதுவும் ஒன்று. நீ வலியைத் தவிர்க்க விரும்பினால் இன்பத்தை தவிர்த்துவிடு. பிறகு என்ன அர்த்தம் இருக்கிறது? நீ இறப்பைத் தவிர்க்க விரும்பினால் வாழ்வைத் தவிர்த்து விடு. பிறகு எல்லாவற்றிற்கும் என்ன பொருள் இருக்கிறது? நீ இறந்தவனாக இருப்பாய், உடல் இறப்பதற்கு முன்னால் நீ இறந்திருப்பாய். நீ முற்றிலும் பாதுகாப்பாக இருக்க விரும்பினால் உன் சமாதியில் நுழைந்து படுத்துக் கொண்டால் நீ மிகவும் பாதுகாப்பாக இருப்பாய். சுவாசிக்காதே. ஏனெனில், சுவாசித்தால் அபாயம் உள்ளது. எல்லாவிதமான நோய் தொற்றுதல்களும் ஒரு கோடி நோய்களும் உன்னைச் சுற்றி உள்ளன. நீ எப்படி சுவாசிக்க முடியும்? காற்று மாசு படிந்துள்ளது, அங்கு அபாயம் உள்ளது. சுவாசிக்காதே. நகராதே. வெறுமனே வாழாமல் போய்விடு. தற்கொலை செய்துகொள். பிறகு அங்கு எந்த வலியும் இருக்காது. நீ எதைத் தேடுகிறாய் நீ வலியே இல்லாமல் எல்லா இன்பங்களையும் பெறவேண்டும் என விரும்புகிறாயா? நீ சாத்தியமில்லாத ஒன்றைக் கேட்கிறாய். நீ இரண்டும் இரண்டும் நான்காக இருக்கக்கூடாது என்கிறாய். அது மூன்றாகவோ, ஐந்தாகவோ இருக்க வேண்டும் என்று விரும்புகிறாய். நான்காக இருக்கக்கூடாது, வேறு ஏதோ ஒன்று. நீ என்ன செய்தாலும் நீ உன்னையும் மற்றவர்களையும் ஏமாற்ற என்ன முயற்சி செய்தாலும் அவை நான்காகவே இருக்கும்.

இன்பமும் துன்பமும் இரவும் பகலும் போல, இறப்பும் பிறப்பும் போல காதலும் வெறுப்பும் போல ஒன்றாகவேயிருக்கும். இதைவிட சிறந்த ஒரு உலகத்தில் நாம் இருந்தால் இன்னமும் வளர்ந்த மொழியில் நாம் வெறுப்பு மற்றும் விருப்பு, கோபம் மற்றும் கருணை, பகல் மற்றும் இரவு என்ற வார்த்தைகளை உபயோகப்படுத்த மாட்டோம். நாம் இரண்டையும் ஒன்றாகவே சுமந்து கொண்டிருக்கும் வார்த்தைகளை உருவாக்குவோம்.

விருப்புவெறுப்பு ஒரே வார்த்தை. பகலிரவு ஒரே வார்த்தை. இரண்டல்ல. பிறப்புஇறப்பு ஒரே வார்த்தை இரண்டல்ல. இன்பம் வலி ஒரே வார்த்தை இரண்டல்ல.

மொழி மாயையை உருவாக்குகிறது. மொழியில் வலி இன்பத்திலிருந்து தனியாக உள்ளது. நீ அகராதியில் வலி என்பதை பார்த்தால் வலி என்றே பார்க்க வேண்டியிருக்கும். இன்பம் என்பது தனியாக இருக்கும். ஆனால் உண்மையில் உனது வலது கரமும் இடது கரமும் இருப்பதைப் போல வலியும் இன்பமும் இணைந்திருக்கின்றன. அவை ஒரு பறவையின் இரு சிறகுகள் போல இணைந்திருக்கின்றன. அகராதி ஒரு மாயையை உருவாக்குகிறது. மொழி என்பது மாயைகளின் மிகச்சிறந்த பிறப்பிடம். அது காதல் என்று சொல்கிறது. அது காதல் என்று சொல்லும்போது நீ வெறுப்பைப் பற்றி நினைப்பதே இல்லை. அதை முற்றிலுமாக மறந்துவிடுகிறாய். ஆனால் காதல் வெறுப்பில்லாமல் இருக்க முடியாது. அதனால்தான் நீ ஒரு மனிதனை விரும்புகிறாய், அவனை வெறுக்கவும் செய்கிறாய்.

ஒருபோதும் அதைப்பற்றி சங்கடப்படாதே. நீ காதலித்தால் நீ வெறுப்பாய். வெறுப்புப்பகுதி மேலிருக்கும் கணங்கள் இருக்கும், காதலிக்கும் பகுதி மேலிருக்கும் கணங்கள் இருக்கும். அதைப்பற்றி சங்கடப்படாதே. அது இயல்புதான். மேலும் அது மனிதத் தன்மையும் கூட. வெப்பம் போன்ற எதுவுமின்றி குளிரை நீ விரும்புகிறாய். அல்லது குளிர் போன்ற எதுமின்றி வெப்பத்தை விரும்புகிறாய். வெறுமனே இதை யோசித்துப்பார்த்தால் இது அபத்தமாக தோன்றுகிறது. ஏனெனில் வெப்பமும், குளிரும் இணைந்து இருப்பவை. மேலும் நீ அதை எந்த பெயரில் அழைக்கிறாய் என்பதைப் பொறுத்தது.

இரண்டு வாளிகளில் தண்ணீர் எடுத்துக் கொள். ஒன்றில் சூடான நீர், மற்றொன்றில் மிகவும் குளிர்ந்த நீர். இரண்டு கைகளையும் இரண்டு வாளிக்குள் விட்டு உணர்ந்துபார். அவை இரண்டு உணர்வுகளா அல்லது ஒரு மாலையின் இருமுனைகளா? ஒரு முனை குளிர், மற்றொரு முனை வெப்பம். பிறகு அவை சமன்

படட்டும். மெதுமெதுவாக அவை இரண்டும் குறைந்துகொண்டே வருவதை நீ உணர்வாய். வெப்பமும் குளிரும் அதீதமாக இருப்பதிலிருந்து குறைந்து கொண்டே வரும். ஒரு சில மணி நேரத்திற்குப்பிறகு நீ இரண்டும் ஒன்றுதான் என நீ கூறுவாய். நீ ஒரு பரிசோதனை செய்து பார். ஒரு கையை வெந்நீரில் வைத்து சூடாக்கிக் கொள், ஒரு கையை பனிக்கட்டியில் வைத்து குளிராக்கிக் கொள். பிறகு இரண்டு கைகளையும் ஒரே வாளி நீரில் வை. என்ன உணர்கிறாய் என்று பார். ஒரு கை இந்த வாளி நீரை குளிர்ச்சி என்றும், மற்றொரு கை அந்த வாளி நீரை சூடு என்றும் கூறும். அது ஒரே நீர்தான். அது சூழ்நிலையைப் பொறுத்தது. ஒரு விஷயம் உனக்கு இன்பமாகத் தெரியலாம். மேலும் அதே விஷயம் மற்றொருவருக்கு வலியாகத் தெரியலாம்.

எடுத்துக்காட்டாக நீ ஒரு பெண்ணுடன் காமத்தில் ஈடுபடுகிறாய், அது மிகவும் இன்பமாக இருப்பதாக நீ நினைக்கிறாய். ஒரு துறவியைக் கேட்டுப்பார். நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய். கிறுக்கனாகி விட்டாயா என்று திகிலடைந்து விடுவார். ஒருவேளை அதனால்தான் மக்கள் அந்தரங்கமாக காமத்தில் ஈடுபடுகிறார்கள் போலும். இல்லாவிடில் மக்கள் சிரித்து அவர்களை கேலி செய்வார்கள். காமத்தின் எல்லா செயல்களும் கேலிக்குரியதாகவும் அபத்தமாகவும் தெரியும். ஒரு பித்துபிடித்த மனநிலையில் கிட்டத்தட்ட ஒரு குடிகாரனைப்போல இருப்பாய்.

நீ கோபமாக இருக்கும்போது நீ எதையாவது செய்கிறாய். அந்தக்கணத்தில் அது உனக்கு இன்பத்தைத் தருகிறது. இல்லாவிடில் நீ அதைச் செய்யமாட்டாய். கோபம் அதிகமான சக்தியையும், அதிகமான இன்பத்தையும், சக்தியோடு இருப்பதான உணர்வையும் தருகிறது. ஆனால் கோபம் சென்றபிறகு நீ பச்சாதாபம் கொள்கிறாய், கழிவிரக்கம் கொள்கிறாய். அது நல்லதல்ல என்று உணரத் தொடங்குகிறாய். இப்போது அது வலி நிறைந்ததாக உள்ளது. அது இருந்தபோது நீ மிகவும் சக்தி வாய்ந்தவனாக உணர்ந்ததோடு, அதனால் இன்பத்தையும் உணர்ந்தாய். இப்பொழுது தளர்ந்த நிலையில், குளிர்ந்து ஒன்றிணைந்து

இருக்கும்போது திரும்பி பார்த்தால், இப்போது அது வலி நிறைந்ததாகத் தெரிகிறது. அது சார்ந்துள்ளது. ஒரே விஷயம் உனக்கு இன்பத்தை தரக்கூடியதாகவும் மற்றவருக்கு வலி தரக்கூடிய தாகவும் இருக்கலாம். அதுவும் சார்ந்திருப்பதுதான். இன்பமும் வலியும் சேர்ந்தே இருப்பது.

என்னுடைய பரிந்துரை என்னவென்றால் வலி இருக்கும் பொழுது அதனுள் ஆழமாகச் செல். அதனை தவிர்க்காதே. அது இருக்கட்டும். அதற்கு திறந்திரு. முடிந்தவரை நுண்ணர்வு கொள். வலி ஒரு அம்பு போல உனது அடிவரை ஊடுருவட்டும். துன்பப்படு. அதே போல் இன்பம் வரும்பொழுது அதையும் உன்னுடைய உள்ளார்ந்த மையத்திற்கு கொண்டு செல். அதனைக் கொண்டாடு.

வலி இருக்கும்பொழுது, வலியோடிரு. இன்பம் வரும்போது இன்பத்தோடிரு. துன்பம் மற்றும் இன்பத்தின் ஒவ்வொரு கணமும் ஒரு சிறந்த சாகசமாக ஆகும் அளவிற்கு முழுவதுமாக நுண்ணுணர்வோடிரு. உன்னால் இதைச் செய்ய முடிந்தால் வலியும் அழகானதுதான் என்பதை நீ புரிந்து கொள்வாய். அதுவும் இன்பத்தைப் போலவே அழகானது. அது உனது இருப்பிற்கு ஒரு கூர்மையைக் கொண்டு வருகிறது. உனது இருப்புக்கு விழிப்புணர்வை கொண்டு வருகிறது. சிலசமயங்களில் இன்பத்தை விட அதிகமாக கொண்டுவந்து தருகிறது. இன்பம் மந்தமாக்குகிறது. அதனால்தான், எப்போதும் இன்பத்தை அனுபவிக்கும் மக்கள் மேலோட்டமாக இருக்கிறார்கள். நீ அவர்களிடம் எந்த ஆழத்தையும் பார்க்க முடியாது. அவர்கள் எந்த வலியையும் அறிந்ததில்லை. அவர்கள் மேல்மட்டத்தில் மட்டுமே வாழ்ந்திருக்கிறார்கள். ஒரு புலனின்பத்திலிருந்து மற்றொரு புலனின்பத்திற்கு நகர்ந்து கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் மன்மதன்கள். அவர்களுக்கு வலி என்றால் என்னவென்றே தெரியாது.

வலி உன்னை மிகவும் கவனமுள்ளவனாக்குகிறது. மேலும் வலி உன்னைக் கருணையுள்ளவனாக மாற்றுகிறது. மற்றொருவரின் வலியை உன்னால் உணரமுடியும். வலி உன்னை விரிவடைந்தவனாக, பிரமாண்டமானவனாக, பெரியவனாக ஆக்குகிறது.

வலியின் காரணமாக இதயம் வளர்கிறது. அது அழகானது, அது அதற்கே உரிய அழகைக் கொண்டுள்ளது. நான் வலியைத் தேடச் சொல்லவில்லை. அது எப்போது இருக்கிறதோ அப்போது அதையும் அனுபவிக்க மட்டுமே சொல்கிறேன். அது பிரபஞ்சத்தின் ஒரு பரிசு. அதில் கண்டிப்பாக மறைக்கப்பட்ட ஒரு புதையல் இருக்கும். அதையும் அனுபவி, அதனை நிராகரிக்காதே. அதனை ஏற்றுக் கொள், அதனை வரவேற்று அதனோடு இரு. ஆரம்பத்தில் அது கஷ்டமாகவும், கடினமாகவும் இருக்கும். ஆனால் மெதுமெதுவாக நீ அதன் சுவையைக் கற்றுக் கொள்வாய்.

நீ எதையாவது புதிதாகத் தொடங்கும்போது, நீ அதன் இயல்பை கற்றுக் கொள்ளத்தான் வேண்டும். மேலும் வலியின் சுவை கசப்பானதாகத்தான் இருக்கும். ஆனால் ஒருமுறை நீ அதனைக் கற்றுக்கொண்டுவிட்டால் அது உன்னை மிகவும் கூர்மையாகவும், திறமையுடையவனாகவும் மாற்றுகிறது. அது எல்லா தூசுகளையும் அகற்றி உன்னை உலுக்கி மயக்கநிலையிலிருந்தும், உறக்கத் திலிருந்தும் வெளிக்கொணர்கிறது. வேறெதுவும் செய்யமுடியாத அளவிற்கு அது உன்னை முழுமையாக கவனம் கொள்ளவைக்கிறது. இன்பத்திலிருப்பதை விட நீ வலியில் அதிக தியானத்தன்மையில் இருக்கலாம். இன்பம் கவனத்தைச் சிதறடிப்பது. இன்பம் உன்னை மூழ்கடிக்கிறது. இன்பத்தில் நீ தன்னுணர்வை விட்டுவிடுகிறாய். இன்பம் ஒருவிதமான மறதி, வலி ஒரு நினைவுகூர்தல். உன்னால் வலியை மறந்துவிட முடியாது.

வலி ஒரு மிகுந்த படைப்பாற்றல் மிகுந்த சக்தியாக மாற முடியும். அது தியானமாக மாறமுடியும். அது விழிப்புணர்வாக மாறமுடியும்.

வலி இருக்கும்பொழுது அதனை ஒரு விழிப்புணர்வாக, தியானமாக, ஆத்மாவை கூர் படுத்த உபயோகப்படுத்திக்கொள். மேலும் இன்பம் இருக்கும்பொழுது அதனை ஒரு மூழ்குதலாக, ஒரு மறதியாக, பயன்படுத்திக் கொள்.

இரண்டுமே உனது வீட்டை அடைவதற்குரிய வழிகள்தான். ஒன்று உன்னை முழுமையாக நினைவு கொள்ளுதல், மற்றொன்று

உன்னை முழுமையாக மறந்துவிடுதல். மேலும் வலி, இன்பம் இரண்டுமே உபயோகப்படுத்தப்படலாம். ஆனால் அவைகளை உபயோகப்படுத்த நீ மிக மிக புத்திசாலித்தனமாக இருக்க வேண்டும். நான் கற்றுக்கொடுப்பது ஒரு முட்டாளின் வழியல்ல. நான் கற்றுக்கொடுப்பது புத்திசாலித்தனமான, விவேகமுள்ளவர்களுக்கான வழி. பிரபஞ்சம் உனக்கு எதைக் கொடுத்தாலும், அதை ஒரு படைப்பாற்றல் மிக்க, நீ வளர்வதற்கான சூழ்நிலையாக மாற்றுவதற்கான வழியைக் கண்டுபிடிக்க முயற்சி செய்.

## தெரிந்ததும் தெரியாததும்

***கேள்வி: சிலசமயங்களில் இறப்பைப் பற்றிய என்னுடைய பயம் உண்மையில் அறியாததைப்பற்றிய என்னுடைய பயத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதை உணர்கிறேன். ஏனெனில் நான் இறக்கும் பொழுது எனக்கு என்ன நடக்கப்போகிறது என்று எனக்குத் தெரியாது. நீங்கள் அதைப்பற்றி ஏதாவது சொல்ல முடியுமா?***

**ஓஷோ:** ஒருமுறை வாழ்க்கை என்றால் என்னவென்று நீ அறிந்து கொண்டால், இறப்பு என்றால் என்னவென்றும் நீ அறிந்து கொள்வாய். இறப்பும் அதே நிகழ்வின் ஒரு பகுதிதான். சாதாரணமாக நாம் இறப்பு இறுதியில் வருவதாக எண்ணுகிறோம். சாதாரணமாக நாம் இறப்பை வாழ்க்கைக்கு எதிரானதாக எண்ணுகிறோம். சாதாரணமாக நாம் இறப்பை எதிரியாக நினைக்கிறோம். ஆனால் இறப்பு எதிரியல்ல. மேலும் நீ இறப்பை எதிரியாக நினைத்தால் வாழ்க்கையென்றால் என்னவென்று உன்னால் அறியமுடியவில்லை என்பதையே அது காட்டுகிறது. இறப்பும் வாழ்வும் ஒரே சக்தி. ஒரே விஷயத்தின் இருமுனைகள். அலைவதும் உள்வாங்குதலும், இரவும் பகலும், கோடையும் குளிர்காலமும். மேலும் அவை தனிப்பட்டவையல்ல. அவை எதிரெதிரானவையல்ல, எதிர்மறையானவையல்ல. அவை ஒன்றொன்று பூரணமடையச் செய்பவை. இறப்பு வாழ்வின்

முடிவல்ல. உண்மையில் அது வாழ்க்கையின் நிறைவு, வாழ்க்கையின் சிகரம், வாழ்க்கையின் உச்சக்கட்டம், வாழ்க்கையின் இறுதி நிகழ்வு. மேலும் ஒருமுறை நீ உன்னுடைய வாழ்க்கையையும் அதன் செயல்பாடுகளையும் அறிந்து கொண்டால் பிறகு நீ இறப்பு என்றால் என்னவென்று புரிந்து கொள்வாய்.

இறப்பு வாழ்க்கையின் ஒரு உறுப்பு, அதன் ஒன்றிணைந்த பகுதி. மேலும் அது வாழ்க்கைக்கு மிகவும் நட்பானது. அது இல்லாமல் வாழ்க்கை இருக்கமுடியாது. இறப்பு பின்புலத்தைத் தருகிறது. இறப்பு உண்மையில் புதுப்பித்தலின் ஒரு செயல்பாடு. மற்றும் இறப்பு ஒவ்வொரு கணமும் நிகழ்கிறது. நீ சுவாசத்தை உள்ளிழுக்கும் கணத்தில், மற்றும் வெளிவிடும் கணத்தில் இரண்டும் நிகழ்கின்றன. சுவாசத்தை உள்ளிழுக்கும்போது வாழ்க்கை வருகிறது, சுவாசத்தை வெளிவிடும் கணத்தில் இறப்பு நிகழ்கிறது. அதனால்தான் ஒரு குழந்தை பிறந்தவுடன் அது செய்யும் முதல் விஷயம் சுவாசத்தை உள்ளிழுத்தல். பின் வாழ்க்கை தொடங்குகிறது. ஒரு வயதான மனிதன் செய்யும் கடைசி விஷயம் சுவாசத்தை வெளியே விடுதல்தான். பின் வாழ்க்கை சென்றுவிடுகிறது. சுவாசத்தை வெளிவிடுதல் மரணம், சுவாசத்தை உள்ளிழுத்தல் வாழ்க்கை. அவை மாட்டுவண்டியின் இருசக்கரங்கள் போன்றவை. நீ மூச்சை உள்ளிழுத்து வாழும் அளவிற்கு அதை வெளியே விட்டும் வாழ்கிறாய். மூச்சை வெளிவிடுதல் மூச்சை உள்ளிழுத்தலின் ஒரு பகுதி. மூச்சை வெளியே விட்டால் தவிர உன்னால் மூச்சை உள்ளிழுக்க முடியாது. நீ இறப்பதை நிறுத்திவிட்டால் உன்னால் வாழமுடியாது. தன்னுடைய வாழ்க்கை என்னவென்று புரிந்து கொண்ட மனிதன் இறப்பு நிகழ அனுமதிக்கிறான். அவன் அதனை வரவேற்கிறான். ஒவ்வொருகணமும் அவன் இறந்து, ஒவ்வொரு கணமும் அவன் உயிர்த்தெழுகிறான். அவனுடைய சிலுவையும் அவனுடைய உயிர்த்தெழுதலும் தொடர்ந்து ஒரு செயல்பாடாக நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. அவன் ஒவ்வொருகணமும்

கடந்த காலத்திற்கு இறந்து எதிர்காலத்திற்குள் திரும்ப திரும்ப பிறக்கிறான்.

நீ வாழ்க்கைக்குள் பார்த்தால் இறப்பு என்றால் என்னவென்று அறிந்துகொள்ள முடியும். நீ இறப்பு என்றால் என்னவென்று புரிந்து கொண்ட பின்பே வாழ்க்கையென்றால் என்னவென்று புரிந்து கொள்ளமுடியும். அது ஒன்றிணைந்தது. சாதாரணமாக பயத்தின் காரணமாக நாம் ஒரு பிளவை உருவாக்கியுள்ளோம். நாம் வாழ்க்கை நல்லது, இறப்பு கெடுதல் என்று நினைக்கிறோம். நாம் வாழ்க்கையை வாழவேண்டும், இறப்பைத் தவிர்க்க வேண்டும் என்று நினைக்கிறோம். நாம் எப்படியாவது நம்மை இறப்பிலிருந்து பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறோம். இந்த அபத்தமான கருத்து முடிவில்லாத துன்பத்தை நமது வாழ்வில் உருவாக்குகிறது. ஏனெனில், இறப்பிலிருந்து தன்னை பாதுகாத்துக் கொள்ளும் ஒரு மனிதன் வாழமுடியாதவனாகிறான். மூச்சை வெளியே விடுவதற்கு பயப்படும் ஒரு மனிதனால் மூச்சை உள்ளிழுக்கமுடியாது. பிறகு அவன் மாட்டிக்கொண்டுவிட்டான். மேலும் அவன் வெறுமனே இழுத்துக் கொண்டு செல்கிறான். அவனுடைய வாழ்க்கை ஒரு ஓட்டமாக இருக்காது. அவனுடைய வாழ்வு ஒரு நதியாக ஓடவில்லை.

நீ உண்மையிலேயே வாழ விரும்பினால் நீ இறப்பதற்கு தயாராக இருக்கவேண்டும். உன்னில் யார் இறப்பைக் கண்டு பயப்படு கிறார்கள்? வாழ்க்கை இறப்பைக் கண்டு பயப்படுகிறதா? அது சாத்தியமில்லை. வாழ்க்கை அதனுடன் ஒன்றிணைந்த செயல்பாட்டைக் கண்டு எப்படி பயப்படும்? உன்னில் உள்ள வேறு ஏதோ ஒன்று பயப்படுகிறது. உன்னில் உள்ள ஆணவம் பயப்படுகிறது. வாழ்வும், இறப்பும் எதிரிடையானவை அல்ல. ஆணவமும் வாழ்வும் எதிரிடையானவை. ஆணவம் வாழ்வுக்கும், இறப்புக்கும் எதிரானது. ஆணவம் வாழவும் பயப்படுகிறது, இறப்பதற்கும் பயப்படுகிறது. அது வாழ பயப்படுகிறது, ஏனெனில் வாழ்வை நோக்கிய ஒவ்வொரு முயற்சியும், ஒவ்வொரு அடியும் இறப்பை அருகில் கொண்டுவருகிறது.

நீ வாழ்ந்தால் நீ இறப்புக்கு அருகில் வருகிறாய். ஆணவம் இறப்பதற்கு பயப்படுகிறது. அதனால் அது வாழ்வதற்கும் பயப்படுகிறது. ஆணவம் வெறுமனே தள்ளிக்கொண்டே செல்கிறது.

வாழாமலும், இறக்காமலும் பல மக்கள் இருக்கிறார்கள். இது எல்லாவற்றையும் விடவும் மோசமானது. முழு உயிரோட்டமுள்ள மனிதன் இறப்பாலும் நிறைவடைகிறான். யேசு சிலுவையில் இருப்பதன் அர்த்தம் அதுதான். யேசு அவருடைய சொந்த சிலுவையைச் சுமப்பது உண்மையிலேயே புரிந்துகொள்ளப்பட வில்லை. அவருடைய சீடர்களுக்கு அவர் சொல்கிறார், 'உன்னுடைய சொந்தச் சிலுவையை நீ சுமந்தாக வேண்டும்.' யேசு அவருடைய சொந்தச் சிலுவையை சுமப்பதன் பொருள் மிகவும் எளிமையானது. எல்லோரும் அவர்களுடைய இறப்பை தொடர்ந்து சுமந்தாக வேண்டும். எல்லோரும் ஒவ்வொரு கணமும் இறக்க வேண்டும், எல்லோரும் சிலுவையில் இருக்கவேண்டும், என்பதைத்தவிர வேறொன்றுமில்லை. ஏனெனில் அது மட்டுமே முழுமையாக, முழுவதுமாக வாழ்வதற்கான ஒரே வழி.'

நீ எப்பொழுதெல்லாம் உயிரோட்டத்துடன் முழுமையாக ஒரு கணத்தை வாழ்கிறாயோ அப்பொழுதெல்லாம் திடீரென அங்கே இறப்பையும் பார்ப்பாய். அன்பில் அது நிகழ்கிறது. அன்பில் வாழ்வு ஒரு உச்சக்கட்டத்திற்கு வருகிறது. அதனால்தான் மக்கள் அன்பைக் கண்டு பயப்படுகின்றனர்.

அன்பைக் கண்டு பயப்படுவதாக கூறும் மக்களைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டுக் கொண்டே இருக்கிறேன். அன்பில் என்ன பயம்? ஏனெனில், நீ உண்மையிலேயே ஒருவர் மீது அன்பு செலுத்தும் போது உனது ஆணவம் கரைந்து நழுவத் தொடங்குகிறது. நீ ஆணவத்தோடு அன்பு செலுத்தமுடியாது. ஆணவம் ஒரு தடையாகிறது. மேலும் நீ தடையை நீக்க முற்படும்போது ஆணவம் 'இது ஒரு இறப்பாக இருக்கப் போகிறது!, கவனமாக இரு' என்று கூறுகிறது.

ஆணவத்தின் இறப்பு உனது இறப்பல்ல. ஆணவத்தின் இறப்பு உண்மையிலேயே நீ வாழ்வதற்கான வாய்ப்பு. ஆணவம் உன்னைச் சுற்றியுள்ள ஒரு இறந்த ஓடு. அது உடைத்து தூக்கி எறியப்பட வேண்டும். ஒருவன் பயணம் செய்யும்போது எவ்வாறு அவனுடைய உடையில் மாசு படிகிறதோ, அவனுடைய உடல் அழுக்காவது இயல்பாக நடக்கிறது. அவன் அழுக்கை சுத்தப்படுத்த குளிக்கவேண்டும்.

நாம் காலத்தில் நகரும்பொழுது, அனுபவத்தின், அறிவின், வாழ்ந்த வாழ்க்கையின், கடந்த காலத்தின் அசுத்தங்கள் சேர்கின்றன. அந்த அசுத்தம் நமது ஆணவமாக மாறுகிறது. சேர்த்து வைக்கப்படும் போது, அது உன்னைச் சுற்றி ஒரு ஓடாக மாறுகிறது. அது உடைக்கப்பட்டு தூக்கி எறியப்பட வேண்டும். ஒருவர் தொடர்ந்து தினமும் குளிக்க வேண்டும். - ஒவ்வொரு நாளும் உண்மையில் ஒவ்வொரு கணமும் சுத்தப்படுத்த வேண்டும். அப்போதுதான் அந்த ஓடு சிறையாக மாறாமலிருக்கும். ஆணவம் அன்பு செலுத்த பயப்படுகிறது. ஏனெனில் அன்பில் வாழ்க்கை மலர்கிறது. ஆனால் எங்கெல்லாம் வாழ்க்கை மலர்கிறதோ அங்கெல்லாம் இறப்பு கூடவே வரும். அவை இணைந்தே வரும்.

அன்பில் நீ இறக்கிறாய், மறுபிறப்பெடுக்கிறாய்.

இறப்பும் வாழ்வும் தனிப்பட்டவைகளல்ல, அவை ஒன்றாகவே பற்றி எரியும் என்பதை நினைவு கொள். நீ குறைந்தபட்சத்தில் வாழ்ந்தால் மட்டுமே பிறப்பும், இறப்பும் தனித்தனி என்று உன்னால் நினைக்க முடியும். நீ சிகரத்தருகில் வாழத் தொடங்கும் போது அவையும் அருகருகே வரத் துவங்கும்.

சிகரத்தில் அவை சந்தித்து ஒன்றாகி விடுகின்றன. அன்பில், தியானத்தில், நம்பகத்தன்மையில், பிரார்த்தனையில், எங்கெல்லாம் வாழ்க்கை முழுமையடைகிறதோ, அங்கெல்லாம் இறப்பு மிருக்கிறது. இறப்பில்லாமல் வாழ்க்கை முழுமையடைய முடியாது.

ஆனால் ஆணவம் எப்போதும் பிளவுபடுத்தியே, இருமையில் யோசிக்கிறது. அது எல்லாவற்றையும் பிரிக்கிறது. பிரபஞ்சம் பிரிக்க

இயலாதது. அதைப் பிரிக்கமுடியாது. நீ ஒரு குழந்தையாக இருந்தாய், பின்பு இளைஞனாக மாறினாய், நீ காலத்தில், குழந்தையில் இருந்து இளைஞனாக மாறிய நேரத்தை உன்னால் குறிக்க முடியுமா? ஒருநாள் உனக்கு வயதாகும். எப்போது உனக்கு வயதானது என்று கோடிட முடியுமா? செயல்பாடுகளை குறியிடமுடியாது. நீ பிறக்கும் பொழுது அதேதான் நிகழ்கிறது. நீ எப்பொழுது பிறந்தாய் அல்லது எப்போது உன்னில் வாழ்க்கை தொடங்கியது என்று உன்னால் குறிக்கமுடியுமா? அது குழந்தை சுவாசிக்க ஆரம்பிக்கும் போது தொடங்கியதா? மருத்துவர் குழந்தையைத்தட்டி குழந்தை அழ ஆரம்பிக்கும்போது வாழ்க்கை பிறந்ததா? குழந்தை கர்ப்பப்பையில் வந்தவுடனா, அல்லது தாய் சூல் கொண்டவுடனா, எப்போது வாழ்க்கை தொடங்குகிறது அல்லது அதற்கு முன்பேவா, சரியாக வாழ்க்கை எப்போது தொடங்குகிறது?

அது தொடக்கமற்ற, முடிவற்ற ஒரு செயல்பாடு. அது எப்போதும் தொடங்குவதில்லை. ஒரு மனிதன் எப்போது இறக்கிறான்? சுவாசம் நின்றவுடன் மனிதன் இறந்துவிடுகிறானா? அப்போது பல யோகிகள் அறிவியல்பூர்வமாக சுவாசத்தை நிறுத்தியபிறகும் அவர்கள் உயிரோடு இருக்கிறார்கள். மேலும் அவர்களால் திரும்பி வர இயலும் என்பதையும் அவர்கள் நிரூபித்திருக்கிறார்கள். எனவே சுவாசத்தை நிறுத்துவது முடிவாக இருக்கமுடியாது. வாழ்க்கை எங்கே முடிகிறது? அது எங்கும் முடிவதில்லை. அது எங்கும் தொடங்குவதில்லை. நாம் நிரந்தரத்தில் இருக்கிறோம். நாம் மிகத் தொடக்கத்திலிருந்தே இங்கே இருக்கிறோம். தொடக்கம் என்று ஏதாவது ஒன்று இருந்திருந்தால் மற்றும் இறுதி வரை நாம் இங்கே இருக்கப்போகிறோம் - முடிவு என்று ஏதாவது இருந்தால். உண்மையில் அங்கு எந்தத் தொடக்கமும் எந்த முடிவும் இருக்க முடியாது. உருவங்கள் மாறினாலும், உடல்கள் மாறினாலும், மனங்கள் மாறினாலும் கூட நாம்தான் வாழ்க்கை. நாம் வாழ்க்கை என்று அழைப்பது ஒரு குறிப்பிட்ட உடலுடன், ஒரு குறிப்பிட்ட மனதுடன், ஒரு குறிப்பிட்ட நடத்தையுடன் நமக்கிருக்கும் வெறும்

ஒரு அடையாளமே. மேலும் நாம் இறப்பு என்று அழைப்பது அந்த உருவத்திலிருந்து, அந்த உடலிலிருந்து, அந்த கருத்திலிருந்து வெளிவருவதைத் தவிர வேறொன்றுமில்லை.

நீ வீடுகளை மாற்றுகிறாய். நீ ஒரு வீட்டுடன் மிகவும் அடையாளப்படுத்திக் கொண்டுவிட்டால் பிறகு வீட்டை மாற்றுவது மிகவும் வலிதரக்கூடியதாக இருக்கும். ஏனெனில், பழையவீடுதான் நீ, அதுதான் உனது அடையாளம். நீ இறப்பதாக நீ நினைப்பாய் ஆனால் நிகழ்வது அப்படியல்ல. ஏனெனில் நீ வீட்டை மட்டுமே மாற்றுகிறாய். நீ அப்படியேதான் இருக்கிறாய். தங்களுக்குள்ளே பார்த்த மக்கள், தாங்கள் யார் என்பதை அறிந்த மக்கள், நிரந்தரமான, முடிவில்லாத செயல்பாட்டை அறிகிறார்கள். வாழ்க்கை ஒரு செயல்பாடு, காலமற்றது, காலத்தைக் கடந்தது. இறப்பு அதன் ஒரு பகுதி. இறப்பு ஒரு தொடர்ந்த புதுப்பித்தல். திரும்ப திரும்ப எழுவதற்கு வாழ்க்கைக்கொரு உதவி. பழைய உருவங்களை விடுவதற்கு, பழமையான கட்டிடங்களை விடுவதற்கு, பழமையான கட்டுமானங்களை விடுவதற்கு வாழ்க்கைக்கொரு உதவி. எனவே திரும்பவும் நீ புதிதாகவும் இளமையாகவும் மாறலாம், திரும்பவும் தூய்மையானவனாக மாறலாம், திரும்பவும் புதிதாக பாயலாம்.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்....

ஒரு மனிதன் பழங்கால பொருட்கள் விற்கும் கடையைப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது பழங்காலக்குரியதாக காட்சியளித்த கோடாரி ஒன்றை கண்டான். ‘நீங்கள் மிகவும் பழைய கோடாரியை வைத்திருக்கிறீர்கள்!’ என்று கடை முதலாளிடம் கூறிய போது அவன், ‘ஆமாம். அது ஜார்ஜ் வாஷிங்டனுக்கு உரியதாக இருந்தது’ என்றான். ‘உண்மையாகவா? அது மிகவும் நல்ல நிலையில் உள்ளது’ என்று இவன் கூறியபோது ‘ஆம். மூன்று முறை கைப்பிடியும், இரண்டு முறை வெட்டிரும்பும் மாற்றப்பட்டுள்ளது!’ என்று கடைக்காரன் கூறினான்.

ஆனால் அப்படித்தான் வாழ்க்கை இருக்கிறது. அது கைப்பிடிகளையும், தலையையும் மாற்றிக் கொண்டேயிருக்கிறது. உண்மையில் எல்லாமும் மாறுவதாகத் தோன்றுகிறது. ஆனாலும் ஏதோ ஒன்று நிரந்தரமாக அப்படியே இருக்கிறது. வெறுமனே கவனி. நீ ஒரு குழந்தையாக இருந்தாய். அப்போது அதில் எது மிச்சமிருக்கிறது. வெறும் ஒரு நினைவு. உன்னுடைய உடல் மாறிவிட்டது, உனது மனம் மாறிவிட்டது, உனது அடையாளம் மாறிவிட்டது, உனது குழந்தைப் பருவத்திலிருந்து எது மிச்சமிருக்கிறது? எதுவும் மிஞ்சவில்லை. வெறும் நினைவு மட்டுமே. அது உண்மையிலேயே நிகழ்ந்ததா அல்லது நீ கனவு கண்டாயா, அல்லது நீ ஒரு புத்தகத்தில் படித்தாயா அல்லது யாராவது அதைப்பற்றி உன்னிடம் சொன்னார்களா என்று உன்னால் வேறுபடுத்த முடியாது. குழந்தைப்பருவம் உன்னுடையதா அல்லது வேறு யாருடையதாவதா? சில சமயங்களில் பழைய புகைப்படங்களை எடுத்துப் பார். நீ இப்படித்தான் இருந்தாய் என்றால் உன்னால் அதை நம்ப முடியாது. நீ மிகவும் மாறிவிட்டாய். உண்மையில் எல்லாமும் மாறிவிட்டது. கைப்பிடிகள், தலைகள் மற்றும் எல்லாமும். ஆனால் இன்னமும் அடிஆழத்தில் எங்கோ ஏதோ ஒன்றில் ஒரு தொடர்ச்சியிருக்கிறது. ஒரு சாட்சிபாவம் தொடர்ச்சியாக இருக்கிறது. ஒரு நூல் இருக்கிறது. எவ்வளவு கண்ணுக்கு தெரியாததாக இருந்தாலும், எல்லாமும் மாறியிருந் தாலும் அந்த கண்ணுக்குத் தெரியாத நூல் அப்படியே இருக்கிறது.

அந்த நூல் வாழ்வு மற்றும் இறப்பைக் கடந்தது. வாழ்வும், இறப்பும் வாழ்வையும் இறப்பையும் கடந்து நிற்பதன் இரண்டு இறக்கைகள். வாழ்வையும் இறப்பையும் கடந்து இருப்பது வாழ்வையும் இறப்பையும் மாட்டுவண்டியின் இரு சக்கரங்கள் போல ஒன்றுக்கொன்று துணையாக உபயோகப்படுத்திக் கொள்கிறது. அது வாழ்வின் வழியாகவும் வாழ்கிறது, இறப்பின் வழியாகவும் வாழ்கிறது. மூச்சை உள்ளிழுத்தலும், வெளி விடுதலும் போல பிறப்பும், இறப்பும் அதன் செயல்பாடுகள். உன்னுள் உள்ள ஏதோ ஒன்று எல்லாவற்றையும் கடந்தது.

ஆனால் நாம் உருவத்துடன் மிகவும் அடையாளம் கொண்டு விட்டோம். அது ஆணவத்தை உருவாக்குகிறது. அதைத்தான் நாம் 'நான்' என்று அழைக்கிறோம். நான் பலமுறை இறந்தாக வேண்டும். எனவே அது தொடர்ந்து பயத்தில் நடுங்கிக் கொண்டு, பயத்திலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள பாதுகாப்பைத் தேடிக்கொண்டும் இருக்கிறது.

ஒரு சூஃபி ஞானி ஒரு பெரிய பணக்காரனின் கதவைத் தட்டினார். அவர் ஒருவேளை உணவைத் தவிர வேறெதுவும் வேண்டவில்லை. அவர் ஒரு பக்கீர். பணக்காரன், 'உன்னை இங்கு யாருக்கும் தெரியாது!' என்று சத்தம் போட்டான். 'ஆனால் என்னை எனக்குத் தெரியும்!' என்று கூறிய பக்கீர் 'இதற்கு நேர்மாறானது உண்மையாக இருந்தால் அது எவ்வளவு சோகமானதாக இருக்கும். எல்லோருக்கும் என்னைத் தெரியும், ஆனால் என்னை எனக்குத் தெரியாது என்றிருந்தால்.... நீ சொல்வது உண்மைதான், இங்கு யாருக்கும் என்னைத் தெரியாது, ஆனால் எனக்கு என்னைத் தெரியும்' என்று பதில் கூறினார்.

இவை இரண்டும்தான் சாத்தியமாக கூடிய சூழ்நிலைகள். மேலும் நீ சோகமான சூழ்நிலையில் இருக்கிறாய். எல்லோருக்கும் உன்னை யார் என்று தெரிந்திருக்கலாம், ஆனால் உனக்கு உன்னுடைய கடந்த தன்மையைப் பற்றி, உன்னுடைய உண்மையான இயல்பைப் பற்றி, உனது உண்மையான இருப்பைப் பற்றி தெரியாது. நீ முழுமையான அறியாமையில் இருக்கிறாய். வாழ்க்கையின் ஒரே சோகம் இதுதான். நீ பல காரணங்களை கண்டுபிடிக்கலாம். ஆனால் உண்மையான சோகம் இதுதான். நீ யாரென்று உனக்குத் தெரியாது.

தான் யாரென்று தெரியாமல், அவன் எங்கிருந்து வருகிறான் என்பது தெரியாமல், அவன் எங்கே போகிறான் என்பது தெரியாமல் ஒருமனிதன் எப்படி மகிழ்ச்சியாக இருக்கமுடியும்? இந்த அடிப்படை சுயஅறியாமை காரணமாக ஆயிரத்தொரு பிரச்சனைகள் எழுகின்றன.

ஒரு எறும்புக்கூட்டம் அதிகாலை உணவு தேடி புற்றிலிருந்து புறப்பட்டது. பனித்துளி இருக்கும் செடியைப் பார்த்தன. பனித்துளியைப் பார்த்த எறும்புகளில் ஒன்று அது என்ன? அது எங்கிருந்து வருகிறது என்று கேட்டது. எறும்புகளில் சில, அது பூமியிலிருந்து வருகிறது என்றன, சில அது கடலிலிருந்து வருகிறது என்றன. விரைவில் அங்கு ஒரு கலவரம் வெடித்துவிட்டது. இரண்டு குழுக்களாக பிரிந்துவிட்டன. ஒரே ஒரு புத்திசாலியான எறும்பு தனித்து நின்று பார்த்துக் கொண்டிருந்தது. அது, 'நாம் ஒரு வினாடி நின்று சுற்றிலும் கவனிப்போம். எல்லா பொருட்களும் அதன் மூலத்தை நோக்கி ஒரு ஈர்ப்பைக் கொண்டுள்ளன. மேலும் அனைத்தும் அதன் மூலத்திற்கே திரும்புகின்றன என்று சொல்லப் படுகிறது. நீ ஒரு செங்கல்லை எவ்வளவு உயரத்திற்கு காற்றில் எறிந்தாலும் அது பூமிக்கு திரும்பி வருகிறது. ஒளியை நோக்கி சாயும் எதுவாக இருந்தாலும் அது ஒளியினுடையதாகவே இருக்க வேண்டும்' என்று கூறியது. எறும்புகள் முழுமையாக சமாதானமடையாமல் திரும்பவும் சண்டையிடத் தொடங்கின. ஆனால் சூரியன் வந்துவிட்டது. பனித்துளிகள் இலைகளை விட்டுவிட்டு சூரியனை நோக்கி எழுந்து அதனுள் மறைந்துவிட்டது.

அனைத்தும் அதனுடைய உண்மையான மூலத்திற்கே திரும்புகின்றன. உண்மையான மூலத்திற்கு திரும்பி வந்தாக வேண்டும். நீ வாழ்க்கையை புரிந்துகொண்டால் பின்பு நீ இறப்பையும் புரிந்து கொள்வாய். வாழ்க்கை அசல் மூலத்தின் மறதி. மேலும் இறப்பு திரும்பவும் நினைவு கொள்ளுதல். வாழ்க்கை அசல் மூலத்திலிருந்து விலகிச் செல்லுதல், இறப்பு வீட்டிற்கு திரும்பி வருதல். இறப்பு அசிங்கமானதல்ல, இறப்பு அழகானது. ஆனால் யார் அவர்களுடைய வாழ்வை தடையில்லாமல், தயக்கமில்லாமல், அடக்கிவைக்காமல் வாழ்ந்திருக்கிறார்களோ அவர்களுக்கு மட்டுமே இறப்பு அழகானது. யார் வாழ்க்கையை அழகாக வாழ்ந்திருக்கிறார்களோ, யார் வாழ்வதற்கு பயப்படவில்லையோ, யார் வாழ்வதற்கு போதுமான அளவு துணிச்சல் கொண்டிருந்தார் களோ, யார் அன்பு செய்தார்களோ, யார் நடனமாடினார்களோ,

யார் கொண்டாடினார்களோ, அவர்களுக்கு மட்டுமே இறப்பு அழகானது. உன்னுடைய வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாக இருந்தால், இறப்பு உச்சகட்ட கொண்டாட்டமாக ஆகிறது.

நான் இதை இப்படிச் சொல்கிறேன். உன்னுடைய வாழ்வு என்னவாக இருந்ததோ, அதை இறப்பு வெளிக்காட்டுகிறது. நீ வாழ்வில் துன்பப்பட்டிருந்தால் இறப்பு துன்பத்தை வெளிக் காட்டுகிறது. இறப்பு ஒரு வெளிப்படுத்துனர். நீ உன்னுடைய வாழ்க்கையை ஆனந்தமாக வாழ்ந்திருந்தால் இறப்பு ஆனந்தத்தை வெளிப்படுத்துகிறது. நீ உடல்ரீதியாக வசதியுடனும், புலனின்பத்துடன் மட்டும் ஒரு வாழ்க்கையை வாழ்ந்திருந்தால் பிறகு இறப்பு மிகவும் சங்கடப்படுத்துவதாக, சஞ்சலத்தை உண்டாக்குவதாக இருக்கும். ஏனெனில் உடல் விடப்பட வேண்டும்.

உடல் ஒரு தற்காலிக தங்குமிடம். இரவில் தங்கி காலையில் கிளம்பும் ஒரு கூடாரம். அது உனது நிரந்தர வசிப்பிடமல்ல, அது உனது வீடல்ல. எனவே நீ வெறும் உடலியலான வாழ்க்கையை வாழ்ந்திருந்தால், உடலைத் தாண்டிய எதையும் அறியாமல் இருந்தால் இறப்பு மிகமிக அசிங்கமானதாக, சங்கடமானதாக, மிகுந்த வலியுடையதாக இருக்கும். இறப்பு ஒரு துயரமாக இருக்கும். ஆனால் நீ உடலை விட்டு சிறிது உயரமாக இசை, கவிதை இவைகளை நேசித்து மேலும் காதலித்து மற்றும் மலர்களையும் விண்மீன்களையும் பார்த்து உடலியலற்ற ஏதோ ஒன்று உன்னுடைய தன்னுணர்வில் நுழைந்திருந்தால் இறப்பு அவ்வளவு மோசமானதாக, அவ்வளவு வலி தரக்கூடியதாக இருக்காது. நீ அழகான சாந்தத்துடன் எதிர்கொள்ள முடியும். ஆனாலும்கூட அது ஒரு கொண்டாட்டமாக இருக்காது.

நீ உனக்குள் கடந்து ஏதோ ஒன்றை தொட்டிருந்தால், நீ மையத்தில் உன்னுடைய சொந்த சூன்யத்திற்குள் நுழைந்திருந்தால், உன்னுடைய இருப்பின் மையத்தினுள் சென்றிருந்தால் - எங்கு நீ ஒரு உடலாக இல்லையோ, ஒரு மனமாக இல்லையோ, புலனின்பங்கள் எங்கு முழுமையாக தொலைவில் விடப்பட்டு

விட்டதோ, எங்கு மனோ இன்பங்களாகிய இசை, கவிதை, ஓவியம், இலக்கியம் ஆகிய யாவும் விலகிச் சென்றுவிட்டதோ, எங்கு நீ வெறும் விழிப்புணர்வாக, வெறும் தன்னுணர்வாக இருக்கிறாயோ - அங்கு நீ நுழைந்திருந்தால் பின் இறப்பு ஒரு சிறந்த கொண்டாட்டமாக, ஒரு சிறந்த புரிந்து கொள்ளுதலாக, ஒரு சிறந்த வெளிப்பாடாக இருக்கும்.

கடந்ததைப்பற்றி ஏதோ ஒன்றை நீ உனக்குள் அறிந்திருந்தால், பிரபஞ்சத்திலுள்ள கடந்ததை இறப்பு உனக்கு வெளிப்படுத்தும். பின் இறப்பு ஒரு இறப்பல்ல. அது மூலத்துடனான ஒரு சந்திப்பு. பிரபஞ்சத்துடனான ஒரு மறுஇணைப்பு.

## வாழ்க்கையைக் குறித்த பயம்

***கேள்வி: நீங்கள் எனக்குள் மணியடிக்கும்படி ஏதோ ஒன்றை தொட்டுவிட்டீர்கள். நான் அதற்குள் பார்த்தால் நான் உண்மையிலேயே இறப்பைவிட வாழ்க்கையைக் கண்டு அதிகம் பயம் கொள்கிறேன் என உணர்கிறேன். இந்த பயங்கள் எவ்வாறு தொடர்புடையன என்று நீங்கள் இன்னமும் ஏதாவது சொல்லமுடியுமா?***

**ஓஷோ:** இறப்பைக் கண்டு பயப்படும் ஒருவன் வாழ்வைக் கண்டும் பயப்படுவான். ஏனெனில் வாழ்வு இறப்பைக் கொண்டு வருகிறது. நீ எதிரியைக் கண்டு பயப்பட்டால் உன்னுடைய கதவை தடுத்துவிடுகிறாய். நண்பனும் உள்ளே நுழையமுடியாமல் தடுக்கப்படுகிறான். நீ எதிரி உள்ளே நுழைந்துவிடக்கூடும் என்று மிகவும் பயப்படுகிறாய். எனவே நண்பனுக்கும் கதவை அடைத்து விடுகிறாய். நீ மிகவும் பயத்தில் இருப்பதால் ஒரு நண்பனுக்குக் கூட உன்னால் கதவைத் திறக்கமுடியாது. ஏனெனில் யாருக்குத் தெரியும் நண்பன் எதிரியாக கூட மாறிவிடலாம். அல்லது நண்பனுக்கு கதவை திறந்துவிடும்போது எதிரியும் உள்ளே நுழைந்துவிடக்கூடும்.

மக்கள் வாழ்க்கையைக் கண்டு பயப்படுகிறார்கள். ஏனெனில், அவர்கள் இறப்பைக் கண்டு பயம் கொள்கிறார்கள். அவர்கள்

வாழ்வதில்லை. ஏனெனில், வாழ்க்கையை வாழும்போது உச்சிகளிலும், சிகரங்களிலும் வாழ்க்கையினுள் இறப்பு எப்போதும் ஊடுருவி விடுகிறது. நீ இது நடப்பதைப் பார்த்திருக்கிறாயா? பல பெண்கள் ஒரு உறைந்து போன வாழ்க்கையை வாழ்கிறார்கள். காமக்கிளர்ச்சியைக் கண்டு பயப்படுகிறார்கள். தாறுமாறான அந்த சக்தி வெடிப்பைக் கண்டு பயப்படுகிறார்கள். பல நூற்றாண்டு களாக பெண்கள் உறைந்திருக்கிறார்கள். அவர்களுக்கு கிளர்ச்சி எனறால் என்னவென்று தெரியாது. மேலும் அதிகபட்சமான ஆண்களும் அந்த பயத்தினால் பாதிக்கப்பட்டிருக் கிறார்கள். 95% ஆண்கள் சீக்கிரமே விந்து வெளிப்படுதலால் பாதிக்கப்பட்டிருக் கிறார்கள். அவர்கள் கிளர்ச்சியைக் குறித்து பயத்தோடிருக் கிறார்கள். அது மிகவும் பயமாக இருப்பதால் எப்படியாவது சீக்கிரம் அதை முடித்துவிட அவர்கள் விரும்புகிறார்கள். எப்படியாவது அதைவிட்டு வெளியே வர விரும்புகிறார்கள். அவர்கள் காமத்தில் ஈடுபடும்போதெல்லாம் அவர்களுக்கு பயமாக இருக்கிறது. பெண் உறைந்துபோய் இருக்கிறாள். மேலும் ஆண் அதிக நேரம் அந்த நிலையில் இருக்கமுடியாதே என்று பயம் கொள்கிறான். அந்த பயமே அவனை இயல்பைவிட சீக்கிரமே விந்தை வெளியேற்றக் காரணமாகி விடுகிறது. மேலும் பெண் மூடியிருக்கிறாள். அவளை இழுத்துப் பிடித்து வைத்துக்கொள்கிறாள்.

அங்கே இவ்வளவு பயம் இருக்கும்பொழுது கிளர்ச்சியின் வாய்ப்பே மறைந்துவிடுகிறது. ஆழ்ந்த கிளர்ச்சியில் இறப்பு ஊடுருவுகிறது. நீ இறந்து கொண்டிருப்பதைப் போல நீ உணர்கிறாய். ஒரு பெண் கிளர்ச்சிக்குள் சென்றால் அவள் முணங்கத்தொடங்குகிறாள், அழவும், கத்தவும் தொடங்குகிறாள். அவள், 'நான் இறந்துகொண்டிருக்கிறேன், என்னைக் கொல்லாதே' என்று சொல்லக்கூடும். அது உண்மையிலேயே நிகழ்கிறது. 'நான் இறந்து கொண்டிருக்கிறேன், என்னைக் கொல்லாதே, நிறுத்து!' ஆழமான கிளர்ச்சியில் ஆணவம் இருக்கமுடியாத, இறப்பு ஊடுருவும் ஒரு கணம் வருகிறது. அதுதான் அந்த கிளர்ச்சியின் அழகு.

மக்கள் அன்பைக் கண்டும் பயப்படுகிறார்கள். ஏனெனில், அன்பிலும் இறப்பு ஊடுருவுகிறது. காதலர்கள் இருவர் ஆழமான காதலில் அருகருகே பேசக்கூட பேசாமல் அன்யோன்யமாக அமர்ந்திருந்தால் அங்கே........ பேசுவது தப்பித்தல், காதலிலிருந்து தப்பித்தல். காதலர்கள் இருவரும் பேசுவது அவர்கள் அன்யோன்யத்தை தவிர்க்கிறார்கள் என்பதைக் காட்டுகிறது. அவர்களுக்கு இடையேயான வார்த்தைகள் தொலைவைத் தருகின்றன. வார்த்தைகள் இல்லாவிட்டால் தொலைவு மறைந்துவிடுகிறது. மேலும் இறப்பு தோன்றுகிறது. மௌனத்தில் இறப்பு அங்கே சுற்றியிருக்கிறது. ஒரு அழகான விஷயம், ஆனால் மக்கள் மிகவும் பயப்படுகிறார்கள். அவர்கள் தேவைப்பட்டாலும், தேவைப்படாவிட்டாலும் பேசிக்கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் எதைப் பற்றியாவது பேசிக் கொண்டேயிருக்கிறார்கள். அவர்களால் மௌனமாக இருக்கமுடியாது.

காதலர்கள் இருவர் மௌனமாக அமர்ந்திருந்தால் இறப்பு அவர்களைச் சூழ்ந்திருக்கிறது. மேலும் இரு காதலர்கள் மௌனமாக இங்கிருக்கும்போது நீ குறிப்பிட்ட ஆனந்தத்தையும், குறிப்பிட்ட சோகத்தையும் ஒருசேரக் காண்பாய். ஆனந்தம் ஏனெனில் வாழ்க்கை அதன் உச்சத்திலிருக்கிறது. சோகம் ஏனெனில் வாழ்க்கையின் உச்சத்தில் இறப்பும் உள்ளே வந்துவிடுகிறது. நீ மௌனமாக இருக்கும்போதெல்லாம் நீ ஒருவிதமான சோகத்தை உணர்வாய். ஒரு ரோஜா மலரை பார்க்கும்போது கூட, - நீ மௌனமாக அமர்ந்து அதைப் பற்றி எதுவும் எண்ணாமல் வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தாலும் கூட அந்த மௌனத்தில் - திடீரென நீ, மரணம் இருப்பதை உணர்வாய். நீ மலர் உதிர்வதை, சில கணங்களில் அது இல்லாமல் போய்விடுவதை, எப்போதைக்குமாக மறைந்து போவதை காண்பாய். அவ்வளவு மென்மை, அப்படியொரு அழகு, மிகவும் தற்காப்பற்ற நிலை, அப்படியொரு அழகு, அப்படியொரு அதிசயம். மேலும் அது விரைவில் காணாமல் போய்விடப் போகிறது. எப்போதும் திரும்ப வரப்போவதில்லை. நீ திடீரென சோகமாகிவிடுவாய்.

நீ தியானம் செய்யும்போதெல்லாம் உன்னைச் சுற்றி இறப்பு நிகழ்வதை அறிவாய். எந்த மெல்லிய அனுபவத்திலும், அன்பில் கிளர்ச்சியில், இசையில், பாடலில், கவிதையில், நடனத்தில் எங்கெல்லாம் திடீரென உனது ஆணவத்தை இழக்கிறாயோ, அங்கெல்லாம் இறப்பிருக்கிறது.

எனவே நான் உனக்கொரு விஷயம் சொல்கிறேன். நீ வாழ்வைக் கண்டு பயப்படுகிறாய். ஏனெனில் நீ இறப்பைக் கண்டு பயப்படுகிறாய். நான் உனக்கு எப்படி இறப்பது என்று கற்றுத்தர விரும்புகிறேன். அப்போது இறப்பைப் பற்றிய அத்தனை பயங்களையும் நீ விட்டு விடமுடியும். நீ இறப்பைப் பற்றிய பயத்தை இழந்துவிடும் கணத்தில் வாழும் வல்லமையுடைய வனாகிறாய்.

மேலும் என்னைத் தவறாக புரிந்துகொள்ளாதே. நான் வாழ்க்கைக்கு எதிராக பேசவில்லை. நான் எப்படி வாழ்க்கைக்கு எதிராகப் பேசமுடியும்? நான் வாழ்க்கையை தாறுமாறாக காதலிக்கிறேன். நான் வாழ்க்கையை தாறுமாறாக காதலிப்பதால், இறப்போடும் காதலில் விழுந்துள்ளேன். அது வாழ்க்கையின் ஒரு பகுதி. நீ வாழ்க்கையை முழுமையாக வாழும்போது நீ இறப்பை எப்படி தவிர்க்க முடியும்? நீ இறப்பையும் காதலித்தாக வேண்டும். நீ ஒரு மலரை ஆழமாக நேசிக்கும்போது அது உதிர்வதையும் அனுபவிப்பாய். நீ ஒரு பெண்ணை ஆழமாக காதலிக்கும்போது அவளுக்கு வயதாவதை பொருட்படுத்த மாட்டாய். ஒருநாள் அவளது இறப்பையும் நீ காதலிப்பாய். அது அவளது வாழ்க்கையின் ஒரு பகுதி. அந்த பெண்ணின் ஒரு பகுதி. முதுமை வெளியிலிருந்து வரவில்லை, உள்ளிருந்து வந்துள்ளது. அழகான முகம் இப்போது சுருங்கியுள்ளது. நீ அந்த சுருக்கங்களையும் காதலிக்கிறாய். அவை அந்த பெண்ணின் பகுதி. நீ ஒரு ஆணை காதலிக்கிறாய், அவனது முடி வெள்ளையாக மாறிவிட்டது. நீ அதனையும் காதலிக்கிறாய். அது வெளியிலிருந்து நிகழ்ந்தது அல்ல. அவை விபத்துக்களல்ல. வாழ்க்கை விரிகிறது. இப்போது கருமுடி மறைந்து வெள்ளைமுடி வந்துள்ளது. நீ வெள்ளைமுடிகளை மறுப்பதில்லை. நீ

அவைகளையும் காதலிக்கிறாய். அவை அந்த ஆணின் ஒரு பகுதி. பின் அவன் முதுமையடைகிறான், வலிமை குன்றுகிறான், ஒருநாள் அவன் இறந்துபோய்விடுகிறான். நீ அதையும் காதலிக்கிறாய். அன்பு அனைத்தின் மீதும் அன்பு செலுத்துகிறது. அன்புக்கு அன்பைத்தவிர வேறெதையும் தெரியாது. அதனால்தான் நான் இறப்பைக் காதலியுங்கள் என்று கூறுகிறேன். உன்னால் இறப்பைக் காதலிக்க முடிந்தால் வாழ்வை காதலிப்பது மிகவும் எளிமையானது. உன்னால் இறப்பைக் கூட காதலிக்கமுடிந்தால் அங்கு எந்த பிரச்சனையும் இல்லை. பிரச்சனை எழுவது ஏனெனில் நீ ஏதோ ஒன்றை அடக்கி வைத்திருக்கிறாய். அதனால் வாழ்வைக் கண்டு பயப்படுகிறாய். பிறகு அடக்குதல் ஆபத்தான விளைவுகளைக் கொண்டுவருகிறது. நீ அடக்கி வைத்துக்கொண்டே போனால் ஒருநாள் உன்னுடைய மெல்லிய உணர்வுகளனைத்தையும் இழந்துவிடுவாய். நீ அழகைப் பற்றிய, நளினத்தைப் பற்றிய, தெய்வீகத்தைப் பற்றிய அனைத்து உணர்வுகளையும் இழந்து விடுவாய். பிறகு அந்த அடக்கிவைத்தல் ஒரு கொந்தளிப்பு நிலையாக மாறிவிடுகிறது. நீ செய்வதெல்லாம் அசிங்கமாகி விடுகிறது.

உங்களுக்கு நான் ஒரு அழகான கதையைக் கூறுகிறேன். எப்போதும் அழகான நகைச்சுவை துணுக்குகளை அனுப்பும் நண்பர் இதை அனுப்பியுள்ளார்.

ஒரு கடற்படை வீரர் தொலைதூரத்திலுள்ள ஒரு தீவுக்கு அனுப்பப்படுகிறார். அங்கு ஒரு பெரிய குரங்குக் கூட்டம் உள்ளது. அங்கு எந்த பெண்ணும் கிடையாது. அவர் தன்னுடன் வந்த வீரர்கள் குரங்குகளுடன் காமத்தில் ஈடுபடுவதைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். நான் இதை செய்யவே மாட்டேன் என்று சத்தியம் செய்தார். இவ்வாறு மூடியமனதுடன் இருக்க வேண்டாம் என்று அவர்கள் இவரிடம் கூறினார்கள். பல மாதங்கள் கடந்தபிறகு இந்த கடற்படை வீரரால் தாக்குபிடிக்க முடியவில்லை. அவரால் பிடிக்க முடிந்த ஒரு குரங்கைப் பிடித்து அவர் காமத்தில் ஈடுபடும்பொழுது அவருடைய நண்பர்கள் பார்த்து கீழே விழுந்து புரண்டு சிரித்தார்கள்.

ஆச்சரியத்துடன் அவர், 'நீங்கள் எதைப் பார்த்து சிரிக்கிறீர்கள்? நீங்கள்தான் இதில் ஈடுபடும்படி சொல்லிக்கொண்டேயிருந்தீர்கள்' என்று அவர்களிடம் கேட்டார். அவர்கள், 'ஆமாம். ஆனால் நீ ஏன் இருப்பதிலேயே அசிங்கமான ஒன்றைத் தேர்ந்தெடுத்தாய்?' என்று கேட்டனர்.

நீ அடக்கிவைத்தால் நீ அசிங்கமான வாழ்க்கையை தேர்ந்தெடுக்க வாய்ப்புள்ளது. கொந்தளிப்பு மிக அதிகமாக இருப்பதால் நீ உனது தன்னுணர்வில் இருக்கமாட்டாய். பிறகு நீ கிட்டத்தட்ட நரம்புக்கோளாறு கொண்டவனாகி விடுவாய். அடக்கிவைத்தல் மிக அதிகமாக ஆவதற்கு முன்னால் தளர்வு கொள். வாழ்க்கைக்குள் நகர். இது உனது வாழ்க்கை. குற்றவுணர்ச்சி கொள்ளாதே. வாழ்வதற்கும் அன்பு செலுத்தவதற்கும் அறிவதற்கும் இருப்பதற்குமான உனது வாழ்விது. மேலும் இயற்கை உனக்கு என்ன உணர்வுகளை அளித்துள்ளதோ, அது நீ எங்கு நகரவேண்டும், நீ எங்கு தேடவேண்டும், எங்கு நீ உனது நிறைவைக் கண்டறிய வேண்டும் என்பதற்கான குறியீடுகளாகும்.

உடலினுடைய இந்த உலக வாழ்க்கை அனைத்துமல்ல என்பதை நானறிவேன். இதைவிடச் சிறந்த வாழ்க்கை இதன் பின்னால் உள்ளது. ஆனால் அது ஒளிந்துள்ளது. இதைவிடச் சிறந்த வாழ்க்கையை நீ இந்த வாழ்க்கைக்கு எதிராக சென்று கண்டுபிடிக்க முடியாது. இதைவிடச் சிறந்த வாழ்க்கையை நீ இந்த வாழ்க்கையில் ஆழமாக ஈடுபட்டு வாழ்வதன் மூலமே கண்டுபிடிக்க இயலும். கடலில் அலைகள் உள்ளன. அலைகளுக்கு பின்னால் கடல் மறைந்துள்ளது. குழப்பத்தையும் சங்கடத்தையும் பார்த்து நீ அலைகளிலிருந்து தப்பியோடினால் நீ கடலிலிருந்தும் அதன் ஆழங்களிலிருந்தும் தப்பியோடுபவனாவாய். உள்ளே குதி. அந்த அலைகள் கடலின் ஒரு பகுதி, ஆழத்திற்கு செல். அலைகள் மறைந்துவிடும். பிறகு கடலின் ஆழமும், பூரண மௌனமும் அங்கிருக்கும்.

## 3

# நிச்சயமற்றது மற்றும் அறியாதது - நம்பகத்தன்மையின் மர்மம்.

வாழ்க்கையையும், இறப்பையும் தெரிந்துகொள்ள முடியும். அவைகளைப்பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. எந்த விடையும் உண்மையாக இருக்காது. பொருட்களின் இயல்பிலேயே அது அப்படி இருக்கமுடியாது. வாழ்வும், இறப்பும் இருப்பதிலேயே ஆழமான இரு மர்மங்கள். அவை இரண்டு மர்மங்களல்ல. ஆனால் ஒரு மர்மத்தின் இரண்டு பக்கங்கள் என்று சொல்லுவது இன்னமும் சிறப்பாக இருக்கும். ஒரே ரகசியத்தின் இரு கதவுகள். ஆனால் அவைகளைப் பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. நீ என்ன சொன்னாலும் அதைத் தவற விட்டுவிடுவாய்.

வாழ்க்கை வாழப்படமுடியும். இறப்பும் வாழப்பட முடியும். அவை அனுபவங்கள். ஒருவர் அவைகளைக் கடந்து செல்ல அவைகளை அறியவேண்டும். உன்னுடைய கேள்விகளுக்கு யாரும் பதில் சொல்லமுடியாது. வாழ்க்கை பதிலளிக்க கூடியதாக இருக்கமுடியுமா? இறப்புதான் பதிலளிக்குமா? நீ வாழ்ந்தால் தவிர, இறந்தால் தவிர வேறு யார் பதிலளிக்கப் போகிறார்கள்?

ஆனால் பல விடைகள் அளிக்கப்பட்டுள்ளன. மேலும் நினைவில் கொள். எல்லா விடைகளும் போலியானவையே. அங்கு தேர்வு செய்ய ஏதுமில்லை. ஒரு பதில் சரி, மற்ற பதில்கள் தவறானவை என்பதல்ல. எல்லா பதில்களும் தவறானவையே.

அங்கு தேர்ந்தெடுக்க ஏதுமில்லை. விடைகளல்ல, அனுபவங்கள் மட்டுமே பதிலளிக்க முடியும். எனவே நீ முதலில் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய முதல் விஷயம், மனிதனால் உருவாக்கப்பட்ட புதிராக இல்லாமல் உண்மையாக மர்மமாயிருக்கும் ஒரு விஷயத்திற்கு நீ பதிலளிக்க முடியாது. மனிதனால் ஒரு புதிர் உருவாக்கப்பட்டால் அதற்கு பதிலளிக்கலாம். ஏனெனில் அது ஒரு விளையாட்டு, ஒரு மனவிளையாட்டு. நீ கேள்விகளை உருவாக்குகிறாய். பதில் கொடுக்கமுடியும். ஆனால் நீ உருவாக்காத ஏதோ ஒன்றை நீ எதிர்கொள்ளும்போது அதற்கு நீ எப்படி பதிலளிக்க முடியும், மனிதமனதால் அதற்கு எப்படி பதில் கூறமுடியும்? மனிதமனதால் அதை கிரகித்துக் கொள்ளமுடியாது. பகுதியால் முழுமையை கிரகித்துக் கொள்ளமுடியாது. முழுமை முழுமையாக மாறுவதன் மூலம் மட்டுமே அதை கிரகித்துக் கொள்ளமுடியும். நீ அதனுள் குதித்து தொலைந்துவிடலாம். அப்போது அங்கு விடை கிடைக்கும்.

இராமகிருஷ்ணர் எப்போதும் மிகவும் விரும்பி சொல்லும் ஒரு கதையை நான் உங்களுக்கு சொல்கிறேன். ஒரு கடற்கரையில் சிறந்த விழா ஒன்று நடந்துகொண்டிருந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் அங்கு கூடியிருந்தனர். திடீரென அவர்களுக்கு ஒரு கேள்வி தோன்றியது. கடலை அளவிடமுடியுமா? முடியாதா? அதற்கு அடிஆழம் இருக்கிறதா? இல்லையா? ஆழத்தை அறிய முடியுமா? முடியாதா? அங்கே முழுவதும் உப்பால் உருவான மனிதன் ஒருவன் அங்கிருந்தான். அவன், நீங்கள் பொறுங்கள். நான் கடலுக்குள் சென்று அதை பார்த்துவிட்டு வருகிறேன். ஏனெனில், அதற்குள் செல்லாமல் ஒருவர் எப்படி அதைக் கண்டறிய முடியும்? என்று கூறிவிட்டு அவன் கடலுக்குள் குதித்தான். பலமணி நேரம் கடந்தது, நாட்கள் கடந்தன, மாதங்கள் கடந்தன, மக்கள் போதுமான அளவு காத்திருந்து பார்த்துவிட்டனர். ஆனால் உப்பாலான மனிதன் திரும்பி வரவேயில்லை.

உப்பாலான மனிதன் கடலில் நுழைந்த கணத்திலேயே கரையத் தொடங்கிவிட்டான். அவன் அடிமட்டத்தை அடைந்தபோது

அவனில்லை. அவன் அறிந்துகொண்டுவிட்டான். ஆனால் அவனால் திரும்பி வரஇயலவில்லை. மேலும் அதை அறியாதவர்கள் அதைக் குறித்து நீண்டநேரம் விவாதித்தனர். அவர்கள் ஒருசில முடிவுகளுக்கு வந்திருக்கலாம். ஏனெனில், மனம் முடிவுகளுக்கு வர விரும்புகிறது.

ஒரு முடிவு எட்டப்பட்டுவிட்டால் மனம் ஓய்வாக உணர்கிறது. அதனால்தான் பல தத்துவங்கள் இருக்கின்றன. ஒரு தேவையைப் பூர்த்தி செய்யவே எல்லா தத்துவங்களும் இருக்கின்றன. மனம் கேள்வி கேட்கிறது. மனதால் கேள்வியோடு இருக்கமுடியாது. அது சங்கடப்படும். ஒரு கேள்வியோடு இருப்பதற்கு வசதியானதாக இருப்பதில்லை. ஒரு பதில் தேவைப்படுகிறது. அது பொய்யாக இருந்தாலும்கூட போதுமானது. மனம் ஓய்வு கொள்கிறது.

கடலுக்குள் சென்று குதிப்பது ஆபத்தானது. நினைவில் கொள். வாழ்விறப்பு எனும் கடலைப் பொறுத்தவரை நாம் அனைவரும் உப்பினால் ஆனவர்கள். நாம் உப்பாலான மனிதர்கள். நாம் அதற்குள் கரைந்துவிடுகிறோம். ஏனெனில், நாம் அதிலிருந்துதான் வந்துள்ளோம். நாம் அதனால் செய்யப்பட்டுள்ளோம். நாம் அதனுடையவர்கள், நாம் கரைந்துவிடுவோம். எனவே மனம் கடலுக்குள் செல்ல எப்போதும் பயப்படுகிறது. அது உப்பினால் செய்யப்பட்டுள்ளது. அது கண்டிப்பாகக் கரைந்துவிடும். அது பயப்படுகிறது. எனவே அது கரையிலேயே இருந்துகொண்டு, விஷயங்களை கலந்துரையாடிக்கொண்டு, வாதம் விவாதம் செய்து கருத்துருக்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. எல்லாம் பொய்யானது. ஏனெனில் அவை பயத்தின் அடிப்படையில் அமைந்தவை. ஒரு துணிச்சலான மனிதன் அவனால் அறியப்படாத, அவன் அனுபவிக்காத, எந்த விடையையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிடுவான். அவன் குதித்துவிடுவான்.

நாம் கோழைகள். அதனால்தான் வேறு ஒருவருடைய விடையை ஏற்றுக்கொள்கிறோம். மகாவீரர், புத்தர், யேசு போன்றவர்களுடைய விடையை ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் அவர்களுடைய விடைகள் நம்முடைய விடைகளாக முடியாது.

வேறு யாருடைய அறிவும் உன்னுடையதாக முடியாது. அவர்கள் அறிந்திருக்கலாம். ஆனால் அவர்களுடைய அறிவு உனக்கு வெறும் தகவல்தான். நீ தெரிந்துகொண்டாக வேண்டும். அது உனது சொந்தமாக இருக்கும்போது மட்டுமே அது அறிவு. இல்லாவிடில் அது உனக்கு சிறகுகளைத் தராது. மாறாக அது உனது கழுத்தில் தொங்கும் கல்லைப்போல் ஆகிவிடும். நீ அதற்கொரு அடிமையாகி விடுவாய். நீ விடுதலையடைய மாட்டாய். அது உனக்கு விடுதலை தராது.

யேசு, உண்மை விடுதலையளிக்கும் என்று கூறுகிறார். கருத்துகள் மூலமாக விடுதலையடைந்திருக்கும் யாரையாவது பார்த்திருக் கிறாயா? அனுபவம் விடுதலையளிக்கிறது. ஆமாம், ஆனால் அனுபவத்தைப் பற்றிய கருத்துக்கள் ஒருபோதும் விடுதலையளிப்பதில்லை.

ஆனால் குதிக்க மனம் பயப்படுகிறது. ஏனெனில் பிரபஞ்சம் எதனால் உருவாக்கப்பட்டுள்ளதோ அதை கொண்டுதான் மனம் உருவாக்கப்பட்டுள்ளது. நீ குதித்தால் நீ தொலைந்துவிடுவாய். நீ அறிந்துகொள்வாய். ஆனால் நீ இல்லாதபோது மட்டுமே நீ அறிவாய். உப்புமனிதன் அறிந்து கொண்டுவிட்டான். அவன் அடியாழங்களைத் தொட்டுவிட்டான். அவன் மையத்தைச் சென்றடைந்துவிட்டான். ஆனால் அவனால் திரும்பி வர இயலவில்லை.

அவனால் முடிந்திருந்தாலும் கூட அவன் எப்படி சொல்ல முடியும்? அவன் திரும்பி வந்தாலும்கூட அவனுடைய மொழி மையத்தை, ஆழங்களைச் சார்ந்தது. மேலும் உன்னுடைய மொழி கரையை, வெளிப்புறத்தைச் சார்ந்தது. எந்தத் தொடர்புக்கும் வாய்ப்பேயில்லை. அர்த்தமுள்ள எதையும் அவனால் சொல்லமுடியாது. முக்கியமானதாக, அர்த்தமுள்ளதாக அவனால் மௌனமாக மட்டுமே இருக்கமுடியும். அவன் எதையாவது கூறினால் அவன் குற்றவுணர்வு கொள்வான். ஏனெனில், அவன் அறிந்தது வார்த்தைகளின் வழியாக வெளிப்படவில்லை. அவனுடைய அனுபவம் பின்தங்கிவிட்டது என்பதை அவன்

உடனடியாக அறிவான். உன்னிடம் இறந்த நாற்றமெடுக்கும் காலியான வார்த்தைகள் மட்டுமே சென்று சேர்ந்துள்ளன.

வார்த்தைகளைப் பரிமாறிக்கொள்ள முடியும். ஆனால் உண்மையைப் பகிர்ந்துகொள்ள முடியாது. உண்மையைச் சுட்டிக் காட்ட மட்டுமே முடியும். உப்பு மனிதன் உன்னிடம் 'நீயும் வா!' என்று கூப்பிட முடியும். அவன் உன்னை, 'நீயும் கடலுக்குள் குதித்து என்னுடன் வா' என்று அழைக்கமுடியும்.

ஆனால் நீ மிகவும் தந்திரமானவன். நீ 'முதலில் என் கேள்விக்கு பதில் சொல். இல்லாவிடில் நீங்கள் சரிதான் என்பதை நான் எவ்வாறு அறிந்துகொள்வது? முதலில் நான் ஆலோசித்து சிந்தித்து யோசித்து அதை கருவாய் சுமந்து பிறகு நான் உங்களைத் தொடர்கிறேன். என்னுடைய மனம் சமாதானமடைந்த பிறகு நான் குதிக்கிறேன்' என்று சொல்வாய். ஆனால் மனம் ஒருபோதும் சமாதான மடைந்ததில்லை. அதைச் சமாதானப்படுத்த முடியாது. மனம் சந்தேகப்படும் செயல்பாடே தவிர வேறொன்றும் கிடையாது. அதைச் சமாதானப்படுத்த முடியாது. அது முடிவில்லாமல் வாதம் புரிந்து கொண்டேயிருக்கும். ஏனெனில், நீ என்ன சொன்னாலும் அதனைச் சுற்றி அதனால் ஒரு விவாதத்தை உண்டாக்க முடியும்.

## அறிவிலிருந்து அப்பாவித்தனத்திற்கு

மேலும் மேலும் அறிவுடையவனாக மாறாதே, மேலும் மேலும் அப்பாவியாக மாறு. உனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் மறந்துவிடு. உனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் கைவிட்டுவிடு. ஆச்சரியத்துடன் இரு. ஆனால் உனது ஆச்சரியத்தை கேள்விகளாக மாற்றாதே. ஏனெனில், ஒருமுறை ஆச்சரியம் கேள்வியாக மாற்றப்பட்டுவிட்டால் இப்போதோ பிறகோ அந்தக் கேள்வி அறிவைக் கொண்டுவரும். மேலும் அறிவு என்பது ஒரு பொய்யான ஒருங்கிணைப்பு.

ஆச்சரிய நிலையிலிருந்து இரு வழிகள் உள்ளன. ஒன்று கேள்வி கேட்கும் தவறான பாதை. அது உன்னை மேன்மேலும் அறிவை

நோக்கிச் செலுத்துகிறது. மற்றொன்று கேள்வி கேட்பதல்ல, ஆனால் அனுபவிப்பது. ஆச்சரியத்தை அனுபவி. வாழ்க்கை எனும் ஆச்சரியத்தை, பிரபஞ்சம் எனும் ஆச்சரியத்தை, சூரியனை, மரங்கள் சூரியனின் தங்கநிற ஒளியில் குளிக்கும் ஆச்சரியத்தை அனுபவித்துப் பார். அதைக் கேள்விக்குறிக்குள் போடாதே. அது இருக்கும்படி இருக்கட்டும்.

நீ பிரபஞ்சத்துடனும், உண்மையுடனும் தொடர்பு கொள்ள விரும்பினால் அப்பாவியாகவும் குழந்தை போலவுமே இரு. உனக்காக மர்மங்கள் திறக்க வேண்டும் என விரும்பினால் ஆச்சரியத்திலேயே இரு. கேள்வி கேட்டுக்கொண்டே செல்பவருக்கு மர்மங்கள் ஒருபோதும் திறப்பதில்லை. கேள்வி கேட்பவர்கள் இப்போதோ, பிறகோ ஒரு நூலகத்தைச் சென்றடைவார்கள். வேதப்புத்தகங்களைச் சென்றடைவார்கள். ஏனெனில், வேதப்புத்தகங்கள் விடைகளால் நிறைந்துள்ளன.

விடைகள் ஆபத்தானவை. உன்னுடைய ஆச்சரியத்தை அவைகள் கொன்றுவிடுகின்றன. அவை ஆபத்தானவை. ஏனெனில், உனக்குத் தெரியவில்லை என்றாலும் உனக்குத் தெரியும் என்ற உணர்வை அவை தருகின்றன. அவை உனக்கு இப்போது கேள்விகள் மறைந்துவிட்டன என்ற தவறான புரிதலை உன்னைப்பற்றி தருகின்றன. - பைபிள் என்ன சொல்கிறது, குரான் என்ன சொல்கிறது, கீதை என்ன சொல்கிறது என்று எனக்குத் தெரியும். நான் வந்து சேர்ந்துவிட்டேன். - நீ ஒரு கிளியாக மாறிவிடுவாய். நீ விஷயங்களைத் திரும்பச் சொல்லுவாய். ஆனால் உனக்கு எதுவும் தெரியாது. இது அறிவதற்கான வழியல்ல. தகவலறிவு அறிவதற்கான வழியல்ல.

பிறகு அறிவதற்கு என்ன வழி? ஆச்சரியப்படு. உன்னுடைய இதயம் ஆச்சரியத்தால் நடனமாடட்டும். ஆச்சரியத்தால் நிறைந்திரு, அதனோடு செல். மூச்சோடு அதனை உள்ளிழு, அதனை வெளிவிடு.

விடைக்காக ஏன் இவ்வளவு அவசரப்பட வேண்டும்? ஒரு மர்மம் மர்மமாகவே இருக்க உன்னால் அனுமதிக்கமுடியாதா? ஒரு மர்மமாக இருக்க அனுமதிக்காமல் அதனை ஒரு அறிவாக குறைக்க

ஒரு பெரிய ஆர்வமிருப்பதை நான் அறிவேன். இந்த ஆர்வம் ஏன் அங்கிருக்கிறது? ஏனெனில், நீ அறிவால் நிறைந்திருந்தால் மட்டுமே நீ உன் மனக்கட்டுப்பாட்டில் இருப்பாய்.

மர்மம் உன்னைக் கட்டுப்படுத்தும். தகவலறிவு உன்னை கட்டுபடுத்துபவனாக்கும். மர்மம் உன்னை ஆட்கொள்ளும். நீ மர்மத்தை ஆட்கொள்ள முடியாது. அது மிகவும் பிரமாண்ட மானது. மேலும் உனது கைகள் மிகவும் சிறியவை. அது அளவிடற்கரியது. நீ அதனை ஆட்கொள்ள முடியாது. நீ அதனால் ஆட்கொள்ளப்பட வேண்டும். மேலும் அதுதான் பயம். அறிவை நீ பிடித்து வைத்துக் கொள்ளலாம். அது மிகவும் மட்டமானது,. அறிவை நீ கட்டுப்படுத்த முடியும்.

எல்லா ஆச்சரியங்களையும், எல்லா மர்மங்களையும் கேள்விகளாகக் குறைக்க வேண்டும் என்ற மனதின் ஆர்வம் அடிப்படையில் பயத்தை மூலமாகக் கொண்டது. நாம் பயப்படுகிறோம். பிரமாண்டமான வாழ்க்கையைக் கண்டு. இந்த அற்புதமான பிரபஞ்சத்தைக் கண்டு பயம் கொள்கிறோம், நாம் பயப்படுகிறோம். பயத்தின் காரணமாக நாம் ஒரு பாதுகாப்பாக, ஒரு கவசமாக, ஒரு தற்காப்பாக நம்மைச் சுற்றி சில சிறிய அறிதல்களை உருவாக்கிக் கொள்கிறோம்.

மிகவும் மதிப்பு வாய்ந்த ஆச்சரியப்படும் வல்லமையை கோழைகள் மட்டுமே கேள்விகளாக குறைத்துக் கொள்வார்கள். உண்மையிலேயே வீரமான, துணிச்சலான மனிதன் அது எப்படியிருக்கிறதோ அப்படியே விட்டுவிடுவான். அதனை ஒரு கேள்வியாக மாற்றுவதை விட்டுவிட்டு அவன் மர்மத்திற்குள் குதித்து விடுவான். அதனைக் கட்டுப்படுத்த முயற்சி செய்வதை விட்டுவிட்டு, மர்மம் அவனை ஆட்கொள்ள அனுமதிப்பான்.

ஆட்படுவதிலிருக்கக் கூடிய ஆனந்தம், ஆட்படுவதில் இருக்கக்கூடிய பரவசம் விலைமதிப்பற்றது. அது என்னவென்று உன்னால் கற்பனை செய்யமுடியாது. நீ அதைப்பற்றி கனவுகூட கண்டிருக்க மாட்டாய். ஏனெனில், மர்மத்தால் ஆட்கொள்ளப் படுவது என்பது முழுமையால் ஆட்கொள்ளப்படுவதாகும்.

## உள்ளார்ந்த குரலின் மீது நம்பகத்தன்மையோடு இருத்தல்

***கேள்வி:** நான் என்னுடைய உள்ளார்ந்த குரலைக் கேட்கும் பொழுது அது சில சமயங்களில் எதுவும் செய்யாமல் சாப்பிட்டு உறங்கி கடற்கரையில் விளையாடுவதே தேவையானது என்று கூறுகிறது. ஆனால் இந்த உணர்வுகளைப் பின்பற்ற எனக்கு பயமாக இருக்கிறது. ஏனெனில், இந்த உலகத்தில் பிழைக்கமுடியாமல் மிகவும் பலவீனமாக ஆகிவிடுவேன் என்று நினைக்கிறேன். நான் என்னைக் கைவிட அனுமதித்து விட்டால் பிரபஞ்சம் உண்மையிலேயே என்னைப் பாதுகாக்குமா?*

**ஓஷோ:** முதல் விஷயம் என்னவென்றால் இந்த உலகத்தில் பிழைத்திருக்க வேண்டிய அவசியமில்லை. இந்த உலகம் ஒரு பைத்தியக்கார விடுதி. அதில் பிழைத்திருக்க வேண்டிய அவசியமில்லை. குறிக்கோள், ஆணவம், அரசியல் ஆகியவற்றின் உலகத்தில் பிழைத்திருக்க வேண்டிய அவசியமில்லை. அது ஒரு நோய். ஆனால் இருப்பதற்கு வேறு ஒரு வழி உள்ளது. அதில் நீ இந்த உலகத்தைச் சாராமல் இந்த உலகத்தில் இருக்கலாம்.

என்னுடைய உள்ளார்ந்த குரலை நான் கேட்கும்பொழுது சில சமயங்களில் எதுவும் செய்யாமல் இருப்பதே எனக்கு தேவைப் படுவது. பிறகு எதுவும் செய்யாதே. உன்னை விட உயர்ந்தவர் யாருமில்லை. மேலும் பிரபஞ்சம் உன்னிடம் நேரடியாக பேசுகிறது. உனது உள்ளார்ந்த உணர்வுகளில் நம்பகத்தன்மை கொள்ளத் தொடங்கு. பிறகு எதுவும் செய்யாதே. நீ வெறுமனே உறங்கி, உண்டு கடற்கரையில் விளையாட வேண்டுமென்று உணர்ந்தால் மிகச்சரி. அது உனது உள்வழியாக இருக்கட்டும். பயப்படாதே.

நீ உனது பயத்தை விட்டாக வேண்டும். மேலும் அது உள்ளார்ந்த உணர்வுக்கும், பயத்திற்கும் இடையே தேர்ந் தெடுப்பதைப் பற்றிய கேள்வியாக இருந்தால் உள்ளார்ந்த

உணர்வையே தேர்ந்தெடு. பயத்தைத் தேர்ந்தெடுக்காதே. பல மக்கள் அவர்களுடைய உள்வழியை பயத்தின் காரணமாக தேர்ந்தெடுத்துள்ளனர். எனவே அவர்கள் ஒரு தள்ளாட்டத்தில் வாழ்கிறார்கள். அவர்கள் ஆன்மீகத்தன்மையோடும் இருப்ப தில்லை, உலகத்தவராகவும் இருப்பதில்லை. அவர்கள் உறுதியற்ற தன்மையில் வாழ்கிறார்கள்.

பயம் உதவி செய்யப் போவதில்லை. பயம் என்பதன் பொருள் எப்போதுமே அறியாததின் பயம். பயம் என்பதன் பொருள் மரணத்தின் பயம். பயம் என்பதன் பொருள் எப்போதுமே தொலைந்து போய்விடுவதன் பயம். ஆனால், நீ உண்மையிலேயே உயிரோட்டத்தோடு இருக்க விரும்பினால் தொலைந்து போவதற்கான வாய்ப்பை ஏற்றுக் கொண்டாக வேண்டும். அறிமுகமில்லாத புதியவற்றின், அறியாதவற்றின் சிரமத்தையும், அசௌகரியத்தையும், பாதுகாப்பற்ற தன்மையையும் நீ ஏற்றுக் கொண்டாக வேண்டும். அதைத் தொடர்ந்து வரும் பரவசத்திற்காக ஒருவர் தரும் விலையிது. மேலும் அதற்கான விலையைக் கொடுக்காமல் எதையும் அடையமுடியாது. நீ அதற்கான விலையைக் கொடுத்தாக வேண்டும். இல்லாவிடில் நீ பயத்தில் உறைந்து போய்விடுவாய். உன்னுடைய முழு வாழ்க்கையும் தொலைந்து போய்விடும்.

உன்னுடைய உள்ளார்ந்த உணர்வு என்னவாக இருந்தாலும் அதை அனுமதி.

இந்த உலகத்தில் பிழைக்க முடியாத அளவிற்கு பலவீனமடைந்து விடுவேன் என்று நினைக்கிறேன். அதற்கு தேவையில்லை. இது உன்னில் இருக்கும் பயம் பேசுவது. பயம் மேலும் பயங்களை உருவாக்குகிறது. பயத்தின் வழியாக மேலும் பயம் பிறக்கிறது.

பிரபஞ்சம் என்னை உண்மையிலேயே பாதுகாக்குமா? திரும்பவும் பயம் வாக்குறுதிகளையும், உத்திரவாதங்களையும் கேட்கிறது. உனக்கு உத்தரவாதம் தர அங்கு யார் இருக்கிறார்கள்? உன்னுடைய வாழ்க்கைக்கு யார் உத்திரவாதம்? நீ ஏதாவதொரு காப்பீடைக் கேட்கிறாய். இல்லை அதற்கு வாய்ப்பில்லை.

பிரபஞ்சத்தில் எதுவும் நிச்சயமல்ல. எதுவும் இருக்கமுடியாது. மேலும் அது நல்லது. இல்லாவிடில் பிரபஞ்சமும் உறுதியளித்தால் நீ ஏற்கனவே முழுவதுமாக இறந்திருப்பாய். பிறகு பலமான காற்றில் ஒரு பசுமையான இலையைப் போல உயிர்த்துடிப்போடு இருக்கும். முழு சிலிர்ப்பும் தொலைந்து போய் இருக்கும்.

பாதுகாப்பற்ற தன்மையுடன் இருப்பதனாலேயே வாழ்க்கை அழகாக இருக்கிறது. இறப்பினாலேயே வாழ்க்கை அழகாக இருக்கிறது. அதைத் தவறவிட முடியும் என்பதாலேயே வாழ்க்கை அழகாக இருக்கிறது. நீ அதைத் தவறவிட முடியாது என்றால், எல்லாமும் உன்மீது திணிக்கப்பட்டால், பின்பு வாழ்க்கை கூட சிறைவாசமாகி விடுகிறது. நீ அதை அனுபவிக்க இயலாது. நீ பரவசமாக இருக்கும்படி கட்டளையிடப்பட்டால், சுதந்திரமாக இருக்கும்படி ஆணையிடப்பட்டால் அப்போது பரவசமும், சுதந்திரமும் காணாமல் போய்விடுகின்றன.

நான் என்னைக் கைவிட அனுமதித்துவிட்டால் பிரபஞ்சம் உண்மையிலேயே என்னைப் பாதுகாக்குமா? முயற்சி செய்து பார்.ஒரே ஒரு விஷயம்தான் நான் உனக்கு சொல்லமுடியும். நான் உனது பயத்திடம் பேசவில்லை என்பதை நினைவில் கொள். உங்கள் எல்லோரிடமும் நான் ஒரே ஒரு விஷயம்தான் சொல்லமுடியும். அது என்னவென்றால் அதை முயற்சித்துப் பார்த்தவர்கள் பிரபஞ்சம் பாதுகாப்பதை கண்டறிந்திருக்கிறார்கள். ஆனால், நான் உனது பயத்திடம் பேசவில்லை. நான் வெறுமனே உன்னை சாகசத்திற்கு ஊக்கப்படுத்துகிறேன். அவ்வளவே. உன்னை சாகசத்தை நோக்கி அழைத்துச்செல்கிறேன், அதை ஒப்புக்கொள்ள வைக்கிறேன். நான் உன்னுடைய பயத்திடம் பேசவில்லை. முயற்சி செய்த அனைவரும் பாதுகாப்பு எல்லையற்றது என்று கண்டறிந்திருக்கிறார்கள்.

ஆனால், பிரபஞ்சம் உனக்கு கொடுக்கும் பாதுகாப்பை உன்னால் புரிந்து கொள்ள முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை. நீ கேட்கும் விதமான பாதுகாப்பை பிரபஞ்சத்தால் கொடுக்க இயலாது. ஏனெனில், நீ என்ன கேட்கிறாய் என்பது

உனக்கே தெரியாது. நீ இறப்பைக் கேட்கிறாய். பிணம் மட்டுமே முழுக்க முழுக்க பாதுகாப்பானது. உயிர்ப்புடன் இருப்பது எப்போதும் அபாயத்தில்தான் இருக்கிறது. உயிரோடு இருப்பது ஒரு அபாயம்தான். அதிக உயிர்ப்போடு இருப்பது அதிக அபாயம், அதிக ஆபத்து, அதிக சாகசம்.

நீட்சே அவரது சுவரில், 'அபாயமாக வாழ்' என்ற பொன் மொழியை எழுதி வைத்திருந்தார். 'ஏன் இதை எழுதியிருக்கிறீர்கள்?' என்று யாரோ அவரைக் கேட்டார்கள். 'எனக்கு நினைவு படுத்துவதற்காக! ஏனெனில் என்னுடைய பயம் பெரியது' என்று நீட்சே கூறினார்.

ஆபத்தில் வாழ். ஏனெனில் வாழ்வதற்கு அது ஒன்றே வழி. வேறுவழியில்லை. அறியாதவற்றின் அழைப்பை எப்போதும் கேள். மேலும் நகர்ந்து கொண்டேயிரு. எங்கேயும் தங்க எப்போதும் முயற்சி செய்யாதே. ஓரிடத்தில் இருப்பது இறப்பதாகும். அது ஒரு வளர்ச்சியற்ற இறப்பு.

நான் ஒரு சிறு பெண்ணின் பிறந்தநாள் விழாவுக்குச் சென்றிருந்தேன். அங்கு பல விளையாட்டு பொம்மைகள், பல பரிசுகள் இருந்தன. அந்தப் பெண் உண்மையிலேயே மிகவும் மகிழ்ச்சியாக இருந்தாள். அவளுடைய நண்பர்கள் அனைவரும் அங்கிருந்தனர். அவர்கள் நடனமாடிக் கொண்டிருந்தனர். திடீரென அவள் அவளது தாயிடம், அம்மா, நீங்கள் முன்பு உயிர்ப்போடு இருந்த காலத்தில் இப்படிப்பட்ட அழகான நாட்கள் இருந்தனவா என்று கேட்டாள்.

மக்கள் மரணத்திற்கு முன்பே இறந்து விடுகின்றனர். மக்கள் பாதுகாப்பில், வசதியில், சுகத்தில் தங்கி விடுகின்றனர். மக்கள் சமாதி போன்றதொரு இருப்பில் தேங்கி விடுகின்றனர்.

நான் உனது பயத்திடம் பேசவில்லை.

நான் என்னைக் கைவிட அனுமதித்துவிட்டால் பிரபஞ்சம் உண்மையிலேயே என்னைப் பாதுகாக்குமா? அது எப்போதும்

பாதுகாத்து வந்துள்ளது. மேலும் அது உன்னிடம் மட்டுமே வேறுவிதமாக இருக்கப்போகிறது என்பதை என்னால் நினைத்துப் பார்க்கமுடியவில்லை. நீ ஒரு விதிவிலக்காக இருக்கப்போகிறாய் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. அது எப்போதும் அப்படித்தான் இருந்திருக்கிறது. அதனிடம் தன்னை ஒப்படைத்துக் கொண்ட, அதனிடம் விட்டுவிட்ட, அதனிடம் சரணாகதி அடைந்த அனைவரையுமே பிரபஞ்சம் பாதுகாத்து வந்துள்ளது.

இயற்கையைப் பின்தொடர். உனது உள்ளார்ந்த இருப்பைப் பின்தொடர்.

நான் ஒரு நிகழ்ச்சியைப் பற்றி படித்துக் கொண்டிருந்தேன். அது எனக்கு மிகவும் பிடித்திருந்தது. கொலம்பியா பல்கலைகழகத்தில் அது வசந்தகாலம். விதை போடப்பட்ட புல்வெளிகளில் ‘நடக்காதீர்கள்’ என்ற தட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. மாணவர்கள் எச்சரிக்கைகளையும் சிறப்பு வேண்டுகோளையும் புறக்கணித்து விட்டு, தொடர்ந்து புல்வெளிகளில் நடந்து கொண்டிருந்தார்கள். பிரச்சனை பெரிதாகி, கட்டிட மேற்பார்வை யாளர்கள் இந்த பிரச்சனையை அப்போது தலைவராக இருந்த டிவிஸ்ட் இஸ்ஸென்ஹவர் என்பவரிடம் கொண்டு சென்றார்கள்.

அவர், ‘நேரடியாக எங்கே செல்கிறார்களோ அங்கே செல்வதற்கு இதுதான் விரைவான பாதையாக இருக்கிறது என்பதை கவனித்தீர்களா? மாணவர்கள் எந்தப் பாதையில் செல்கிறார்கள் என கண்டறிந்து அதை ஏன் நடைபாதையாக மாற்றக்கூடாது?’’ எனக் கேட்டார்.

வாழ்க்கை இப்படித்தான் இருக்க வேண்டும். சாலைகள், வழிகள், கொள்கைகள் முன்பே முடிவு செய்யப்படக் கூடாது.

உன்னைக் கைவிட அனுமதி. இயல்புடன் செல். அது உனது வழியாக இருக்கட்டும். நட, நடப்பதன் மூலம் உனது வழியை ஏற்படுத்து. நெடுஞ்சாலைகளை பின்பற்றாதே. அவை இறந்தவை. நீ அவைகளில் எதையும் கண்டறியப் போவதில்லை. ஏற்கனவே எல்லாம் அகற்றப்பட்டு விட்டன. நீ ஒரு நெடுஞ்சாலையைப்

பின்பற்றினால், நீ இயற்கையிலிருந்து விலகிச் செல்கிறாய். இயற்கைக்கு எந்த வழியும் ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட கட்டமைப்பும் இல்லை. அது ஆயிரத்தொரு வழிகளில் பாய்கிறது, ஆனால் எல்லாம் தன்னிச்சையானது. சென்று கவனி. கடற்கரையில் அமர்ந்து கடலை கவனி. லட்சக்கணக்கான அலைகள் எழுகின்றன. ஒவ்வொரு அலையும் தனிப்பட்டது. வித்தியாசமானது. நீ ஒன்று போலவே இருக்கும் இரு அலைகளைக் கண்டறிய முடியாது. அவை எந்த கட்டமைப்பையும் பின்பற்றுவதில்லை.

புகழ் கொண்ட எந்த மனிதனும் எந்த கட்டமைப்பையும் பின்தொடர மாட்டான்.

மக்கள் என்னிடம் வந்து, 'எங்களுக்கு வழி காட்டுங்கள்'. என்று கூறுகிறார்கள். 'அதைக் கேட்காதீர்கள். நான் எப்படி நடப்பது என்று உங்களுக்கு காட்ட மட்டுமே முடியும். நான் உங்களுக்கு வழி காட்டமுடியாது'. தயவுசெய்து வித்தியாசத்தை காண முயற்சி செய்யுங்கள். நான் உங்களுக்கு எப்படி நடப்பது' எப்படி ஆணித்தரமாக நடப்பது என்று காட்டமுடியும். நான் உங்களுக்கு வழிகாட்ட முடியாது. ஏனெனில் வழி கோழைகளுக்கானது. கைகால் செயலிழந்தவர்களுக்கு, எப்படி நடப்பது என தெரியாதவர்களுக்குத்தான் வழி உள்ளது. எப்படி நடப்பது என அறிந்தவர்கள் காட்டுக்குள் செல்கிறார்கள், மேலும் நடப்பதன் மூலம் அவர்கள் அவர்களுடைய வழியைத் தாங்களே உருவாக்கிக் கொள்கிறார்கள்.

மேலும் ஒவ்வொருவரும் சத்தியத்தை வேறுபட்ட வகையில் அடைகின்றனர். நீ ஒரு கும்பலாக அடையமுடியாது. மேலும் நீ ஒரு கூட்டமாக அடையமுடியாது. நீ தனியாக முற்றிலும் தனியாக அடையவேண்டும்.

வெறுமனே நீ நீயாக இருப்பதை தவிர வேறொன்றும் நான் கற்றுத் தருவதில்லை. என்னைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம். ஏனெனில் பயத்தின் விளைவாக நான் உனக்காக வாழும்

முறையை, ஒரு ஒழுக்கத்தை, ஒரு கட்டுப்பாடான வாழ்க்கையை, ஒரு பாணியை தரவேண்டும் என்று நீ விரும்புகிறாய்.

என்னைப் போன்ற மனிதர்கள் எப்போதும் தவறாக புரிந்து கொள்ளப்பட்டே வந்திருக்கிறார்கள். ஒரு லாவோட்சு, ஒரு ஜராதுஸ்ட்ரா, ஒரு இப்பிகோரஸ் எப்போதும் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கிறார்கள். மிகவும் மதத்தன்மை வாய்ந்த மக்கள் மதத்தன்மை இல்லாதவர்களாகவே எண்ணப்பட்டுள்ளனர். ஏனெனில், யாராவது உண்மையாகவே மததன்மையோடு இருந்தால் அவர் உனக்கு சுதந்திரத்தைக் கற்றுத்தருவார், உனக்கு அன்பை கற்றுத் தருவார். அவர் உனக்கு சட்டத்தை கற்று தரமாட்டார். அன்பை கற்றுத் தருவார். அவர் உனக்கு இறந்து போன கட்டமைப்பான வாழ்க்கையைக் கற்றுத்தர மாட்டார். அவர் குழப்பத்தை, சட்டமில்லாத நிலையைக் கற்றுத்தருவார். ஏனெனில், குழப்பத்தில் இருந்து மட்டுமே விண்மீன்கள் பிறக்கின்றன. அவர் உனக்கு எவ்வாறு முற்றிலும் சுதந்திரமாக இருப்பது என கற்றுத் தருவார்.

அங்கு பயம் உள்ளது. உனக்குத் தெரியும். சுதந்திரத்தின் பயம். இல்லாவிடில் ஏன் உலகம் எங்கும் இவ்வளவு சிறைச்சாலைகள் இருக்க வேண்டும்? மக்கள் ஏன் கண்ணுக்குத் தெரியாத சிறைச் சாலைகளை அவர்களுடைய வாழ்வில் சுமக்க வேண்டும்? இரண்டு விதமான கைதிகள் மட்டுமே இருக்கிறார்கள். பார்க்கக்கூடிய சிறைச்சாலையின் இருக்ககூடிய ஒரு சிலரை நான் சந்தித்துள்ளேன். மற்றவர்கள் பார்வைக்கு புலப்படாத சிறைச்சாலையில் உள்ளனர். அவர்களே அவர்களுடைய சிறைச்சாலையை சுமந்து கொண்டுள்ளனர். மனச்சாட்சி, ஒழுக்கம், பாரம்பரியம், இந்தப் பெயர், அந்தப் பெயர் கட்டுப்பாடுகளுக்கும் அடிமைத்தனத்திற்கும் ஆயிரக்கணக்கான பெயர்கள்.

சுதந்திரத்திற்கு பெயர் கிடையாது. பலவிதமான சுதந்திரங்கள் கிடையாது. சுதந்திரம் என்பது ஒன்றுதான். நீ கவனித்திருக்கிறாயா? சத்தியம் ஒன்றுதான், பொய்கள் கோடிக்கணக்கானவை. நீ ஆயிரக் கணக்கான வழிகளில் பொய் சொல்லமுடியும். உண்மையை

ஆயிரக்கணக்கான வழிகளில் சொல்லமுடியாது. சத்தியம் எளிமையானது, ஒரு வழி போதுமானது. அன்பு ஒன்றுதான், சட்டங்கள் கோடிக்கணக்கானவை. சுதந்திரம் ஒன்றுதான், சிறைகள் பலவிதமானவை.

மேலும் நீ கவனமாக இல்லாவிட்டால் நீ ஒருபோதும் சுதந்திரமாக நகரமுடியாது. அதிகபட்சமாக நீ சிறைச்சாலைகளை மாற்றலாம். ஒரு சிறைச்சாலையிலிருந்து இன்னொரு சிறைச்சாலைக்குச் செல்லலாம். இரண்டிற்கும் இடையே நடந்து செல்லும் நடையை அனுபவிக்கலாம். அதுதான் உலகத்தில் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு கத்தோலிக்கர் கம்யூனிஸ்டாகலாம், ஒரு இந்து ஒரு கிறிஸ்தவராகலாம், ஒரு முகம்மதியன் இந்துவாகலாம். மேலும் அவர்கள் அதை அனுபவிக்கிறார்கள். ஆமாம், அவர்கள் சிறைச்சாலைகளை மாற்றும்பொழுது சிறிதளவு சுதந்திரம் உணரப்படுகிறது. ஒரு சிறைச்சாலையிலிருந்து மற்றொரு சிறைச் சாலைக்கு போகும் வழியில் அவர்கள் நன்றாக உணர்கிறார்கள். பிறகு அவர்கள் வேறொரு பெயரில் உள்ள அதே பொறியில் சிக்கிக் கொள்கிறார்கள். அனைத்து கருத்துக்களும் சிறைகளே. எனது கருத்தையும் சேர்த்து அவைகளைப் பற்றி கவனமாக இருப்பதற்கு நான் உனக்கு கற்றுத் தருகிறேன்.

## அன்பு உன்னை எவ்வழியில் நகரச் சொல்கிறதோ அவ்வழியில் நகர்

***கேள்வி:ரூமியின் கவிதையில் உள்ள ஒரு வரியில் ரூமி 'உள்ளே செல். பயம் உன்னைச் செலுத்தும் வழியில் செல்லாதே!' என்று கூறுகிறார். சில சமயங்களில் தியானத்தில் நான் என்னவென்று சொல்லமுடியாத ஒரு வெற்றுவெளியை நான் தொடுகிறேன். மேலும் அங்கொரு மிகப்பெரிய பயம் உள்ளது. இந்த பயத்தை புரிந்து கொள்ளவும், அதனுடன் நட்பு கொள்ளவும் நீங்கள் எனக்கு உதவ முடியுமா?***

**ஓஷோ:** மௌலானா ரூமியின் வார்த்தைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. ஜலாலுதீன் ரூமி, தொட்டு நிலைமாற்றிய இதயங்கள் ஏகப்பட்டவை. அந்த அளவு நிலைமாற்றியவர்கள் மிகச்சிலரே. சூஃபிகளின் உலகத்தில் ரூமி ஒரு பேரரசர். அவருடைய வார்த்தைகள் வெறும் வார்த்தைகளாக இல்லாமல் அழகான மௌனத்தின் மூலங்களாக, உள் உலகத்தின் எதிரொலியாக, உள் ஆழத்தின் பாடல்களாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும். அவர் 1200 வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்தவர்.

அவருடைய தியானமுறை ஒரு சிறப்புவகை தியானம். அது ஒருவிதமான சுழலுதல். சிறுகுழந்தைகள் சுழலுவதைப்போல. ஓரிடத்தில் நின்றுகொண்டு அவர்கள் சுழன்று கொண்டிருப்பார்கள். உலகமெங்கும் உள்ள சிறுகுழந்தைகள் அதனைச் செய்வார்கள். அவர்களிடம் பெரியவர்கள், 'இப்படி எதற்காகச் செய்கிறாய்? உனக்கு தலைசுற்றும். நீ விழுந்துவிடுவாய். நீ உன்னையே காயப்படுத்திக் கொள்வாய்' என்று கூறி அதை நிறுத்திவிடுவார்கள்.

ஜலாலுதீன் ரூமி சுழலுதலை ஒரு தியானமாக்கினார். தியானம் செய்பவர் உடல் அவரை அனுமதிக்கும்வரை மணிநேரக்கணக்கில் சுழலுவார். அவர் சுயமாக நிறுத்துவதில்லை. சுழன்று கொண்டிருக்கும்போது அவர் தன்னையே நிலையாக, மௌனமாக, ஒரு புயல்காற்றின் மையமாக பார்க்குமொரு கணம் வருகிறது. மையத்தைச் சுற்றிலும் உடல் நகர்கிறது. ஆனால் அங்கே நகராத ஒருவெளி இருக்கிறது. அதுதான் அவருடைய இருப்பு.

ரூமி அவரே 36 மணிநேரங்கள் தொடர்ந்து சுழன்று விழுந்து விட்டார். ஏனெனில் உடலால் இனிமேலும் சுழல முடியவில்லை. ஆனால் அவர் அவரது கண்களைத் திறந்தபொழுது அவர் வேறொரு மனிதன். பார்ப்பதற்கு நூற்றுக்கணக்கான மக்கள் கூடிவிட்டனர். பலர் அவரை எப்போதும் பைத்தியம் என்றே நினைத்தனர். சுழலுவதன் பொருளென்ன? இது ஒரு பிரார்த்தனையென்று யாரும் சொல்லமுடியாது. யாரும் இது மதத்துடன், ஆன்மீகத்துடன் ஏதாவது ஒருவழியில் தொடர்புகொண்டது என்று சொல்ல

முடியாது. ஆனால் 36 மணிநேர சுழலுதலுக்குப் பிறகு மிகவும் ஒளி பொருந்திய, மிகவும் பிரகாசமான, புத்தம்புதிய, மிகவும் புத்துணர்வான. புதிதாகப் பிறந்த, புதிய தன்னுணர்விலிருக்கும் ரூமியை அவர்கள் பார்த்தபொழுது அவர்களால் அவர்களது கண்களையே நம்பமுடியவில்லை. நூற்றுக்கணக்கான மக்கள் வருத்தத்தில் அழுதனர். ஏனெனில், அவர்கள் அவரை கிறுக்கனே என நினைத்தனர். உண்மையில் அவர் சரியாக இருந்தார். அவர்கள்தான் கிறுக்கர்கள்.

இந்தப் பனிரெண்டு நூற்றாண்டுகளாக அந்த நீரோடை உயிரோடிருக்கிறது. ஒரு சில ஆன்மீக வளர்ச்சி குறித்த அமைப்புகள் மட்டுமே இவ்வளவு நீண்டகாலம் தொடர்ந்து உயிரோடு இருந்திருக்கின்றன. இன்னமும் நூற்றுக்கணக்கான டெர்விஸ்கள் இருக்கிறார்கள். டெர்விஸ் என்பது ஆன்மீக சாதகனைக் குறிக்கும் சூஃபி வார்த்தையாகும். வெறும் சுழலுதல் மூலம் மட்டுமே நீ உன்னை அறியமுடியும் என்பதை அனுபவித்துப் பார்க்கும்வரை உன்னால் நம்ப முடியாது. எந்த கடுமையான நோன்புமில்லாமல், எந்த சித்ரவதையுமில்லாமல் ஆனால் உன்னுடைய உள்ளார்ந்த இருப்பின் அனுபவத்தால் நீ பிரபஞ்சத்தின் வேறொரு தளத்திற்கு அழிபவனிலிருந்து, அழிவற்றவனாக நிலைமாற்றப்படுகிறாய். இருட்டு மறைந்துவிடுகிறது. மேலும் அங்கு வெறுமனே நித்தியஒளி இருக்கிறது.

ரூமியினுடைய வார்த்தைகள் மிகவும் கவனமாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டிய ஒன்று. ஏனெனில், அவர் அதிகம் பேசவில்லை. வெறும் ஒரு சில சிறு கவிதைகள் மட்டுமே. 'உள்ளே செல், ஆனால் பயம் உன்னைச் செலுத்தும் வழியில் செல்லாதே!' என்ற அவரது வாக்கியம் மிகவும் அழகானது.

பயம் உன்னைச் செலுத்தும் வழியில் செல்லாதே. அன்பு உன்னைச் செலுத்தும் வழியில் செல். மகிழ்ச்சி உன்னைச் செலுத்தும் வழியில் செல். பயத்தின் காரணமாக அல்ல, ஏனெனில், மதங்கள் என சொல்லப்படுபவை அனைத்தும் பயத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அவர்களுடைய கடவுள் என்பது பயத்தைத் தவிர

வேறல்ல. மேலும் அவர்களுடைய சொர்க்கமும், நரகமும் பயம் மற்றும் ஆசையின் பிரதிபலிப்புகளே அன்றி வேறல்ல.

ரூமியினுடைய வாக்கியம் புரட்சிகரமானது. 'பயத்தின் காரணமாக நகராதே'. எல்லா மதங்களும் மக்களிடம் கடவுளுக்கு பயப்படு என்று கூறுகின்றன. மகாத்மா காந்தி 'நான் கடவுளைத் தவிர வேறு யாருக்கும் பயப்படுவதில்லை!' என்று கூறுவது வழக்கம். நான் இதைக் கேள்விப்பட்ட போது யார் வேண்டுமானாலும் சொல்லக்கூடிய மடத்தனமான வாக்கியம் இது என்றேன். நீ எல்லோருக்கும் பயப்படலாம். ஆனால் கடவுளுக்கு பயப்படாதே. ஏனெனில், கடவுளை அன்பின் மூலமாக மட்டுமே அடையமுடியும். கடவுள் ஒரு மனிதனல்ல. ஆனால் பிரபஞ்ச இதயத்துடிப்பு. நீ அன்போடு பாடமுடிந்தால், அன்போடு ஆடமுடிந்தால், சுழலுதல் போன்ற சாதாரண செயலை அன்போடு செய்ய முடிந்தால் இருப்பு மற்றும் பிரபஞ்சத்தின் உள்ளார்ந்த ஆழத்தை அடைவதற்கு மகிழ்ச்சியும், கொண்டாட்டமுமே போதுமானது.

நீங்கள் எல்லோரும் பயத்தின் விளைவாக வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். உன்னுடைய உறவுகள் பயத்தினுடைய விளைவு. வானத்தை மறைத்திருக்கும் கருமேகத்தைப் போல பயம் மிக அதிகமாக உன்னுடைய வாழ்க்கையை மறைத்திருக்கிறது. நீ சொல்ல விரும்பாத விஷயங்களைச் சொல்கிறாய். ஆனால் பயம் உன்னை அவற்றைச் சொல்லச் செய்கிறது. நீ செய்ய விரும்பாத செயல்களைச் செய்கிறாய். பயம் உன்னை அவற்றைச் செய்ய வைக்கிறது. அதைப்பார்ப்பதற்கு சிறிதளவு புத்திசாலித்தனம் போதுமானது.

கோடிக்கணக்கான மக்கள் அவர்களால் வடிக்கப்பட்ட சிலைகளையே வழிபடுகின்றனர். அவர்கள் அவர்களுடைய கடவுள்களை உருவாக்கி, பிறகு வழிபடுகிறார்கள். அதற்கு மிகப் பெரும் பயம்தான் காரணமாக இருக்கவேண்டும். ஏனெனில், உண்மையில் கடவுளை நீ எங்கு கண்டுபிடிக்க முடியும்? அழகான சலவைக்கல்லில் கடவுளின் உருவத்தைச் செதுக்கி வழிபடுவது

எளிமையான வழி. மேலும் யாரும் இதை வடிகட்டிய முட்டாள்தனம் என நினைப்பதில்லை. ஏனெனில், எல்லோரும் அதைத்தான் வெவ்வேறு வகைகளில் செய்கிறார்கள். யாராவது ஒருவர் கோவிலில் செய்கிறார், யாராவது ஒருவர் மசூதியில் செய்கிறார், யாராவது ஒருவர் தேவாலயத்தில் செய்கிறார். அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. அடிப்படையான விஷயம் அதேதான். பயத்தின் விளைவாகவே நீ செய்கிறாய். உனது பிரார்த்தனைகளும் பயத்தால் நிறைந்துள்ளன.

ரூமி ஒரு புரட்சிகரமான அசாதாரணமான வாக்கியத்தை கூறுகிறார். 'உள்ளே செல், ஆனால் பயம் செலுத்தும் வழியில் செல்லாதே'. பிறகு எந்த வழியில் உள்ளே செல்வது? ஏன் விளையாட்டுத்தன்மையோடு செல்லக்கூடாது? உன்னுடைய மதத்தை ஏன் ஒரு விளையாட்டுத்தன்மையுடையதாக ஆக்கிக் கொள்ளக்கூடாது? ஏன் மிகவும் இறுக்கமாக இருக்க வேண்டும்? ஏன் சிரித்துக்கொண்டே நகரக்கூடாது? சிறுகுழந்தைகள் எந்த காரணமுமில்லாமல் பட்டாம்பூச்சிகளின் பின்னால் ஓடுவதைப் போல ஏன் இருக்கக்கூடாது? நிறங்கள் தரும் மலர்ச்சியும், மலர்களின் அழகும், பட்டாம்பூச்சியும் அவர்கள் ஆனந்தத்தில் திளைக்கப் போதுமானவை.

ஒவ்வொரு 24 மணி நேரத்திலும் பயமற்ற ஒருசில கணங்களைக் கண்டறி. அதன் பொருள் என்னவென்றால், அந்த கணங்களில் நீ எதையும் கேட்பதில்லை. நீ எந்தப் பரிசையும் கேட்பதில்லை, நீ எந்தத் தண்டனையைப்பற்றியும் கவலைப்படுவதில்லை. நீ வெறுமனே உள்ளே செல்லுதலை, சுழலுதலை அனுபவித்துக் கொண்டிருக்கிறாய்.

உண்மையில் தொடக்கத்தில் மட்டுமே சிறிது கடினமாகத் தோன்றும். நீ சிறிது உள்ளே சென்றபிறகு நீ தானாகவே மகிழ்ச்சியாக விளையாட்டுத்தன்மையுடன் பிரார்த்தனை நிறைந்தவனாகி விடுவாய். நீ இதுவரை அறிந்திராத ஒரு நன்றியுணர்வு உன்னில் எழுகிறது. மேலும் உன்னுடைய உள்ளார்ந்த வானமாகிய வெளி திறக்கிறது. அது எல்லையற்றது.

உன்னுடைய உள்ளார்ந்த வானம் வெளிவானத்தை விட செழிப்புமிக்கது. அது அதற்கே உரிய விண்மீன்களையும், அதற்கே உரிய நிலவையும், அதனுடைய சொந்த கிரகங்களையும் கொண்டு அதற்கேயுரிய பிரமாண்டத்தைக் கொண்டுள்ளது. அது வெளியே பார்க்கும் பிரபஞ்சம் அளவிற்கே பிரமாண்டமானது. நீ இரு பிரபஞ்சங்களுக்கிடையே வெறுமனே நின்று கொண்டிருக்கிறாய். ஒன்று உனக்கு வெளியே உள்ளது. மற்றொன்று உனக்கு உள்ளே உள்ளது. வெளியே உள்ள பிரபஞ்சம் பொருட்களைக் கொண்டுள்ளது. மேலும் உள்ளேயுள்ள பிரபஞ்சம் தன்னுணர்வையும், பரவசத்தையும், ஆனந்தத்தையும் கொண்டுள்ளது.

'உள்ளே செல். ஆனால் பயம் செலுத்தும் வழியில் செல்லாதே'. ஏனெனில், பயத்தால் உள்ளே செல்லமுடியாது.

பயத்தால் ஏன் உள்ளே செல்லமுடியாது? பயத்தால் தனியாக இருக்க முடியாது. உள்ளே நீ தனியாக இருந்தாக வேண்டும். பயத்திற்கு ஒரு கூட்டம் தேவை. பயத்திற்கு தோழமை தேவை. தோழமை, நண்பர்கள், எதிரிகள் கூட போதும். ஆனால் தனியாக இருப்பது, உள்ளே செல்வது என்பது... நீ உன்னுடன் யாரையும் கூட்டிச் செல்லமுடியாது. நீ மென்மேலும் தனியாக இருந்தாக வேண்டும். நீ யாரையும் கூட்டிச் செல்லமுடியாதது மட்டுமல்ல, நீ எதையும் எடுத்துச் செல்லமுடியாது. உன்னுடைய சொத்து, உன்னுடைய அதிகாரம், உன்னுடைய கௌரவம் என எதையும் நீ எடுத்துச் செல்லமுடியாது. உடைகளைக்கூட உள்ளே உன்னால் எடுத்துச் செல்லமுடியாது. நீ அம்மணமாக தனியாகச் சென்றாக வேண்டும். அதனால்தான் பயத்தால் உள்ளே செல்ல முடியாது. அது வெளியே செல்கிறது.

பயம் பணத்தை நோக்கிச் செல்கிறது. பயம் அதிகாரத்தை நோக்கிச் செல்கிறது. பயம் கடவுளை நோக்கிச் செல்கிறது. பயம் உள்ளே செல்வதைத் தவிர்த்து எல்லா திசைகளிலும் செல்கிறது.

உள்ளே செல்வதற்கு பயமற்றதன்மையே முதல்தேவை.

மேலும் பயத்துடன் எப்படி நட்புடன் இருப்பது என்று கேட்டுக் கொண்டு அலைகிறாய். ஒருவர் இருளுடன், இறப்புடன் அல்லது பயத்துடன் நட்புக் கொள்ளக் கூடாது. ஒருவர் அதை விட்டுவிட வேண்டும். ஒருவர் அதற்கு எப்போதைக்குமாக விடை கொடுத்துவிட வேண்டும். உன்னுடைய பிணைப்பும் நட்பும் அதை ஆழமாக்கும்.

பயத்துடன் நட்பு கொள்வதன் மூலம் உள்ளே செல்வதற்கு தயாராவாய் என்று எண்ணாதே. நட்பு கொண்ட பயம் கூட அதைத் தடுக்கும். உண்மையில் அது அதிகமாகத் தடை செய்யும். அது உன்னை நட்பான முறையில் தடுக்கும். அது, 'இப்படி ஒரு விஷயத்தை செய்யாதே. உள்ளே ஒன்றுமில்லை. நீ சூனியத்திற்குள் விழுந்துவிடுவாய். அந்த சூனியத்திலிருந்து வெளியே வருவது இயலாத காரியம். உனது உள்ளே செல்லும் தன்மை குறித்து கவனமாக இரு, பொருட்களை பிடித்துக் கொள்' என்று அறிவுரை கூறும். நீ அதை நண்பனாக்கிக் கொள்ள வேண்டியதில்லை. பயம் புரிந்து கொள்ளப்பட வேண்டும். பின்பு அது மறைந்து விடும்.

நீ எதைக் கண்டு பயப்படுகிறாய்? பிறக்கும்போது நீ அம்மணமாக பிறந்தாய். எந்த வங்கியிருப்பையும் கூட கொண்டு வரவில்லை. ஆனால் நீ பயப்படவில்லை. நீ உலகத்திற்குள் முற்றிலும் அம்மணமாக வந்தாய். ஆனால் ஒரு பேரரசரைப் போல நுழைந்தாய். ஒரு குழந்தை இந்த உலகத்தில் நுழைவது போன்ற வழியில் ஒரு பேரரசர் கூட நுழையமுடியாது. உள்ளே நுழைவதும் அதைப் போன்றதே. இது இரண்டாவது பிறப்பு. நீ திரும்பவும் ஒரு குழந்தையாகிறாய். அதே வெகுளித்தனம், அதே அம்மணத்தன்மை. மேலும் அதே பிடித்து வைத்துக் கொள்ளாத தன்மை. நீ எதற்காக பயப்பட வேண்டும்? வாழ்க்கையில் நீ பிறப்பைக் கண்டு பயப்பட முடியாது. அது ஏற்கனவே நிகழ்ந்துவிட்டது. இப்போது அதை ஏதும் செய்யமுடியாது. நீ வாழ்க்கையைக்கண்டு பயப்படமுடியாது, அது ஏற்கனவே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. நீ இறப்பைக் கண்டு பயப்படமுடியாது. நீ என்ன செய்தாலும் அது நிகழப்போகிறது. எனவே என்ன பயம்?

மிகவும் படித்தவர்கள் கூட என்னிடம் எப்போதும், 'இறப்பிற்குப்பின் என்ன நிகழப்போகிறது என்று நீங்கள் கவலைப் பட்டதுண்டா?' என்று கேட்டிருக்கிறார்கள். நான் அவர்கள் படித்தவர்கள்தானா என்று எப்போதும் ஆச்சரியப்பட்டிருக்கிறேன். நான் அவர்களிடம், 'நான் பிறப்பெடுக்காத ஒருநாள் இருந்தது. அன்று கவலையில்லை. நான் பிறக்காதபோது ஒருகணம்கூட என்னவிதமான பிரச்சனை, என்னவிதமான பதட்டம், என்னவிதமான கஷ்டம் நான் சந்திக்க வேண்டியிருக்குமென்று நான் சிந்தித்ததேயில்லை. நான் இல்லை. அவ்வளவே. எனவே, இதுவும் அதைப்போலத்தான் இருக்கும். நீ இறக்கும்போது நீ இறந்துவிடுவாய்.'

கன்பூஸியஸ், 'நேரத்தை வீணடிக்காதே. நீ உன் கல்லறையில் படுத்துக் கொண்டிருக்கும்போது அதைப்பற்றி சிந்தி. இப்போது அதைப்பற்றி ஏன் கவலைப்படுகிறாய்?' என்று கூறுவார்.

நீ இறக்கும்போது என்ன நடக்கும் என்ற பயம் தேவையில்லாதது. என்ன நிகழப்போகிறதோ அது நிகழப்போகிறது. மேலும் எப்படியும் முன்பே அதைப்பற்றி எதையும் செய்ய முடியாது. உனக்குத் தெரியாது. எனவே எந்த வீட்டுப்பாடம் செய்வதைப் பற்றியும் கேள்வியில்லை. நீ என்னவிதமான கேள்விகளைச் சந்திப்பாய், என்னவிதமான மக்களைப் பார்ப்பாய், அவர்களுடைய மொழியை கற்றுக்கொள்ளல், அவர்களுடைய பழக்கவழக்கங்களைத் தெரிந்து கொள்ளுதல்..... நமக்கு எதுவும் தெரியாது. கவலைப்படத் தேவையில்லை. நேரத்தை வீணடிக்காதே.

ஆனால் இந்த பயம், ஏதோவொன்று நிகழப்போகிறதென்ற பயம். இறப்பிற்கு பிறகு நீ மிகவும் தனியாக இருப்பாய். நீ கல்லறையிலிருந்து அழைத்தாலும்கூட யாருக்கும் கேட்கப் போவதில்லை.

அமெரிக்காவில் 'உருளைக்கிழங்கு சங்கம்' என்ற ஒரு விஷயத்தைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அது

நாள்முழுவதும் வீட்டிலிருந்து டி.வி. பார்க்கும் மக்களுக்காக உருவாக்கப்பட்டது. அது 1982ல் தொடங்கப்பட்டது. அது பெரிய விஷயமாக மாறிவிட்டது. இரண்டு புத்தகங்கள் பிரசுரிக்கப் பட்டுள்ளன. உருளைக்கிழங்கு உதவிப் புத்தகம் மற்றும் உருளைக்கிழங்கு வாழ்க்கை வழிகாட்டி. அதற்கொரு தினசரி கடிதம் கூட உள்ளது. அதற்கு 'டியூபரின் குரல்' என்று பெயர். இந்த சங்கத்தை தோற்றுவித்தவர் உருளைக்கிழங்கு பொன்மொழியைப் பரப்புகிறார். 'டி.வி. பார்ப்பதென்பது தியானத்தின் அமெரிக்க வடிவம். நாம் அதனைக் கடந்தநிலை உண்ணுதல் என்று அழைக்கிறோம்.'

பயத்தின் விளைவாக மக்கள் எதை வேண்டுமானாலும் செய்யக்கூடும். உருளைக்கிழங்கு சங்கத்தின் உறுப்பினராகக்கூட ஆகக்கூடும். ஒருநாளைக்கு ஏழு எட்டு மணி நேரம் உருளைக்கிழங்கைப் போல ஷோபாவில் அமர்ந்து மேன்மேலும் குண்டாகிக் கொண்டே செல்கிறார்கள். சிறிது நேரத்திற்கொரு முறை குளிர்சாதன பெட்டிக்குச் செல்வதற்காக அவர்கள் எழுகிறார்கள். இல்லாவிடில் அவர்கள் அவர்களுடைய கடந்தநிலை உண்ணுதலைச் செய்கிறார்கள். இது ஒருபோதும் இவ்வளவு பெரிய அளவில் செய்யப்பட்டதில்லை.

மக்கள் ஏன் முழுநாளும் டி.வி. பார்க்கிறார்கள்? அவரின் மனநிலையைப் பார்க்கவேண்டும். இந்த மக்கள் தங்களைப் பற்றி எதுவும் தெரிந்து கொள்ள விரும்புவதில்லை. டி.வி. பார்ப்பதன் மூலம் இந்த மக்கள் தங்களைத் தவிர்க்க முயற்சி செய்கிறார்கள். டி.வி. ஒரு மாற்று. இல்லாவிடில் இவ்வளவு நேரம் வெறுமனே அமர்ந்திருக்கும்போது நீ உள்ளே பார்த்தாக வேண்டும். அதுதான் பயமே.

உள்முகம்? குளிர்சாதனப்பெட்டி வெளியே உள்ளது. உள்முகம்? காதலன் வெளியே உள்ளார், உள்முகத்தில் நீ எதையும் கண்டு பிடிக்க மாட்டாய். வேடிக்கை பார்க்க நீ கடைகளுக்குச் செல்ல முடியாது. நீ சூன்யத்தில் மூழ்கிவிடுவாய்,. இந்த சூன்யத்தில் மூழ்குதல் பயத்தை உருவாக்குகிறது.

ஆனால், பிரச்சனை என்னவென்றால் சூன்யத்தில் மூழ்குதலில் உள்ள அழகையும், பரவசத்தையும், ஆனந்தத்தையும் நீ அறியமாட்டாய். அதனால்தான் இந்த பயம் எழுகிறது. ஏனெனில், நீ உள்ளே விழும்போது எழும் இன்பத்தை நீ அறியமாட்டாய். அதற்கொரு சிறிய சுவை தேவைப்படுகிறது.

நீ நம்புவதை நான் விரும்பவில்லை. நீ பரிசோதனை செய்து பார்க்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

ஆயிரக்கணக்கான ஞானிகள் குறைந்தபட்சம் உத்தேசமாக உள்ளே ஏதோவென்றை அனுபவித்திருக்கிறார்கள். நீயும் ஒருபார்வை பார்க்கலாம். ஒருவேளை நீ ஏதோவொன்றை தவற விட்டுக் கொண்டிருக்கலாம்.

இது பயத்தைக் குறித்த கேள்வியல்ல. சிறிது புத்திசாலித்தனம் தேவை. பயத்தோடு நட்பல்ல. ஆனால் புத்திசாலித்தனம், அறியாதவற்றினுள் நுழையும் துணிச்சல் கொண்ட சாகசக்காரரின் இதயம் தேவை. அவர்கள் ஆசிர்வதிக்கப்பட்டவர்கள். ஏனெனில், அவர்கள் வாழ்க்கையின் அர்த்தத்தையும் முக்கியத்துவத்தையும் கண்டறிகிறார்கள். மற்றவர்கள் காய்கறிகளை வீணடிக்கிறார்கள். அவ்வளவே.

சிறிது புத்திசாலித்தனம், சிறிது நகைச்சுவை, ஒரு அன்பு கொண்ட இதயம், உன்னுடைய சொந்த இருப்பில் நுழைவதற்கு இதைவிடப் பெரிதாக எதுவும் தேவையில்லை. இறுக்கமான மக்கள், வருத்தமான ஆங்கில முகங்களுடன் வெளியே நின்று கொண்டேயிருக்கிறார்கள்.

சிறிது நகைச்சுவை, சிறிது சிரிப்பு, குழந்தை போன்ற வெகுளித்தனம். நீ இழப்பதற்கு என்ன இருக்கிறது? என்ன பயம்? நம்மிடம் ஏதுமில்லை. நாம் எதுவும் இல்லாமல் வந்தோம். எதுவும் இல்லாமல் செல்லப்போகிறோம். அது நடப்பதற்கு முன் உடைகளுக்கு பின் மறைந்திருக்கும் எலும்புக் கூட்டினுள் உள்ள இந்த மனிதன், பிறக்கும் இந்த மனிதன், இளமையாகும் இந்த மனிதன், காதலில் விழுந்து பின் ஒருநாள் இறந்து போய்விடும் இந்த

மனிதன் யார் என்று உள்ளே பார்க்கும் ஒரு சிறிய சாகசம். அவன் எங்கே போகிறான் என்று யாருக்கும் தெரியாது, தனது சொந்த இருப்பைத் தேடிப்பார்க்கும் ஒரு சிறிய ஆர்வம். அது மிகவும் இயல்பானது. அங்கு பயத்தைப் பற்றிய கேள்வியே இல்லை.

## சூன்யத்தன்மையில் மூழ்குதல்

***நீங்கள், சூன்யத்தன்மையில் மூழ்குதல் என்று சொல்லும் இந்த விஷயத்தைப் பற்றி இன்னும் கொஞ்சம் பேசமுடியுமா? எனக்கது வெற்றுவெளியில் விழுவதைப் போல உள்ளது. மேலும் அது என்னை மிகவும் பாதுகாப்பற்று நடுக்கமாக உணர வைக்கிறது***

'EMPTY' என்ற ஆங்கில வார்த்தை ஓய்வு, செய்யவேண்டியது ஏதுமில்லாதிருத்தல் என்ற அர்த்தம் கொடுக்கும் வார்த்தையின் வேரிலிருந்து வந்துள்ளது. நீ வேர் வார்த்தைக்கு சென்றால் அது மிகவும் அழகான வார்த்தை. வேர் மிகவும் கருவுள்ளது. அதன் பொருள் ஓய்வாக இருத்தல், செய்ய வேண்டியது ஏதுமில்லா திருத்தல். நீ செய்ய வேண்டியது ஏதுமில்லாமல் ஓய்வாக இருக்கும்பொழுது நீ காலியாக இருக்கிறாய்.

மேலும் நினைவு கொள், 'சும்மாயிருக்கும் மனம் சாத்தானின் கூடாரம்' என்னும் பழமொழி வெறும் முட்டாள்தனம். எதிரிடையானதே உண்மை. வேலை செய்து கொண்டிருக்கும் மனம் சாத்தானின் தொழிற்கூடம். வெற்றுமனம் கடவுளின் தொழிற்கூடம். சாத்தானின் தொழிற்கூடமல்ல. ஆனால் காலியாய் இருப்பது என்று நான் எதைக் குறிக்கிறேன் என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். தளர்வாக, ஓய்வுநிலையில், பதட்ட மில்லாமல், நகராமல், ஆசைப்படாமல், எங்கேயும் செல்லாமல், வெறுமனே இங்கேயிருத்தல், முற்றிலுமாக இங்கேயிருத்தல். வெற்றுமனம் ஒரு தூய்மையான இருப்புணர்வு. மேலும் அந்த தூய்மையான இருப்புணர்விலிருந்து எல்லாமும் சாத்தியம்.

ஏனெனில், முழு பிரபஞ்சமும் அந்தத் தூய்மையான இருப்புணர்விலிருந்துதான் வெளிவந்துள்ளது.

இந்த மரங்கள், அந்தத் தூய்மையான இருப்புணர்விலிருந்துதான் வளர்கின்றன. இந்த நட்சத்திரங்கள் அந்தத் தூய்மையான இருப்பணர்விலிருந்துதான் பிறக்கின்றன. நாம் இங்கே இருக்கிறோம். எல்லா ஞானிகளும் இந்தத் தூய்மையான இருப்புணர்விலிருந்து தான் வெளிவந்துள்ளனர். அந்தத் தூய்மையான இருப்புணர்வில் நீ கடவுளுக்குள் இருக்கிறாய். நீ கடவுளாகிறாய். ஏதாவது செய்தால் நீ விழுந்துவிடுகிறாய். ஏதாவது செய்தால் நீ கடவுளின் தோட்டத்திலிருந்து வெளியேற்றப்படுவாய். எதுவும் செய்யாமல் இருந்தால் நீ தோட்டத்திற்குள் திரும்ப வருகிறாய். எதுவும் செய்யாமலிருந்தால் நீ வீட்டிற்குள் திரும்பவருகிறாய்.

மனம் பொருட்களால், எண்ணங்களால் பீடிக்கப்படாமல் நிதர்சனத்தில் இருக்கும்போது, அது எதுவாக இருக்கிறதோ அதுவாகவே இருக்கிறது. மேலும் எது இருக்கிறதோ அதுவே சத்தியம். காலித்தன்மையில் மட்டுமே சந்திப்பும், ஒன்றுகலத்தலும் நிகழும். காலித்தன்மையில் மட்டுமே நீ சத்தியத்திற்கு திறக்கிறாய், சத்தியம் உன்னுள் நுழைகிறது. காலித்தன்மையில் மட்டுமே நீ சத்தியத்தை உள்வாங்கி வைத்துக்கொள்கிறாய்.

மனதின் மூன்று நிலைகள் இவைதான். முதல் நிலை, தன்னுணர்வும், விஷயங்களும். உன்னுடைய மனதில் எப்போதும் விஷயங்கள் உள்ளன. ஒரு எண்ணம் நகர்கிறது. ஒரு ஆசை எழுகிறது, கோபம், பேராசை, குறிக்கோள் என உன்னுடைய மனதில் எப்போதும் ஏதாவதொரு விஷயம் இருக்கிறது. மனம் எப்போதும் சும்மாயிருப்பதில்லை. நாள் முழுவதும் போக்குவரத்து சென்று கொண்டேயிருக்கிறது. விழித்திருக்கும்போது அது இருக்கிறது. தூங்கும்போதும் அது இருக்கிறது. விழித்திருக்கும் போது அதைச் சிந்தனையென்று சொல்கிறாய். தூங்கும்போது அதை கனவு என்று சொல்கிறாய். அது ஒரே செயல்பாடுதான். கனவு காணுதல் சிறிது ஆதிகால நிலையைச் சார்ந்தது அவ்வளவுதான். ஏனெனில், அது புகைப்படங்களில் சிந்திப்பது. அது கருத்துகளை

உபயோகிப்பதில்லை. அது புகைப்படங்களை உபயோகிப்பது. அது ஆதிகாலத்திற்குரியது. சிறுகுழந்தைகள் படங்களாகத்தான் சிந்திக்கும். ஆகவேதான் குழந்தைகளின் புத்தகங்களில் நீ பெரிய பெரிய படங்களையும், வண்ணங்களையும் பார்க்கலாம். ஏனெனில், அவர்கள் படங்கள் வாயிலாகத்தான் சிந்திப்பார்கள். புகைப்படங்கள் வாயிலாகத்தான் அவர்கள் வார்த்தைகளைக் கற்றுக் கொள்வார்கள். மெதுமெதுவாக அந்தப் படங்கள் சிறிதாகிக் கொண்டே போகின்றன. பிறகு அவை மறைந்துவிடும்.

ஆதிகால மனிதனும் புகைப்படங்களில் யோசிப்பான். அதிகபட்ச பழங்கால மொழிகள் படங்களாகவே உள்ளன. எடுத்துக்காட்டாக சீனமொழி படங்களால் ஆனது. அதில் எந்த எழுத்தும் இல்லை.

இரவில் நீ திரும்பவும் ஆதிகால மனிதனாகிறாய். உன்னுடைய பகலின் போலித்தனத்தை மறந்து நீ படங்களில் சிந்திக்கத் தொடங்குகிறாய். ஆனால் அதுவும் அதேதான், மேலும் மனோதத்துவவியலாளர்களின் புரிதல் மதிப்புக்குரியது. அவர் உனது கனவுகளுக்குள் பார்க்கிறார். பிறகு அங்கு அதிக உண்மையுள்ளது. ஏனெனில், நீ ஆதிகாலத்தைச் சேர்ந்தவனாக இருப்பதால் நீ யாரையும் ஏமாற்ற முயற்சி செய்யவில்லை. நீ மேலும் உண்மைத்தன்மையோடு இருக்கிறாய்.

பகலில் உன்னைச்சுற்றி உன்னுடைய பிம்பம் உன்னை மறைத்துள்ளது. அடுக்குகள் மேல் அடுக்குகளாக பிம்பங்கள். உண்மையான மனிதனைக் கண்டறிவது கடினம். நீ ஆழமாகத் தோண்டவேண்டும். மேலும் அது வலிக்கிறது. அந்த மனிதன் எதிர்ப்பான். ஆனால் இரவில் நீ உனது உடைகளைக் களைவதைப் போலவே உனது பிம்பத்தையும் களைந்துவிடுகிறாய். அது தேவையில்லை. ஏனெனில் நீ யாருடனும் தொடர்பு கொள்ள மாட்டாய். நீ உனது படுக்கையில் தனியாக இருப்பாய். நீ இந்த உலகத்தில் இருக்கமாட்டாய். நீ முற்றிலும் உனது தனிப்பட்ட தளத்தில் இருப்பாய். எனவே மறைக்கவும் தேவையில்லை. மேலும் நடிக்கவும் தேவையில்லை. அதனால்தான் மனவியலாளர்கள்

உன்னுடைய கனவுலகுக்குள் போக முயற்சி செய்கிறார்கள். ஏனெனில், அவை தெள்ளத்தெளிவாக நீ யார் என்பதை காட்டிக்கொடுக்கின்றன.

ஆனால் அது வேறுமொழியில் விளையாடப்படும் அதே விளையாட்டுத்தான். விளையாட்டு வித்தியாசமானதல்ல. இது மனதின் சாதாரணநிலை. மனம் மற்றும் பொருட்கள் தன்னுணர்வு மற்றும் பொருட்கள்.

மனதின் இரண்டாவது நிலை, பொருட்களற்ற தன்னுணர்வு. தியானமென்பது அதுதான். நீ முழுமையாக விழித்திருக்கிறாய். மேலும் அங்கு ஒரு இடைவெளி, ஒரு இடைவேளை உள்ளது. எந்த எண்ணமும் எதிர்கொள்ளப்படவில்லை. உனக்குள் எந்த எண்ணமுமில்லை. நீ உறங்கவில்லை, நீ விழித்திருக்கிறாய். ஆனால் அங்கு எந்த எண்ணமுமில்லை. இதுதான் தியானம். முதல்நிலை மனம் என்றழைக்கப்படுகிறது, இரண்டாம் நிலை தியானம் என்றழைக்கப்படுகிறது.

மேலும் அங்கு ஒரு மூன்றாம் நிலை உள்ளது. விஷயங்கள் மறைந்துவிட்டன. பொருள் மறைந்துவிடும்போது உணர்பவர் அதிகநேரம் இருக்கமுடியாது. ஏனெனில், அவை இணைந்தே இருக்கின்றன. அவை ஒன்றையொன்று உருவாக்கிக்கொள்கின்றன. உணர்பவர் தனியாக இருக்கும்பொழுது சிறிது காலம் மட்டுமே தாக்குபிடிக்க முடியும். பொருளில்லாமல் தன்னுணர்வு அதிகநேரம் தாக்கு பிடிக்கமுடியாது. அது தேவைப்படாது. ஏனெனில், தன்னுணர்வு ஏதாவதொன்றைப் பற்றிய உணர்வேயாகும். நீ உணர்வோடிருப்பதாக கூறும்போதெல்லாம் எதைப்பற்றி என்று கேட்க இயலும். நான் இதைப்பற்றி உணர்வடைகிறேன் என்று கூற ஒரு பொருள் தேவை. அங்கு பொருள் தேவை. உணர்பவர் இருப்பதற்கு அது ஒரு கட்டாயம். பொருள் மறைந்துவிட்டால் விரைவில் உணர்பவரும் மறைந்துவிடுவார். முதலில் பொருட்கள் செல்கின்றன. பிறகு தன்னுணர்வு மறைந்து விடுகிறது.

இந்த மூன்றாவது நிலை சமாதி என்றழைக்கப்படுகிறது. பொருளும் இல்லை, எந்தத் தன்னுணர்வும் இல்லை. ஆனால் இந்த

பொருளுமற்ற, தன்னுணர்வுமற்ற தன்மை ஒரு உணர்வற்ற நிலையின் ஒரு நிலையல்ல. அது ஒரு உச்சத்தன்னுணர்வு நிலை. தன்னுணர்வைக் கடந்த நிலை. தன்னுணர்வு இப்போது தன்னைப் பற்றி மட்டுமே உணர்வு கொண்டுள்ளது. தன்னுணர்வு தன்னை நோக்கி திரும்பி விட்டது. வட்டம் முழுமையடைந்து விட்டது. நீ வீட்டிற்கு வந்து சேர்ந்துவிட்டாய். இது மூன்றாம் நிலை, சமாதி. இந்த மூன்றாம் நிலையைத்தான் புத்தர் சூன்யம், வெறுமை என்று கூறுகிறார்.

முதலில் பொருட்களை விட்டுவிடு. பிறகு நீ பாதி காலியாகி விடுவாய். பிறகு தன்னுணர்வை விட்டுவிடு. நீ முழுவதும் காலியாகி விடுவாய். இந்த முழுவெறுமைதான் நடக்கக்கூடியதிலேயே மிக அழகான விஷயம், பெரும் பாக்கியம். இந்த வெறுமையில் இந்த காலித்தன்மையில், இந்த நானற்ற தன்மையில், இந்த சூன்யத்தில் முழுப் பாதுகாப்பும் நிலையான தன்மையும் உள்ளது.

நீ இதை அறிந்து ஆச்சரியப்படுவாய். நீ இல்லாதபோது முழுப் பாதுகாப்பும், நிலையான தன்மையும். எல்லா பயங்களும் மறைந்துவிடுகின்றன. ஏனெனில் எது அடிப்படை பயம்? மரணத்தைப்பற்றிய பயமே அடிப்படை பயம். மற்ற பயங்கள் அனைத்தும் அந்த அடிப்படை பயத்தின் பிரதிபலிப்பே. எல்லா பயங்களையும் ஒரே பயமாக குறைத்துவிடலாம். அது மரணத்தின் பயம். 'ஒருநாள் நான் மறைந்து போகக்கூடும், ஒருநாள் நான் இறந்து போகக்கூடும், நான் இருக்கிறேன், நான் இல்லாமல் போகும் நாள் வந்து கொண்டிருக்கிறது.' அது திகிலூட்டுகிறது. அதுவே பயம்.

இந்த பயத்தை தவிர்ப்பதற்காக நாம் முடிந்தவரை அதிக நாட்கள் வாழும் வழியில் செல்கிறோம். நாம் நமது வாழ்க்கையை பாதுகாக்க முயற்சி செய்கிறோம். நாம் விட்டுக் கொடுக்க தொடங்குகிறோம். நாம் பயத்தின் காரணமாக காப்பாற்ற, பாதுகாக்க ஆரம்பிக்கிறோம். நாம் முடமாகிறோம். ஏனெனில், நீ எவ்வளவு பாதுகாப்பாக இருக்கிறாயோ எவ்வளவு பத்திரமாக இருக்கிறாயோ அவ்வளவு குறைவான உயிர்ப்போடு இருப்பாய்.

வாழ்க்கை, சவால்களில் இருக்கிறது. வாழ்க்கை நெருக்கடியில் இருக்கிறது. வாழ்க்கைக்கு பாதுகாப்பற்ற தன்மை தேவை. பாதுகாப்பற்ற நிலத்திலேயே வாழ்க்கை வளர்கிறது. நீ பாதுகாப்பற்று இருக்கும்போதெல்லாம் நீ அதிக உயிர்ப்போடு, அதிக கவனத்துடன் இருப்பதை நீ காண்பாய். இதனால்தான் பல பணக்காரர்கள் சோம்பி விடுகிறார்கள். ஒருவிதமான முட்டாள் தனமும், ஒருவிதமான மந்தமும் அவர்களைச் சூழ்ந்து கொள்கிறது. அவர்கள் மிகவும் பாதுகாப்பாக இருக்கிறார்கள். அங்கு எந்தச் சவாலும் இல்லை. அவர்கள் மிகவும் பாதுகாப்பாக இருக்கிறார்கள். அவர்கள் புத்திசாலிகளாக இருக்க தேவையில்லை. அவர்கள் மிகவும் பாதுகாப்பாக இருக்கிறார்கள். அவர்களுக்கு எதற்கு புத்திசாலித்தனம் வேண்டும்? சவாலிருக்கும்பொழுதுதான் புத்திசாலித்தனம் தேவை. புத்திசாலித்தனம் சவாலால் தூண்டப்படுகிறது.

எனவே இறப்பின் மீதிருக்கும் பயத்தின் காரணமாக நாம் பாதுகாப்பை, வங்கியிருப்பை காப்பீட்டை, திருமணத்தை, ஒரு நிலையான வாழ்க்கையை, ஒரு வீட்டைத் தேடுகிறோம். நாம் ஒரு நாட்டின் பகுதியாகிறோம். நாம் ஒரு அரசியல் கட்சியில் சேர்ந்து கொள்கிறோம். நாம் தேவாலயத்தில் சேர்ந்து கொள்கிறோம். நாம் இந்துக்களாகவும் கிறிஸ்துவர்களாகவும், முகம்மதியர்களாகவும் ஆகிறோம். இவை அனைத்தும் பாதுகாப்பைக் கண்டறியும் வழிகளே. ஒரு நாட்டை, தேவாலயத்தை தேடுவது சேர்வதற்கு ஒரு இடத்தைக் கண்டறியும் வழிகளே.

மேலும் இந்த பயத்தின் காரணமாக அரசியல்வாதிகளும், பூசாரிகளும் உன்மீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். நீ எந்த பயத்திலும் இல்லையென்றால் எந்த அரசியல்வாதிகளும், எந்த பூசாரியும் உன்மீது ஆதிக்கம் செலுத்தமுடியாது. பயத்தின் விளைவாக மட்டுமே அவர்கள் ஆதிக்கம் கொள்ளமுடியும். குறைந்தபட்சம் அவர்கள், அவர்களிடம் இருப்பது உனக்கு பாதுகாப்பளிக்கும் என்று வாக்குறுதியளிக்க முடியும். 'இது உனது பாதுகாப்பாக இருக்கும், நான் அதற்கு உறுதி தரமுடியும்.' பொருட்கள் ஒருபோதும் தரப்படப் போவதில்லை. அது வேறு

விஷயம். ஆனால் உறுதிமொழி அங்குள்ளது. மேலும் உறுதிமொழி மக்களை அடிமைகளாகவும், ஒடுங்கியவர்களாகவும் வைத்துள்ளது. உறுதி மொழி மக்களை கட்டுக்குள் வைத்துள்ளது.

ஒருமுறை நீ இந்த உள்ளார்ந்த வெறுமையைத் தெரிந்து கொண்டு விட்டால் பிறகு பயமில்லை. ஏனெனில் இறப்பு ஏற்கனவே நிகழ்ந்துவிட்டது. அந்த வெறுமையில் அது நிகழ்ந்து விட்டது. அந்த வெறுமையில் நீ மறைந்துவிட்டாய். எதைக்கண்டு? யாருக்காக? நீ இனிமேலும் எதற்கு பயப்பட முடியும்? மேலும் யார் பயப்படுவார்கள்? இந்த வெறுமையில் எல்லா பயங்களும் மறைந்து விடுகின்றன. ஏனெனில், மரணம் ஏற்கனவே நிகழ்ந்துவிட்டது. இப்பொழுது வேறு எந்த இறப்பிற்கும் சாத்தியமில்லை. நீ ஒருவிதமான மரணமற்ற தன்மையை, காலமற்ற தன்மையை உணர்வாய். நித்தியம் வந்துவிட்டது. இப்போது நீ பாதுகாப்பு தேடமாட்டாய். அது தேவையில்லை.

இதுதான் ஒரு சந்நியாசியின் நிலை. இந்த நிலையில் நீ ஒரு நாட்டின் பகுதியாக இருக்கத் தேவையில்லை. அல்லது அதைப் போன்ற முட்டாள்தனமான விஷயங்களில் பகுதியாக இருக்க தேவையில்லை.

நீ ஒன்றுமற்று போகும்போது மட்டுமே நீ நீயாக இருக்கமுடியும். இது முரண்பாடாகத் தெரிகிறது.

நீ விட்டுத்தர தேவையில்லை. ஏனெனில், பயத்தின் காரண மாகவும் மேலும் ஆசையினாலேயும் ஒருவர் விட்டுத் தருகிறார். மேலும் நீ கிளர்ச்சியில் வாழமுடியும். ஏனெனில், இழப்பதற்கு ஏதுமில்லை. நீ ஒரு கிளர்ச்சியாளனாக முடியும். அங்கு பயப்பட ஏதுமில்லை. யாரும் உன்னைக் கொல்லமுடியாது. நீ ஏற்கனவே அந்த விஷயத்தைச் செய்துவிட்டாய். யாரும் உன்னிடமிருந்து எதையும் பறிக்கமுடியாது. உன்னிடமிருந்து பறிக்கக்கூடிய அனைத்தையும் நீ விட்டுவிட்டாய். இப்பொழுது நீ ஒன்றுமற்ற தன்மையில் இருக்கிறாய். நீ ஏதுமற்ற தன்மை. அதனால்தான் இந்த ஏதுமற்ற தன்மையில் சிறந்த பாதுகாப்பு, சிறந்த அபாயமற்ற

தன்மை, ஒரு நிலையான தன்மை எழுகிறது. ஏனெனில், இனிமேல் இறப்பு சாத்தியமில்லை.

மேலும் இறப்புடன் காலம் மறைந்துவிடுகிறது. இறப்பு மறையும்பொழுது இறப்பாலும், காலத்தாலும் உருவாக்கப்பட்ட அனைத்து பிரச்சனைகளும் மறைந்துவிடுகின்றன. இவை அனைத்தும் மறைந்தபிறகு எது மிச்சமிருக்கிறதோ அது ஒரு தூயவானம். அந்த தூயவானம்தான் சமாதி, நிர்வாணா.

## நான் எனும் சிறைச்சாலை

***கேள்வி: ஹேம்லெட்டின் உச்சகட்டக் கேள்வி 'இருப்பதா அல்லது மறைந்துவிடுவதா?' உங்களிடம் எனது உச்சகட்டக்கேள்வி 'இருப்பதா அல்லது மறைந்து விடுவதா?' இது எப்படி சாத்தியம்?***

**ஓஷோ:** ஷேக்ஸ்பியர் ஒரு சிறந்த கவிஞர். ஆனால் ஒரு ஞானியல்ல. பொருட்களின் உண்மையைப் பற்றி அவருக்கொரு உள்ளுணர் வுள்ளது. ஆனால் அது ஒரு கீற்று மட்டுமே. மிகவும் மெல்லியதே. ஒரு கனவில் பார்ப்பதைப் போன்றதே. தெளிவானதல்ல. ஹேம்லெட்டில் அவரின் இந்தக் கேள்வி அந்த தெளிவற்ற தன்மையைக் காட்டுகிறது. 'இருப்பதா அல்லது மறைந்து விடுவதா?' இது போல ஒருபோதும் அறிந்த ஒரு மனிதன் கேட்கமாட்டான். ஏனெனில், அங்கு தேர்ந்தெடுத்தலைப் பற்றிய கேள்வியே இல்லை. 'இருப்பதா அல்லது மறைந்துவிடுவதா?' என்பதற்கிடையில் நீ தேர்ந்தெடுக்க முடியாது.

பிரபஞ்சத்தைப் பொறுத்தவரையில் இல்லாமல் இருப்பது ஒன்றே இருப்பதற்கான வழி. நீ மறையும்வரை நீ உண்மையிலேயே அங்கில்லை. இது புரிந்துகொள்ள சிறிது சிரமமாகத் தோன்றுகிறது. ஏனெனில், அடிப்படையில் இது காரணமற்றது. ஆனால் காரணம் பிரபஞ்சத்தின் வழியல்ல. நீ நினைத்துப் பார்க்க முடியாத அளவிற்கு பிரபஞ்சம் காரணமற்றது.

இங்கு இருப்பதாக நினைப்பவர்கள் இங்கில்லை. மேலும் தாங்கள் இல்லையென்று நினைப்பவர்களும், அதனை உணர்ந்து கொண்டவர்களும் அவர்கள் மட்டுமே இங்குள்ளனர்.

நான் என்ற கருத்து வெறும் ஒரு கருத்து, மனதின் ஒரு பிரதிபலிப்பு. ஆனால், நானில்லை என்ற உணர்வு தியானத்தின் மலர்தலாக மட்டுமே வருகிறது. நானில்லை என்று நீ உணரும்பொழுது நான் மட்டுமே மறைகிறது. அங்கு ஒரு தூய்மையான வரையறுக்கப்படாத, கட்டுப்பாடற்ற, வடிவமற்ற, ஒரு தூய்மையான பிரபஞ்ச வெளி பின்னால் உள்ளது.

நான் ஒரு சிறந்த சிறைச்சாலை. அது நீ மனதிற்கு அடிமையாக இருப்பது. மேலும் நீ அதன் கட்டுப்பாட்டில் இருப்பது.

நீ மனதைத் தாண்டிய கணத்தில் நீ நுழையும்பொழுது நீ இருக்கிறாய். ஆனால் ஒரு ஆணவமாக இருக்கும் உணர்வு இல்லை, நானாக இருக்கும் உணர்வு இல்லை. வேறு வார்த்தைகளில் சொல்லப்போனால் நீ எந்த அளவுக்கு இருப்பதாக நினைக் கிறாயோ அந்த அளவிற்கு குறைவாக நீ இருக்கிறாய். நீ இல்லை யென்ற அனுபவத்தை எந்த அளவுக்கு நீ அடைகிறாயோ அந்தளவுக்கு நீ இருக்கிறாய். உன்னுடைய ஆணவத்தின் நீர்க்குமிழி உடையும்பொழுது நீ முழு பிரபஞ்சமாகிறாய்.

ஆமாம், ஏதோ ஒன்று மறைந்துவிட்டது. முன்பு நீ வெறும் நீர்த்துளி. இப்போது நீ முழு கடல். நீ ஒரு இழந்தவனல்ல. நீ மிகச் சிறிய அளவான இடத்தில் அடைப்பட்டிருந்தாய். மேலும் அந்த சிறைப்படுதலே நமது துன்பம், நமது வலி, நமது சங்கடம். நாம் எல்லா பக்கங்களிலும் மூடப்பட்டிருந்தோம். எல்லா திசையிலும் நாம் ஒரு தடிமனான சுவரை எதிர்கொள்கிறோம். நம்மால் நகரமுடியாது.

திகில் கனவில், கனவில் கண்கள் திறந்திருக்கின்றன என்று உனக்கு மிக நன்றாகத் தெரியும். மேலும் நீ உனது கைகளை அசைக்க விரும்புகிறாய். ஆனால் உன்னால் அசைக்கமுடியாது. நீ எழ விரும்புவாய், ஆனால் உன்னால் எழமுடியாது. ஒருகணம்

உனக்கு பக்கவாதம் வந்தது போல பெரிய பயம் உன்னைக் கவ்வும். அதை நீ அனுபவித்திருக்கிறாயா? ஒரு துளி போல நமது முழு வாழ்க்கையும் என்ன என்பதை அந்த அனுபவம் உனக்கு புரிய வைக்கும். நமது உள்ளார்ந்த இயல்பு கடலாக இருப்பதே. மேலும் ஒரு கடலை ஒரு துளியாக சுருக்குவது கண்டிப்பாக பதட்டத்தை, துன்பத்தை, சிரமத்தை, கஷ்டத்தை உருவாக்குவதாகும்.

இருப்பதா அல்லது மறைந்துவிடுவதா என்ற ஷேக்ஸ்பியரின் கேள்வி அறிவுரீதியானது மட்டுமே. மேலும் அது அறிவு பூர்வமானதாக மட்டுமே இருக்கமுடியும். ஏனெனில், அவர் ஒரு உணர்ந்த மனிதனல்ல. அவர் மிகவும் திறமையானவர். அவருடைய தளத்தில் இருக்கும் கவிஞர்கள் ஒரு சிலரே உள்ளனர். ஆனால் கவிஞராக இருப்பது என்பது ஒரு விஷயம். மேலும் பிரபஞ்சத்தை வெளியிலிருந்து இல்லாமல் உள்ளிருந்து தெரிந்து கொள்ளுதல் வேறொரு விஷயம்.

கவிஞர் மலரின் அழகை, சூரிய அஸ்தமனத்தின் அழகை, நட்சத்திரங்கள் ஒளிரும் இரவின் அழகைக் காணும்பொழுது அவர் எப்பொழுதும் வெளியே இருக்கிறார். ஒரு கவனிப்பவர், ஒரு பார்வையாளர். அவர் ஒருபோதும் உள்ளே இருப்பதில்லை. ஒரு கவிஞருக்கும், ஞானிக்கும் அதுதான் வித்தியாசம். கவிஞர் ஒரு ரோஜாவை பார்க்கும்பொழுது, ரோஜா கவிஞருக்கு வெளியே உள்ளது. மேலும் கவிஞர் ரோஜாவுக்கு வெளியே உள்ளார்.

ஒரு ஞானி ரோஜாவை பார்க்கும்பொழுது, அவர்தான் அந்த ரோஜா. எல்லா வேறுபாடுகளும், எல்லா எல்லைகளும், எல்லா தூரங்களும் மறைந்துவிட்டன. அப்படிப்பட்ட கணங்களில்தான் உபநிஷத்தின் முனிவர்கள் நான் பிரம்மம் என அறிவித்துள்ளனர். நானே கடவுள். இது ஒரு ஆணவ அறிவிப்பல்ல. அது வெறுமனே உச்சகட்ட சத்தியத்தில் ஒன்று கலக்கும் ஞான அனுபவத்தின் ஒரு அறிவிப்பேயாகும். சிறிய அளவு கோலாக இருந்தால்கூட அதுவும் உண்மைதான்.

ஞானியால் நான் ரோஜா, நான் நட்சத்திரங்கள், நான் கடல் என்று சொல்லமுடியும். ஒரு கவிஞர் அதைச் சொல்லமுடியாது. அவரால் ரோஜா அழகாக இருக்கிறது என்று சொல்லமுடியும். அவர் ரோஜாவை கவனித்து அதைப்பற்றி ஒரு முடிவுக்கு வரமுடியும். ஆனால் அவரால் ரோஜாவின் இயல்போடு கரைந்து ஒன்று கலக்கமுடியாது. அவரால் அதனுள் தொலைந்து போகமுடியாது. அவரால் அதனோடு ஒன்றாகமுடியாது. அவரால் இரட்டைத் தன்மையை விடமுடியாது. ஒரு கவிஞராக அவருக்கு எவ்வளவு பெரிய புரிதல் இருந்தாலும் அது இரட்டைத் தன்மையிலேயே வேர் கொண்டிருக்கும். நிச்சயமாக நீ பார்ப்பதை விட அதிக அழகை கவிஞர் பார்க்கிறார். அவர் அதிக தெளிவான கண்களைக் கொண்டிருக்கிறார். அவர் அதிக அன்பு கொண்ட இதயத்தைக் கொண்டிருக்கிறார். மேலும் அவர் விஞ்ஞானியை விட ஒரு வேறுபட்ட கோணத்தைக் கொண்டிருக்கிறார்.

விஞ்ஞானி ரோஜா மலரை அறிவிலிருந்து, மனதிலிருந்து பார்க்கிறார். கவிஞர் இதயத்திலிருந்து உள்ளுணர்விலிருந்து பார்க்கிறார். அவர் நிச்சயமாக விஞ்ஞானியை விட ஆழமாக இருக்கிறார். உண்மையில் விஞ்ஞானியால் ரோஜாவின் அழகைப் பார்க்கமுடியாது. அவர் செய்யக்கூடியதெல்லாம் ரோஜாவைப் பிரித்து அழகு எங்கே இருக்கிறது என்று தேட முயற்சி செய்வதே. ஆனால் ரோஜா பிரிக்கப்படும் கணத்தில் எல்லா அழகும் மறைந்துவிடுகிறது. அதனால்தான் விஞ்ஞானிக்கு அங்கு எந்த அழகும் தெரிவதில்லை. ஏனெனில் பிரிக்கப்படுவதை அழகால் தாளமுடியாது. அதனால்தான் விஞ்ஞானிக்கு அங்கு வாழ்க்கை இருப்பதில்லை. ஏனெனில், வாழும் உயிரை நீ பிரித்தறிய முயற்சி செய்யும் கணத்தில் நீ கண்டறிவதெல்லாம் இறந்த பகுதிகளே. உன்னால் ஒருபோதும் வாழ்க்கையைக் கண்டறியமுடியாது.

ஞானி, விஞ்ஞானிக்கு நேர் எதிரிடையானவர். விஞ்ஞானி பொருட்களைப் பிரிப்பதன் மூலம் அவைகளை அறிவதற்கு முயற்சி செய்கிறார். ஞானி தொலைவை விடுவதன் மூலம், அவருக்கும் உண்மைக்கும் இடைவெளி இல்லாமல் செய்வதன் மூலம் பொருட்களை அறிய முயற்சி செய்கிறார். அவருடையது இருப்பின்

வழி. இவைதான் மூன்று வழிகள். மனதின் வழி, விஞ்ஞானி செயல்படுவதைப் போல. இதயத்தின் வழி, கவிஞர், ஓவியர், கலைஞர் செயல்படுவதைப் போல. மூன்றாவது இருப்பின் வழி, அது ஞானியின் உலகம். ஷேக்ஸ்பியர் கவித்துவமாக எழுதுவதில் சிறந்தவர். அவருடைய உள்ளுணர்வு ஆழமானது. ஆனால் அவர் ஒரு ஞானியல்ல. இல்லாவிடில் அவரால் இப்படியொரு வாக்கியத்தைச் சொல்லமுடியாது. இருப்பதா அல்லது மறைந்து விடுவதா?

அங்கு எந்த தேர்ந்தெடுத்தலுமில்லை, அவை இரண்டல்ல. இருப்பதற்கான ஒரே வழி இல்லாமல் இருப்பதே.

நீ உண்மையான பிரபஞ்சத்தை, சத்தியமான பிரபஞ்சத்தை விரும்பினால் கரைந்துவிடு. உண்மையோடு ஒன்றாகிவிடு. உனது பனிக்கட்டியைக் கடலோடு கரைத்து கடல் என்றாகிவிடு. தனிப்பட்ட அடையாளமாக நீ மறைந்துவிடுவாய்தான், ஆனால் நீ முழுமையாகி விடுவாய். அது ஒரு இழப்பல்ல. அது பெருத்த லாபம்.

நீ கேட்கிறாய், எனது உச்சக்கட்டகேள்வி 'இருப்பதா அல்லது மறைந்துவிடுவதா?' இது ஒரு கேள்வியல்ல. அதன் வழியாக மட்டுமே உன்னைக் கண்டறியமுடியும். ஆனால் முதலில் இல்லாமல் இருப்பது வருகிறது. மேலும் இரண்டாவது இருப்பது வருகிறது. உன்னுடைய கேள்வியில் மாற்ற வேண்டிய ஒரே விஷயம் அதுதான். நீ இருப்பதா அல்லது இல்லாமல் போவதா என்று கேட்கிறாய். இல்லாமல் இருப்பது முதலில் வரவேண்டும். பிறகு இருப்பது பின்தொடர வேண்டும். நீ வெறுமனே இடைவெளி அளிக்க வேண்டும். உன்னுடைய இடத்தை அடைத்துக் கொண்டிருக்கும் அனைத்துச் சாமான்களையும் வெளியே வீசு. மேலும் பெரிய தடை ஆணவம். அதையும் வெளியே வீசு.

உனது இருப்பின் கோவில் முற்றிலும் காலியாக இருக்கட்டும். அதுதான் இல்லாமல் இருப்பதன் நிலை.

மேலும் நீ ஆச்சரியப்படுவாய். நீ இங்கு இல்லாமலிருக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறாய். மேலும் பின்வாசல் வழியாக

இருப்பதைப் பற்றிய இருப்பின் ஒரு புதிய புரிதல் வருகிறது. ஆனால் உனது முயற்சி முதலில் இருப்பது பின்பு இல்லாமல் இருப்பது என்ற இந்த வரிசையில் இருக்கக்கூடாது. அது ஞானத்தின் இயல்பான செயல்பாட்டிற்கு எதிரானது. நீ முதலில் ஒன்றுமற்ற தன்மையை அடையவேண்டும். நானற்றதன்மையை அடையவேண்டும். இது சத்திய இருப்பின் அனுபவத்தின் அடைவதற்கு நீ கொடுத்தாக வேண்டிய விலை. இந்த தியாகத்தை நீ செய்துதான் ஆகவேண்டும். நீ திரும்பவும் பிறக்காதவரை உன்னால் கடவுளின் ராஜ்ஜியத்தில் நுழையமுடியாது என்று சொல்லும்பொழுது ஏசு இதையே குறிப்பிடுகிறார். நீ திரும்பவும் பிறக்காதவரை என்று அவர் எதனைக் குறிப்பிடுகிறார்? நீ முதலில் இறந்தாக வேண்டும். இறப்பிற்கு பிறகே உயிர்த்தெழுதல் என்பதையே அவர் கூறுகிறார்.

ஆணவம் இறந்தபிறகு அங்கே உருவாகும் இடம் உனது சத்திய இருப்பு மலர்வதற்கு வழிவகுக்கிறது. உன்னுடைய ஆணவத்தின் சமாதியில் இருப்பின் தாமரை மலர்கிறது. ஆனால் நினைவில் கொள். உன்னுடைய வாக்கியத்தை நீ மாற்றியாக வேண்டும். ஏனெனில், இந்த வாக்கியத்தில் உனது ஆணவம் தொங்கி நிற்கிறது. இருப்பது உன்னுடைய முதல் ஆசை. ஆனால் அது உனது முதல் ஆசையாக இருந்தால் பிறகு இல்லாமல் இருப்பதை அனுமதிப்பது மிகவும் கடினமானதாகவும், கிட்டத்தட்ட முடியாத காரியமாகவும் இருக்கும். நீ உனது ஆணவத்தைப் பிடித்து தொங்குவாய்.

நீ சொல்கிறாய், 'இருப்பதா அல்லது இல்லாமல் போய்விடுவதா?' உறுதியாக இந்த விஷயம் சரிதான். அவை இரண்டும் ஒன்றாக இருந்தாகவேண்டும். ஆனால் எது முதலில் இருக்கவேண்டும்? நீ தவறான முனையிலிருந்து தொடங்க முடியாது. நீ யாருமற்றவனாக, வெறுமனே வெற்றுவெளியாக இருப்பதிலிருந்து தொடங்க வேண்டும். அந்த வெற்றுவெளித் தன்மையில் விருந்தாளி வருகிறார்.

ஆனால் இது இயல்பானது. நீ உனது கேள்வியைக் கேட்டவிதம் மனதிற்கு இயல்பானது.

இது நிகழ்ந்தது. கௌதமபுத்தரிடம் ஒரு மனிதன் கிட்டத்தட்ட நீ கேட்ட இதே கேள்வியுடன் வந்தான். கௌதமபுத்தர் அவனிடம்,

'நீ முதலில் உனது ஆணவத்தை விடவேண்டும். பிறகு நீ கவலைப்பட தேவையில்லை. எல்லாம் இயல்பாகவே தானாகவே நிகழும்' என்று கூறினார். அந்த மனிதன், 'என்னை உணர அதுதான் வழி என்றால் பிறகு நான் ஆணவத்தை விட எல்லா முயற்சிகளையும் செய்வேன்' என்று கூறினான்.

புத்தர், 'நீ நான் கூறியதை புரிந்துகொள்ளவில்லை. நீ இன்னமும் உன்னை உணர முயற்சி செய்து கொண்டிருக்கிறாய். நீ ஆணவத்தை விடக்கூட தயாராக இருக்கிறாய். ஆனால் ஆழத்தில் இன்னமும் உண்மையான ஆணவத்தை, ஒரு அழியாத ஆணவத்தைக் கண்டறிய ஆசைப்படுகிறாய். அதைத்தான் நீ சுயமென்று அழைத்துக்கொள்கிறாய். சுயத்தைப்பற்றி மறந்துவிடு. அடைய ஏதுமில்லை. நீ வெறுமனே உனது ஆணவத்தை விட்டுவிட்டு காத்திரு' என்று கூறினார்.

செய்ய வேண்டிய எந்த முயற்சியைப் பற்றிய கேள்வியில்லை. அடையப்போவதும் எதுவும் அங்கே இருக்கப்போவதில்லை. எது நிகழ்கிறதோ அது தானாகவே நிகழப்போகிறது. அதை உன்னுடைய உணர்தல் என்று சொல்லமுடியாது. அதனால்தான் மனித சரித்திரத்திலேயே தன்னை அடைதலென்ற வெளிப்பாட்டை வெளிப்படுத்தாத முதல்மனிதன் கௌதமபுத்தர்தான். சுயமென்ற வார்த்தைக்கடியில் மறைந்துகொண்டு பல மக்கள் அவர்கள் ஆணவத்தை வெறுமனே பாதுகாத்துக்கொள்வதை அவர் அறிந்தார். அவர்கள் அதனை சுயத்தை உணர்தல் என்று கூறுகின்றனர். ஆனால் உண்மையிலேயே அவர்கள் சொல்வது ஆணவம் உணர்தல். அவர்கள், அவர்களுடைய ஆணவத்தை நிலையானதாகவும், அழிவற்றதாகவும் மாற்றும் ஒரு மாறுவேடமிட்ட ஆசையைக் கொண்டுள்ளனர்.

மனிதமனதின் இந்த தந்திரத்தைப் பார்த்துவிட்டு புத்தர் வெறுமனே 'சுயம், சுயவுணர்தல்' என்ற வார்த்தைகளை விட்டு விட்டார். 'உன்னுடைய ஆணவத்தை விட்டுவிட்ட பிறகு என்ன நடக்கும்?' என்பதைப்பற்றி பேசுவதை அவர் நிறுத்திவிட்டார்.

அவர், 'அது என்னுடைய விஷயமல்ல. மேலும் அது உன்னுடைய விஷயமுமல்ல. நீ வெறுமனே ஆணவத்தை விட்டுவிட்டு காத்திரு. மேலும் என்ன நடக்கிறது என்று பார். ஆனால், தொடக்கத்தில் அது எப்படியிருக்கும் என்று சிந்திக்காதே. அதை ஒரு இலக்காக இலட்சியமாகக் கொள்ளாதே. நீ இதை ஒரு இலட்சியமாக ஆக்கும் கணத்தில் ஆணவம் உனது இருப்பின் மறைந்திருக்கும் இரகசிய கதவின் வழியாக திரும்ப வந்துவிடுகிறது' என்று கூறிவிட்டார்.

புத்தர் மிகவும் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டார். குறிப்பாக இந்தியாவில் அப்படித்தான். அவருக்கும் முன்பு ஆயிரம் வருடங்களாக மதரீதியான மக்கள் சுய உணர்தல் பற்றி பேசியிருக்கிறார்கள். ஆனால் அவருக்கு முன்னால் இருந்த யாரை விடவும் ஒரு மிக ஆழமான தெளிவான புரிதல் கௌதமபுத்தருக்கு இருந்தது. சுயவுணர்தல் என்ற இந்த கருத்திற்குப் பின்னால் ஒரு ஆழமான ஆணவத்தைத் தவிர வேறொன்றுமில்லை என்பதை அவர் பார்த்தார்.

அவர் ஆன்மீகத்தின் முழுமொழியையும் மாற்றிவிட்டார். அவர் பேசிவந்த மொழியில் -அந்த மொழியின் பெயர் பாலி - சுயம் என்பது 'ஆட்டா' என்றழைக்கப்படுகிறது. புத்தர் அந்த வார்த்தையை முழுவதுமாக விட்டுவிட்டு அவர் ஒரு எதிர்மறை வார்த்தையை உபயோகிக்கத் தொடங்கினார். 'அனட்டா' ஆட்டா என்றால் சுயம், அனட்டா என்றால் சுயமற்ற தன்மை. அது முழு பாரம்பரியத்திற்கும் எதிராக இருந்தது. அது இந்த நாட்டில் மட்டுமல்ல, அனைத்து நாடுகளிலும் முழு பாரம்பரியத்திற்கும் எதிரானதாக இருந்தது. சுயமற்ற தன்மை, மனமற்ற தன்மை, அறிவதற்கு தானற்றதன்மை என்று யாரும் கேள்விப்பட்டதில்லை.

மக்கள் அவரை, 'இந்த எல்லா முயற்சிகளுக்கும், தியானத்திற்கும், ஒழுக்கத்திற்கும், உபவாசத்திற்கும், துறவற நெறிகளுக்கும் என்ன பொருள்? நாம் முடிவில் மறையப்போகிறோம் என்றால் இது எதற்காக? ஏன் இந்த ஒரு வித்தியாசமான முயற்சி? இந்த மிகவும் கடினமான, மிகவும் நீளமான ஒரு பயணம் நீயில்லை என்று முடிவில் கண்டறிவதற்காகவா?' என்று கேட்கத் தொடங்கினர்.

அவர்கள் கூறுவது தர்க்கரீதியானது. ஆனால் நீ கௌதமபுத்தரை போன்ற மனிதனை சந்திக்கும் பொழுதெல்லாம் உன்னுடைய தர்க்கத்தால் வெல்ல இயலாத அளவிற்கு அவருடைய அன்பு வல்லமையுடையது. உன்னுடைய காரணம் உன்னுடைய மனம், உன்னுடைய ஆளுமை, உன்னுடைய குறிக்கோள்கள் உன்னுடைய ஆசைகளை விட அவருடைய இருப்பு மிகவும் சக்தி வாய்ந்தது. அவருடைய இருப்பு மிகவும் சக்தி வாய்ந்தது, காந்தம் போல கவர்ந்திழுப்பது. மக்கள் அவர்களுக்கெதிராகவே அவர்களை மீறி சுயமற்ற தன்மையில் முடியும் ஒரு பயணத்தை தொடங்கி விடுவார்கள்.

கௌதமபுத்தரைப் போன்ற ஒரு மனிதன் ஒரு குறிப்பிட்ட காந்த ஈர்ப்புத்தன்மையைக் கொண்டுள்ளார். அது மிகவும் நுண்ணியது. பொருட்கள் அவரை நோக்கி நகராது. ஆனால் ஆத்மாக்கள் நகரும். தன்னுணர்வுகள் நகரும். வாழ்க்கைச் சக்திகள் நகரும். சுயமற்றிருப்பது இறப்பல்ல, சுயமற்றிருப்பது வாழ்வில் உச்சக்கட்டம் என்பதற்கரிய சாட்சியை உனக்கு அவருடைய இருப்பே அளிக்கிறது.

ஆனால் நினைவில் கொள். சுயமற்றிருப்பதே முதல் விஷயம். அது உனது தியானம். அது உனது இறப்பு. இந்த தியானத்தின் மூலமாக, இந்த இறப்பின் மூலமாக, ஒருவித ஒன்றுமற்றதன்மையின் மூலமாக, உன்னுடைய உண்மை முகம், உன்னுடைய உண்மையான இருப்பு எழும். எனவே நீ சிறிது மாறவேண்டும். சுயமற்றதன்மையை முதலில் போடு. அது முதலில் இருந்தாக வேண்டும். இருப்பைப் பற்றி நீ கவலைப்பட தேவையில்லை. அது விதிவிலக்கின்றி கண்டிப்பாக வரும்.

நான் இதை எனது சொந்த அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டும் கூறுகிறேன். நான் ஒன்றுமற்றதன்மையில் மறைந்து விட்டேன். மேலும் ஒன்றுமற்றதன்மையிலிருந்து ஒரு முற்றிலும் புதிய, புத்தம்புதிய நித்திய இயல்பு எழுந்தது. அது என்னுடைய செயலல்ல. அதற்கு எந்த பொறுப்பையும் நான் எடுத்துக் கொள்ளமுடியாது. அதிகபட்சமாக அது நிகழ நான் அனுமதித்தேன்.

ஏனெனில், தொந்தரவு செய்ய நான் அங்கில்லை. நீ இல்லாமலிருப்பது முதலில்தேவை. எனவே, உன்னுடைய இருப்பு எழும்போது நீ தொந்தரவு செய்யமாட்டாய். வெறுமனே ஒரு சிறிய மாற்றம்.

நீ இரண்டாவதாக போட்டது முதலில் வரவேண்டும். மேலும் நீ முதலில் போட்டது பற்றி நீ கவலைப்பட தேவையில்லை. அது வரும். வசந்தம் வருவதைப்போல, மலர்கள் அதுவாகவே வரும்.

# 4

# அன்பு செய், பயப்படாதே - தன்னையும் மற்றவர்களையும் நம்புதல்

எல்லோருடைய வாழ்க்கையும் குறைந்தபட்சமாகவோ அதிகபட்சமாகவோ பயத்தால் ஆட்சி செய்யப்படுகிறது. ஏனெனில், வாழ்க்கையை வாழ்வதற்கு இரண்டு வழிகள் மட்டுமே உள்ளன. அது அன்பினால் ஆட்சி செய்யப்படலாம், அல்லது பயத்தினால் ஆட்சி செய்யப்படலாம். சாதாரணமாக நீ அன்பு செய்ய கற்றுக் கொள்ளாதவரை அது பயத்தினாலேயே ஆட்சி செய்யப்படுகிறது.

அன்பில்லாமல் இருந்தால் பயம் அங்குக் கண்டிப்பாக இருக்கும். அது வெறும் அன்பின்மை, அதில் ஆக்கபூர்வமாக ஏதுமில்லை. ஆனால் உன்னால் அன்பு செலுத்தமுடிந்தால் பயம் மறைந்து விடுகிறது. அன்பின் தருணத்தில் அங்கு மரணம் கூட இல்லை.

வாழ்வில் மரணத்தை வெல்லும் விஷயம் ஒன்றுதான் உள்ளது. அது அன்புதான். எல்லா பயமும் மரணத்தைப் பற்றியதே. மேலும் அன்பு மட்டுமே மரணத்தை வெல்லமுடியும்.

எனவே நான் உனக்குச் சொல்லவிரும்பும் ஒரு விஷயம் - பயத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காதே. ஏனெனில், அது சுயவசியமாக மாறுகிறது. நீ பயத்தில் வாழ்கிறாய், உனது வாழ்வை பயம் ஆட்சி செய்கிறது, பயம் உன்னை ஆட்டுவிக்கிறது என்று நீ திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தால் நீ அதற்கு உதவி

செய்கிறாய். பயம் உனது வாழ்வை ஆட்சி செய்கிறது என்பதை குறித்துக் கொள். - முடிந்தது. அது வெறுமனே உன்னிடம் அன்பு பயம் மறையும் அளவிற்கு வலிமை அடையவில்லை என்பதைக் காட்டுகிறது.

பயம் வெறும் ஒரு வெளிப்பாடு. அது ஒரு நோயல்ல. அதற்கு எந்த மருந்தும் இல்லை. அதற்கு தேவையுமில்லை. அது ஒரு வெளிப்பாடு, மேலும் அது மிகவும் பயனுள்ளது. ஏனெனில், அது இனிமேலும் நீ உனது வாழ்க்கையை வீணடித்துக் கொள்ளக்கூடாது என்பதைக் காட்டுகிறது. அது வெறுமனே உன்னை மேலும் அன்பு செலுத்தும்படிக் கூறுகிறது.

எனவே நான் பயத்தைப் பற்றி பேசமாட்டேன். நீ மேலும் மேலும் அன்பு செலுத்த நான் உதவுவேன். அதன் பக்கவிளைவாக பயம் மறைந்துவிடும். நீ நேரடியாக பயத்தில் வேலை செய்ய துவங்கினால் அதனை பலப்படுத்துகிறாய். ஏனெனில், உனது முழு கவனமும் அதில் குவிந்திருக்கும். அது ஒருவர் இருளை அழிக்க முயற்சி செய்வதைப் போன்றது. அவர் கவனத்தைக் குவித்து எப்படி இருளை அழிப்பது என்ற முயற்சியிலேயே மூழ்கியிருப்பதைப் போன்றது அது. நீ இருளை அழிக்கமுடியாது. ஏனெனில், அது முதலில் அங்கு இல்லை. முதலில் இருள் இருப்பதை உறுதி செய், பிறகு ஒளியை எப்படி உள்ளே கொண்டு வருவது என்று வேலை செய்யத் துவங்கு.

நீ பயத்தோடு சண்டையிட பயன்படுத்தும் அதே சக்தியை அன்புக்கு பயன்படுத்து. அன்பில் அதிக கவனத்தை செலுத்து. நீ தொட்டால் எவ்வளவு அன்பாகத் தொட முடியுமோ அவ்வளவு அன்பாகத் தொடு. கையே முழு இருப்பாக மாறியதுபோல நீ உன் கை வழியாக வழிந்தோடுவது போல தொடு. அதன் வழியாக ஒரு சக்தி, ஒரு கதகதப்பு, ஒரு ஒளி செல்வதை உணர்வாய். கலவியில் ஈடுபட்டால் முழுமையாக அதில் ஈடுபடு. நாகரீகத்தை மறந்துவிடு. அன்பு குறித்து போதிக்கப்பட்ட அனைத்தையும் மறந்துவிடு. காட்டுத்தனமாக இரு, விலங்கைப் போல அன்பு செலுத்து.

ஒருமுறை நீ அன்பின் இருப்பு பயத்தை போக்கிவிடுகிறது, இல்லாமலாக்கிவிடுகிறது என்பதை நீ கண்டுகொண்டால் நீ விஷயத்தை புரிந்துகொண்டாய். இனி எந்த பிரச்சனையுமில்லை.

ஒரு மனிதன் பயத்தில் வாழும்பொழுது அவன் கடினமாகிறான். பயம்தான் கடினத்தன்மையை உருவாக்குகிறது. பயத்தில் நாம் மூடிக்கொள்கிறோம். எல்லா கதவுகளையும், ஜன்னல்களையும் மூடிக்கொள்கிறோம். நாம் ஒரு இருண்ட பொந்தில் வாழத் தொடங்குகிறோம். இப்போது நமது வாழ்வு ஏற்கனவே இறந்த ஒன்று. மேலும் நாம் நம்மைச்சுற்றி கவசத்தை உருவாக்கிக் கொள்கிறோம். ஒரு கடினமான இரும்புக் கவசம். அப்போது நாம் பாதுகாப்பாகவும், அபாயமற்றும், ஆபத்தில்லாமலும் உணர்கிறோம்.

இது வாழ்க்கையை வாழ்வதற்கான வழியல்ல. இது தற்கொலை செய்து கொள்வதற்கான வழி. இது உண்மையான தற்கொலை. இது உன்னுடைய சமாதிக்குள் நுழைந்துகொள்வது. ஏனெனில், இந்த விதமான மூடப்பட்ட இருட்டினுள் உண்மை, அழகு, அன்பு, பரவசம், தெய்வீகம் குறித்த எதையும் தெரிந்துகொள்ள முடியாது. உள்ளே எதுவும் அனுமதிக்கப்படாவிட்டால் உன்னைச் சுற்றி என்ன இருக்கிறது என்பதை நீ எப்படி தெரிந்துகொள்வாய். உன்னைச் சுற்றி என்ன இருக்கிறது என்பது உனக்குத் தெரியாவிட்டால் உன்னால் ஒருபோதும் உன்னைத் தெரிந்துகொள்ள முடியாது. மற்றவரின் பார்வையிலேயே ஒருவர் தன்னை தெரிந்து கொள்ள முடியும். முதலில் நீ மற்றவரை தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு நீ உன்னைத் தெரிந்து கொள்ளலாம்.

மனவியலாளர்கள் குழந்தை, முதலில் மற்றவர்களை உணர்கிறது. அம்மா, அப்பா, சகோதரர்கள். சகோதரிகள், குடும்பம், அதனைச் சுற்றியுள்ள பொருட்கள், அறை, சுவர்கள், விளையாட்டுப் பொருட்கள் என்று கூறுகிறார்கள். மெதுமெதுவாக அவன் விரிகிறான். பிறகு அவன் அவனுடைய உடலை உணர்கிறான். ஒருநாள் அவன் தன்னை ஒரு தனிப்பட்டவனாக உணரத் தொடங்குகிறான். முதலில் அவன் மற்றவர்களை

அறிகிறான். மற்றவர்களை அறிவதன் மூலம் அவன் தன்னை அறிகிறான். தன்னை அறிய மற்றவர்கள் வரையறுக்கிறார்கள்.

பொருட்களால் வாழும் ஒரு மனிதன் தன்னுடைய உண்மையான சுயத்தை அறிந்து கொள்ள மாட்டான். ஏனெனில், அவன் பொருட்களால் சூழப்பட்டிருப்பதால் அவன் தன்னையும் ஒரு பொருளாக மட்டுமே வறையறுக்க முடியும். அவை உன்னை ஆன்மாவாக வரையறுக்க முடியாது.

ஆழமான அன்பில் மட்டுமே ஒருவர் தனது ஆன்மாவை உணர்கிறார். ஏனெனில், ஆழமான அன்பில்தான் மற்றவரின் ஆத்மாவை உணர்கிறார். மேலும் மற்றவரின் ஆன்மா உனக்குள் பிரதிபலிப்பை, ஒத்திசைவை உருவாக்குகிறது. திடீரென நீ ஒரு புதிய தளத்தை உணர்கிறாய். காலத்தையும் வெளியையும் கடந்தவற்றை உணர்கிறாய். மற்றவர் ஒருவருடைய சொந்த முகத்தை அறியும் கண்ணாடியாகிறாய். நீ யார் என்பதை உனக்கு காட்டுவதற்கு அன்பு ஒரு சிறந்த கண்ணாடி.

ஒரு மூடிய மனிதன் அவன் யார் என்பதை ஒருபோதும் அறிவதில்லை. அவனால் அறியமுடியாது. மேலும் அவன் அவனைப் பற்றி அறிந்த அனைத்தும் போலி. அவன் பொய்யான அடையாளத்தோடு வாழ்கிறான். அவன் அவனுடைய பெயர், பணம், கௌரவம், அதிகாரம் இவையே தான் என நினைத்துக் கொள்கிறான். அவை அனைத்தும் முட்டாள்தனம். அவன் அவைகளில் இல்லை. அவன் பிறப்புக்கு முன், இறப்பிற்கு பின் இருக்கும் தெய்வீகமான ஏதோ ஒன்று. ஆனால் அவன் அதைப்பற்றி உணர்வின்றி இருக்கிறான்.

ஒருவர் மென்மையாகவும், திறந்தநிலையிலும், தற்காப்பின்றியும் இருக்கவேண்டும். சூரியன், மழை, காற்று, எல்லாவற்றையும் அனுமதிக்கும், அழைக்கும், ஏற்றுக்கொள்ளும், வரவேற்கும் உறிஞ்சும்பஞ்சு போலாக வேண்டும். அப்போது பிரபஞ்சம் உன்னுள் ஊடுருவ இயலும். மேலும் ஒருவர் தன்னுடைய ஆழமான மையப்பகுதிக்கு செல்ல பிரபஞ்சத்தை அனுமதிக்க

வேண்டும். பிரபஞ்சம் உன்னுடைய இருப்பினுள் ஆழமாகச் செல்லும்போதுதான் நீ உனக்குள் இருக்கும் ஆழங்களை நீ உணர்வாய். உனது மையத்தை உன்னால் அறிந்து கொள்ளமுடியும். ஏனெனில், அதுதான் ஒரே வழி. மேலும் அதுதான் சுயத்தை அறிதல் எனக் கூறப்படுகிறது.

ஆனால் ஒருவர் எப்படி மென்மையாக இருப்பது, எல்லா கவசங்களையும் எப்படி கைவிடுவது, கதவுகளையும் ஜன்னல்களையும் எப்படி திறப்பது, எப்படி பயத்தை பிடித்து தொங்காமல் இருப்பது, எப்படி மரங்கள், மலைகள், ஆறுகள், மக்கள் மீது அன்பு செலுத்துவது என்று கற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில், அன்புதான் உனது கதவுகளைத் திறக்கும் சாவி. நீ அன்பு செலுத்தும்போதுதான் ஒருவருக்கு திறந்திருக்கிறாய். ஏனெனில், நீ பயப்படவில்லை. மற்றவர் உன்னை அடைய நீ அனுமதிக்கலாம். உன்னால் நம்பமுடியும். மற்றவர் உன்னை காயப்படுத்த மாட்டார் என்பதை நீ அறிவாய்.

முழு பிரபஞ்சத்தையும் ஒருவர் நம்பும் நாளில், ஒருவர் அதனை அறியும் நாளில்..... 'அது என்னை காயப்படுத்தப்போவதில்லை. ஏனெனில், நானும் அதன் ஒரு பகுதி. எப்படி முழுமை பகுதியை காயப்படுத்த முடியும்? ஏனெனில், என்னுடைய வலி அதனுடைய வலியுமாகும், என்னுடைய துன்பம் அதனுடைய துன்பமுமாகும்.' நீ துன்பத்திலிருக்கும்பொழுது பிரபஞ்சத்தின் ஒரு பகுதி துன்பப்படுகிறது. நீ அழும்பொழுது, பிரபஞ்சமும் அழுகிறது. ஏனெனில், உனது கண்ணீர் முழுமையின் கண்ணீர். எல்லா கண்களும் முழுமையின் கண்களே. எல்லா கைகளும் பிரபஞ்சத்தின் கைகளே. முழுமையான தெய்வீகத்திற்கு வேறு கண்களோ, வேறு கைகளோ கிடையாது. உனது இதயம் வலியால் நிறைந்து, உனது கண்கள் கண்ணீரில் நிறைந்திருக்கும்போது, பிரபஞ்சத்தின் இதயமும் வலியால் நிறைந்து, கண்கள் கண்ணீரில் மிதந்திருக்கும். முழுமை எப்படி பகுதியை காயப்படுத்தவோ, அதற்கு வலி ஏற்படுத்தவோ முடியும்? அது சாத்தியமற்றது. அது தேவையில்லாத பயம்.

நான் சொல்லிக்கொடுக்கும் ஒரே விஷயம் பயத்தை கைவிடு என்பதுதான். அது முற்றிலும் தேவையற்றது. மேலும் அது உன்னை முடமாக்கிறது, அசையவிடாமல் செய்கிறது. அது மக்களை அழிக்கக்கூடிய, மக்களை கொல்லக் கூடிய ஒருவிதமான மெதுவாக வேலை செய்யும் விஷம். அவர்கள் வாழ்கிறார்கள், ஆனாலும் அவர்கள் வாழ்வதில்லை. அவர்கள் இறந்து மட்டுமே போகிறார்கள். அவர்கள் எழுபது, எண்பது வருடங்கள் என மிக நீண்டகாலம் எடுத்துக் கொண்டு, மெதுமெதுவாக, பகுதிபகுதியாக இறக்கிறார்கள். அவர்கள் ஒரே கணத்தில் தற்கொலை செய்து கொள்வதில்லை. அதனால்தான் அது தற்கொலை என அறியப்படுவதில்லை. ஆனால் அது தற்கொலைதான்.

நான் கவனித்தது என்னவென்றால் 99% மக்கள் தற்கொலை செய்து கொள்கிறார்கள். வாழ்கிற ஒருவன், உண்மையிலேயே வாழும் ஒருமனிதன் மிகவும் அபூர்வம். அப்படி வாழ எல்லா விதமான அனுபவங்களுக்கும் திறந்திருக்கும் அளவு, எந்த நிபந்தனையும் இன்றி திறந்திருக்கும் அளவு துணிச்சல் உள்ளவனாக இருக்கவேண்டும்.

## அந்நியோன்யத்தின் பயம்

***கேள்வி: யாராவது ஒருவர் எனது பக்கத்தில் வரும்போது, நான் ஏன் பயத்தை உணர்கிறேன்? அது நம்பகத்தன்மை இல்லை என்ற காரணம் மட்டும்தானா?***

**ஓஷோ:** நீ முதலில் உன்னிடம் நம்பகத்தன்மை கொண்டிருந்தால் மட்டுமே நம்பகத்தன்மை சாத்தியம். அடிப்படையான விஷயம் முதலில் உனக்குள் நிகழவேண்டும். நீ உன்னை நம்பினால் உன்னால் மக்கள் மீது நம்பிக்கை வைக்கமுடியும். பிரபஞ்சத்தின் மீது நம்பகத்தன்மை கொள்ளமுடியும். ஆனால் உனக்கு உன்மேல் நம்பகத்தன்மை இல்லையென்றால் பின் அங்கு எந்த நம்பகத் தன்மையும் எப்போதும் சாத்தியமில்லை.

எல்லோரும் அதிகபட்சமாகவோ, குறைந்தபட்சமாகவோ பயப்படுகிறார்கள். அதனால்தான் மக்கள் மற்றவர்கள் தங்களை நெருங்கிவர அனுமதிப்பதில்லை, அன்பை தவிர்க்கிறார்கள். அன்பின் பெயராலேயே சிலசமயங்களில் அவர்கள் அன்பை தவிர்த்துக் கொண்டேயிருக்கிறார்கள். எல்லோரையும் ஒரு தொலைவிலேயே வைத்திருக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட தொலைவுக்கு மட்டுமே மற்றவர்களை அனுமதிக்கிறார்கள். அதன்பின் என்றால் பயம் எழுகிறது.

என்ன பயம்? அவர்கள் அருகில் வந்தால் அவர்கள் ஒருவேளை உன்னுடைய வெறுமையை கண்டறிந்துவிடக் கூடும் என்பதுதான் அந்த பயம். அது மற்றவர்களைப் பொறுத்ததல்ல. உன்னால் உன்னுடைய உள்ளார்ந்த வெறுமையை ஒருபோதும் ஏற்றுக் கொள்ள முடிந்ததில்லை. அதுதான் பயம். நீ மிகவும் அலங்கரிக்கப் பட்ட மேற்புறத்தை உருவாக்கியுள்ளாய். உனக்கு ஒரு அழகான முகம் உள்ளது. உன்னிடம் நல்ல சிரிப்பு உள்ளது. நீ நன்றாக தர்க்கரீதியாக பேசுவாய். நன்றாகப் பாடுவாய். உன்னிடம் ஒரு அழகான உடல் உள்ளது. ஒரு அழகான முகமூடி. ஆனால் அவை யாவும் மேற்புறத்தில் உள்ளன. இவைகளுக்கு பின்னால் இருப்பது வெறுமைதான். யாராவது மிகவும் அருகில் வந்தால் அவர்களால் முகமூடியைத் தாண்டி பார்க்கமுடியும், உனது சிரிப்பைத் தாண்டி உனது வார்த்தைகளுக்கு அடியில் பார்க்கஇயலும் என்று நீ பயப்படுகிறாய். அது உனக்கு திகிலூட்டுகிறது. அங்கு வேறு எதுவும் இல்லை என்று உனக்குத் தெரியும். நீ வெறும் வெத்துவேட்டு - அதுதான் உனது பயம் - உன்னிடம் எந்த ஆழமுமில்லை.

நீ ஆழமாக இருக்கமுடியாது என்பதல்ல. நீ அதனை பெறமுடியும். ஆனால் நீ முதலடியை எடுத்து வைக்கவில்லை. இந்த உள்ளார்ந்த வெறுமையை ஆனந்தமாக ஏற்றுக்கொள்ளுதலும் மேலும் அதனுள் செல்லுதலுமே முதலடியாகும். உன்னுடைய உள்ளார்ந்த வெறுமையை தவிர்க்காதே. நீ உனது உள்ளார்ந்த வெறுமையை தவிர்த்தால் மக்கள் உன்னிடம் நெருங்கி வருவதை நீ தவிர்ப்பாய். நீ உன்னுடைய வெறுமையைக் கொண்டாடினால்

நீ முழுமையாகத் திறந்திருப்பாய். மேலும் மக்கள் உன்னருகில் வந்து உனது உள்கோவிலை பார்க்க வரவேற்பாய். ஏனெனில், ஏற்றுக் கொள்ளப்படும்போது வெறுமைக்கு ஒரு குணம் வரும். அதுவே நிராகரிக்கப்படும்போது அதற்கு வேறு குணம் வரும்.

வேறுபாடு உனது மனதில் உள்ளது. நீ அதனை நிராகரித்தால் அது இறப்பைப் போல காட்சியளிக்கிறது. நீ அதனை ஏற்றுக் கொண்டால் அதே விஷயம் வாழ்க்கையின் ஆதாரமாக மாறுகிறது.

தியானத்தின் மூலமாக மட்டுமே நீ மற்றவர்களையும் உனதருகில் வர அனுமதிக்க முடியும். தியானத்தின் மூலமாக மட்டுமே உனது உள்ளார்ந்த வெறுமையை ஒரு ஆனந்தமாக, ஒரு கொண்டாட்டமாக, ஒரு பாடலாக உணரத் தொடங்குவாய். எப்பொழுது உனது உள்ளார்ந்த வெறுமை திகிலடையச் செய்யவில்லையோ, எப்பொழுது உனது உள்ளார்ந்த வெறுமை பயமடையச் செய்யவில்லையோ, எப்பொழுது உனது உள்ளார்ந்த வெறுமை ஒரு ஏகாந்தமாக, ஒரு தங்குமிடமாக, ஒரு ஓய்வெடுக்கும் இடமாக மாறுகிறதோ, எப்பொழுதெல்லாம் களைத்தாலும் அப்பொழுதெல்லாம் உனது உள்ளார்ந்த வெறுமையில் மூழ்கி நீ அங்கே மறைந்துவிடுகிறாயோ, நீ எப்பொழுது உள்ளார்ந்த வெறுமையில் எழும் ஆனந்தத்தை விரும்பத் தொடங்குகிறாயோ, அந்த வெறுமையில் ஆயிரக்கணக்கான தாமரை மலர்கள் மலர்கின்றன. அவை வெறுமையின் குளத்தில் மிதக்கின்றன.

ஆனால் உனக்கு காலியாகயிருப்பது மிகவும் பயமாக இருப்பதால் நீ அதைப் பார்ப்பதில்லை. நீ அதனைத் தவிர்க்க எல்லா முயற்சிகளையும் செய்கிறாய். நீ பாட்டு கேட்கிறாய், நீ திரைப்படம் செல்கிறாய், டி.வி. பார்க்கிறாய், செய்தித்தாள் படிக்கிறாய், துப்பறியும் கதை படிக்கிறாய், ஏதாவதொன்று, எதையாவது செய்கிறாய். ஆனால் நீ தொடர்ந்து உனது உள்ளார்ந்த வெறுமையை தவிர்த்துக் கொண்டிருப்பாய். களைப்பான பொழுதில் நீ தூங்குவாய், கனவு காண்பாய். ஆனால் ஒருபோதும் அதைச் சந்திக்கமாட்டாய். நீ ஒருபோதும் அதனை பக்கத்தில்

வைத்திருக்கமாட்டாய். ஒருபோதும் அதனைக் கட்டிப்பிடித்திருக்க மாட்டாய். அதுதான் காரணம்.

நீ கேட்கிறாய், 'யாராவது ஒருவர் எனது பக்கத்தில் வரும்போது நான் ஏன் பயத்தை உணர்கிறேன்?' ஒரு சிறந்த புரிதல் உனக்கு நிகழ்ந்துள்ளது. யாராவது பக்கத்தில் வரும்போது எல்லோரும் பயத்தை உணர்கிறார்கள். ஆனால் ஒருசில மக்கள் மட்டுமே அதனை அறிந்திருக்கிறார்கள். மக்கள் நிபந்தனையோடு மட்டுமே அருகிலிருப்பதை அனுமதிக்கிறார்கள். பெண் உனது மனைவி, பிறகு நீ அவளை உனது படுக்கையறையில் உறங்க, இரவில் உடனிருக்க அனுமதிக்கிறாய். ஆனாலும்கூட நீ உனக்கும் உனது மனைவிக்கும் இடையில் ஒரு கண்ணுக்குத் தெரியாத சுவரை வைத்துள்ளாய். சுவர் கண்ணுக்குத் தெரியாது, ஆனால் அது அங்கேயுள்ளது. நீ அதைப் பார்க்க விரும்பினால் கவனி, உன்னால் அதைக் கண்டுபிடிக்க இயலும். ஒரு மெல்லிய சுவர், கண்ணாடி சுவர், ஆனால் அது அங்குள்ளது. நீ உன்னோடு தனியாக இருக்கிறாய், உனது மனைவி அவள் அவளோடு தனியாக இருக்கிறாள். உங்களுடைய தனிமைகள் ஒருபோதும் சந்திப்பதில்லை. நீ உனது ரகசியங்களை வைத்துள்ளாய், அவள் அவளது ரகசியங்களை வைத்துள்ளாள். அடுத்தவர்கள் உன்னை அணுகும்வண்ணம் திறந்த உள்ளத்துடன் நீ இருப்பதில்லை.

காதலிலும்கூட நீ மற்றவர் உண்மையிலேயே உனக்குள் வர நீ அனுமதிப்பதில்லை. நீ மற்றவர் உனக்குள் ஊடுருவ அனுமதி தருவதில்லை. மேலும் நினைவில் கொள். நீ மற்றவர் உனக்குள் ஊடுருவ அனுமதித்தால் அங்கு சிறப்பான ஆனந்தம் கிடைக்கும். காதலர்களின் இரு உடல்களும் ஊடுருவினால் அது உடலியல் கிளர்ச்சி. இரு உள்ளங்கள் ஒன்றையொன்று ஊடுருவினால் அது உள்ளக்கிளர்ச்சி. மேலும் இரு ஆத்மாக்கள் ஒன்றையொன்று ஊடுருவினால் அது ஆன்மீகக் கிளர்ச்சி.

நீ மற்ற இரண்டைப்பற்றி கேள்விகூட பட்டிருக்கமாட்டாய். முதல் விஷயம் கூட அபூர்வம்தான். ஒரு சில மக்கள் மட்டுமே உண்மையான உடலியல் கிளர்ச்சியை அடைகிறார்கள். அவர்கள்

அதைப்பற்றி மறந்துவிட்டனர். விந்து வெளியேறுவதையே கிளர்ச்சியென்று நினைக்கிறார்கள். பல ஆண்கள் கிளர்ச்சியை அனுபவித்திருப்பதாக நம்புகிறார்கள். மேலும் பெண்கள் கண்களால் காணும் வண்ணம் வெளியேற்றாத காரணத்தால் 80% பெண்கள் தாங்கள் எந்த கிளர்ச்சியையும் அடையவில்லை என்று நினைக்கிறார்கள். ஆனால் வெளியேற்றுதல் கிளர்ச்சியல்ல. அது வெறும் ஒரு வெளிப்பாடு. ஒரு காம வெளிப்பாடு. அது கிளர்ச்சியல்ல. வெளிப்படுதல் எதிர்மறையான விஷயம். நீ வெறுமனே சக்தியை இழக்கிறாய். மேலும் கிளர்ச்சி முற்றிலும் வேறுபட்ட ஒரு விஷயம். அது ஒரு சக்தி நடனம். ஒரு வெளிப்பாடல்ல. ஒரு சக்தியின் பரவசநிலை. சக்தி ஒரு ஓட்டமாக மாறுகிறது. மேலும் அது உடல் முழுவதும் பரவுகிறது. அது காமரீதியானதல்ல, அது உடல்ரீதியானது. ஒவ்வொரு செல்லும் உனது உடலின் ஒவ்வொரு துளியும் ஒரு புதிய மகிழ்ச்சியில் துடிக்கிறது. அது புத்துயிர் பெறுகிறது. மேலும் சிறந்த அமைதி பின்தொடர்கிறது.

ஆனால், மக்களுக்கு உடலியல் கிளர்ச்சி கூட தெரியாது. எனவே, உள்ளரீதியான கிளர்ச்சி பற்றி என்ன பேசுவது? எப்படி பேசுவது? நீ யாராவது ஒருவரை மிக அருகில் - ஒரு நண்பன், ஒரு காதலர், ஒரு மகன், ஒரு தந்தை, என யாராவது ஒருவரை. அவர் உனக்கு என்ன உறவு என்பது ஒரு பொருட்டல்ல. - உள்ளங்கள் ஊடுருவும் அளவிற்கு, சந்தித்துக் கொள்ளும் அளவு நீ அனுமதிக்கும்போது அங்கு உடலியல் கிளர்ச்சியைக் கடந்த ஒன்று நிகழ்கிறது - அது ஒரு தாவுதல். உடலியல் கிளர்ச்சி அழகானது. ஆனால் மனவியல் கிளர்ச்சியோடு ஒப்பிடும்போது அது ஒன்றுமேயில்லை. நீ ஒருமுறை மனவியல் கிளர்ச்சியை தெரிந்து கொண்டுவிட்டால் மெதுமெதுவாக உடலியல் கிளர்ச்சி அதனுடைய ஈர்ப்பை இழந்துவிடுகிறது. அது ஒரு மிகவும் மலிவான மாற்று.

ஆனால் ஆன்மீகக் கிளர்ச்சியுடன் ஒப்பிடும்போது மனவியல் கிளர்ச்சி கூட ஒன்றுமேயில்லை. இரு உயிர்கள், என்று கூறும்போது

நான் இரு வெறுமைகளை, இரு பூஜ்யங்களை கூறுகிறேன். இரு உயிர்கள் - ஒன்றையொன்று சந்தித்துக் கொள்கின்றன, நினைவில் கொள், இரு உடல்கள் தொட்டுக் கொள்ள மட்டுமே முடியும். அவை ஒன்று கலக்கமுடியாது. ஏனெனில், அவை பொருட்கள். இரு உடல்கள் ஒரே வெளியில் எப்படியிருக்க முடியும்? அது சாத்தியமற்றது. எனவே அதிகபட்சமாக நீ நெருங்கி தொட்டுக் கொண்டு இருக்கமுடியும். இரு உடல்கள் தொட்டுக்கொள்ள மட்டுமே முடியும். காமத்தில்கூட இரு உடல்களும் தொட்டுக் கொள்ள மட்டுமே முடியும். ஊடுருவுதல் மிகவும் மேலோட்டமானது. ஒரு தொடுதலைத் தவிர வேறொன்றுமில்லை. ஏனெனில், இரு பொருட்கள் ஒரே இடத்தில் இருக்கமுடியாது. நான் இந்த இடத்தில் இந்த நாற்காலியில் அமர்ந்திருந்தால் வேறு யாரும் இதே இடத்தில் அமர முடியாது. ஒரு கல் குறிப்பிட்ட இடத்திலிருந்தால் நீ அதே இடத்தில் வேறு பொருளை வைக்கமுடியாது. வெளி நிரப்பப்பட்டுள்ளது.

பருப் பொருட்கள் வெளியை நிரப்புகின்றன. எனவே இரு பருப்பொருட்கள் தொடமட்டுமே முடியும். மேலும் அது காதலில் துன்பத்தின் ஒரு பகுதி. நீ உடலின் காதலை மட்டுமே அறிந்தால் பின் எப்போதும் துன்பத்திலேயே இருப்பாய். ஏனெனில், நீ வெறுமனே தொட்டுக் கொண்டிருப்பாய். மேலும் ஒன்றாவதே ஆழமான ஆசை. ஆனால் இரு பருப்பொருட்கள் ஒன்றாக முடியாது. அது சாத்தியமில்லை.

இரு உள்ளங்களுக்கிடையில் ஒரு சிறந்த தொடர்பு நிகழ்கிறது. அவர்கள் இன்னமும் நெருங்கி வரமுடியும். ஆனாலும்கூட இரு எண்ணங்கள் ஒரே வெளியில் இருக்கமுடியாது. ஏனெனில், எண்ணங்களும் நுண்ணிய பொருட்களே. அவை இன்னமும் சிறப்பாக தொடமுடியும். இரண்டு பொருட்களை விட சிறந்த முறையில் பின்னிக் கொள்ளமுடியும். பொருட்கள் மிகவும் கடினமானவை. எண்ணங்கள் திரவத்தன்மை கொண்டவை. இரு காதலர்களின் உடல்கள் சந்திக்கும்போது, இரு கற்கள் ஒன்று சேர்வதைப் போன்றது, இரு மனங்கள் சந்திக்கும்போது நீரும்,

எண்ணெயும் ஒன்று சேர்வதைப் போன்றது. ஆம், இது அதை விட சிறந்த சந்திப்புதான். ஆனால் இன்னமும் அங்கொரு நுண்ணிய பிளவுள்ளது. இரு எண்ணங்கள் ஒரே வெளியை நிரப்ப முடியாது. நீ ஒரு எண்ணத்தைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் அதே நேரத்தில் மற்றொரு எண்ணத்தைச் சிந்திக்கமுடியாது. முதல் எண்ணம் போகவேண்டும். பிறகு மட்டுமே மற்றொரு எண்ணத்தை கவனிக்க முடியும். ஒரு நேரத்தில் ஒரு வெளியில் உனது மனதில் ஒரேயொரு எண்ணம் மட்டுமே இருக்கமுடியும். எனவே நட்பு கூட - மனரீதியான நட்பு - ஏதோஒன்றை தவற விட்டுவிடுகிறது. ஏதோஒன்று இல்லாமல் இருக்கிறது. முதலில் இருப்பதை விட இது சிறந்தது, ஆனால் மூன்றாவதுடன் ஒப்பிடும்போது இது ஒன்றுமேயில்லை.

ஆன்மீக ஊடுருவுதல் மட்டுமே வேறொருவருடன் ஒன்றாக இருப்பதற்கான ஒரே வாய்ப்பு. ஏனெனில், உயிர் என்றால் வெறுமை. இரு வெறுமைகள் ஒன்றாக இருக்கமுடியும். மேலும் இரண்டுமல்ல, உலகத்திலுள்ள அனைத்து வெறுமைகளும் ஒன்றாக இருக்கமுடியும். அவை ஒரே நேரத்தில், ஒரே வெளியில் இருக்கமுடியும். அங்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. ஏனெனில், அவை பொருட்களைப் போல கடினமாகவும் இல்லை, தண்ணீரைப் போல திரவமாகவும் இல்லை. அவை வெறுமனே தானற்று இருக்கின்றன. நீ எல்லையற்ற எண்ணிக்கையில் வெறுமைகளை ஒன்றிணைக்க இயலும்.

நீ உனது வெறுமையை உணரத் தொடங்கும்போது - நினைவில் கொள். ஆனந்தமாக உணரத்தொடங்கும்போது - மக்கள் உனக்கருகில் வர உன்னால் அனுமதிக்க இயலும். உன்னால் அனுமதிக்க இயலும் என்பது மட்டுமல்ல, நீ எப்போதும் வரவேற்பாய், அழைப்பாய். ஏனெனில், எப்போதும் யாராவது உனக்குள் வரவிரும்பினால், அதற்கு ஒரே வழி அவனுக்குள் உன்னை அனுமதிப்பதே. வேறெந்த வழியுமில்லை. நீ எனக்குள் வர விரும்பினால் ஒரே வழி உனக்குள் என்னை அனுமதிப்பதே. அதற்கு வேறெந்த வழியுமில்லை.

நீ இருக்கும் நிலையில் எப்பொழுதெல்லாம் ஏதாவது நிகழத் தொடங்குகிறதோ, அப்போதெல்லாம் நீ பயப்பட்டு தப்பிக்கத் தொடங்குகிறாய்.

நினைவில் கொள். மிகவும் பயமூட்டும் ஏதோ ஒன்று நிகழும்போது அது எங்கும் செல்ல வேண்டிய நேரமல்ல. இங்கிருக்க வேண்டிய நேரம். ஏதோ ஒன்று நிகழும் போது உனக்கு திகிலாக இருக்கிறதென்றால் அப்போது ஏதோ நிகழ்கிறது. அந்தக் கணம் மிகவும் அர்த்தமுடையது. அப்போது நீ இங்கிருந்தாக வேண்டும். மேலும் நீ அதற்குள் ஆழ்ந்து சென்றாக வேண்டும்.

இதுவொரு நல்ல புரிதல். யாராவது பக்கத்தில் வரும்போது நான் ஏன் பயப்படுகிறேன் என்று நீ கேட்கிறாய். உன்னுடைய வெறுமை குறித்து ஒரு சிறிதளவு உணர்வு கொண்டுள்ளாய். இப்போது இந்த உணர்வு அதிகரிக்கட்டும். இந்த உணர்வு ஒரு சிறந்த அனுபவமாக மாறட்டும். இந்த வெறுமைக்குள் செல். விரைவில் இந்த வெறுமைதான் தியானம் என்று அறிந்து நீ ஆச்சரியப்படுவாய். நான் தெய்வீகமென்று அழைப்பது இந்த வெறுமையைத்தான். பிறகு நீ ஒரு புதியவராக இருந்தாலும்கூட உள்ளே வர விரும்பும் ஒரு கோயிலாக மாறிவிடுவாய்.

## உன்னைக் கண்டு பயப்படுதல்

***கேள்வி: நான் எனது சொந்த சூழலைப் பார்த்தால் மற்றவர்களை எனது அருகில் அனுமதிப்பது என்ற கேள்வி கூட எழாத அளவு அடுத்தவர்களைப் பார்த்து நான் பயப்படுகிறேன். அடுத்தவர்களை குறித்த இந்த பயம் என்ன?***

**ஓஷோ:** நீ உன்னைக் கண்டு பயப்பட்டால் மட்டுமே நீ அடுத்தவர்களைக் கண்டு பயப்படுவாய். நீ உன்மீது அன்பு கொண்டால் நீ மற்றவர்கள் மீதும் அன்பு செலுத்துவாய். நீ உன்னை வெறுத்தால் நீ மற்றவர்களையும் வெறுப்பாய். மற்றவர்களுடனான உறவில் நீ பிரதிபலிக்கப்படுகிறாய். அடுத்தவர்கள் ஒரு

கண்ணாடியைத் தவிர வேறொன்றுமில்லை. எனவே மற்றவர்களுடனான உறவில் என்ன நடந்தாலும் அது ஏற்கனவே கண்டிப்பாக உன்னுள் நிகழ்ந்ததே என்பதை எப்போதும் அறிந்து கொள். ஏனெனில், உறவு ஏற்கனவே இருப்பதை பெரிதுபடுத்தி மட்டுமே காட்டும். அது உருவாக்கமுடியாது. அது ஏற்கனவே இருப்பதை காட்டவோ அல்லது பெரிதுபடுத்தி காட்டவோ செய்யும்.

நீ உன் மீது அன்பு கொண்டால் நீ மற்றவர்கள் மீதும் அன்பு செலுத்துவாய். நீ உன்னைக் கண்டு பயப்பட்டால் நீ மற்றவரைக் கண்டும் பயப்படுவாய். நீ மற்றவர்களுடன் தொடர்பு கொள்ளும் போது நீ உனது இருப்பை வெளிப்படுத்தத் தொடங்குவாய்.

நீ பழக்கப்படுத்தப்பட்டுள்ளாய். கிழக்கில், மேற்கில், எல்லா இடங்களிலும், கிறிஸ்துவர்கள், இந்துக்கள், முகம்மதியர்கள், ஜைனர்கள் என அனைவரும் உங்களை நீங்களே வெறுக்க பழக்கப்படுத்தப்பட்டுள்ளீர்கள். உன்மீது அன்பு செலுத்துதல் தவறானது என்று உனக்கு போதிக்கப்பட்டுள்ளது. நீ மற்றவர்கள் மீது அன்பு செலுத்தவேண்டும், உன்மீது அல்ல. இது சாத்தியமற்றது, அபத்தமானது. உனக்கு மிக அருகில் இருக்கும் உன்மீதே நீ அன்பு செலுத்தவில்லையென்றால் உன்னால் மற்றவர்கள் மீது எவ்வாறு அன்பு செலுத்தமுடியும்? யாரும் தன்மீது அன்பு கொள்வதில்லை. ஆனாலும் அவர்கள் மற்றவர்கள் மீது அன்பு செலுத்த முயற்சிக் கிறார்கள். பின் உனது அன்பு என்பது முகமூடி போட்டுள்ள, மறைக்கப்பட்ட வெறுப்பு என்பதைத் தவிர வேறொன்றுமில்லை.

நான் முதலில் நீ உன்மீது அன்பு செலுத்தும்படி கூறுகிறேன். ஏனெனில் அன்பு உனக்குள் நிகழ்ந்துவிட்டால், பின் அது மற்றவர்களுக்கும் பரவக்கூடும். அது மௌனமாக இருக்கும் குளத்தில் ஒரு கல்லை எறிவதைப் போன்றது. கல் விழுகிறது, அலை எழுகிறது, பின் அவை நகர்ந்துகொண்டே இருக்கின்றன. தொலைவிலுள்ள கரையை நோக்கி நகர்ந்து கொண்டே போகின்றன. ஆனால் கல் முதலில் உனக்குள் விழுந்தாகவேண்டும்.

அன்பு உனக்கு கிடைக்கவேண்டும். நீ உன்னை நேசிக்க வேண்டும். அது ஒரு அடிப்படைத்தேவை. உலகம் முழுவதும் அது தொலைந்துவிட்டது. அதனால்தான், இந்த உலகம் இவ்வளவு துன்பத்திலிருக்கிறது. எல்லோரும் மற்றவர்கள் மேல் அன்பு செலுத்த முயற்சிக்கிறார்கள், ஆனால் அன்பு செலுத்துவது இயலாத காரியமாக இருக்கிறது. ஏனெனில் அஸ்திவாரம் அங்கில்லை. அடிப்படை அங்கில்லை.

உன்னை நேசி, பின் திடீரென எல்லா இடங்களிலும் அன்பு பிரதிபலிக்கப்படுவதைக் காண்பாய்.

நீ ஒரு மனிதன். அடுத்தவர்களும் உன்னைப் போன்றவர்களே. உருவங்கள் வேறுபடும், பெயர்கள் வேறுபடும், ஆனால் அடிப்படை அதேதான். இன்னும் இன்னும் என்று சென்று கொண்டிருந்தால் அங்கே விலங்குகளும் உன்னைப் போன்றவை தான். உருவம் ஒரு சிறிதளவு மாறுபட்டிருக்கிறது. ஆனால் இருப்பு? இன்னும் இன்னும் என்று சென்றால் மரங்களும் உன்னைப் போன்றவையே. தொலைவாகச் செல், அலைகள் பரவட்டும். பாறைகளும் இணையும். ஏனெனில், அவைகளும் உன்னைப் போலவே இங்கு இருக்கின்றன. பிரபஞ்சம் அதேதான், ஒன்று போலவே இருக்கும்.

இதுதான் ஒரே வழி. உன்னை நேசிப்பதிலிருந்து தொடங்கு. மேலும் மேலும் என அன்பு பரவட்டும். அங்கு எந்த எல்லைகளும் தேவையில்லை. எல்லையற்று சென்று கொண்டேயிரு.

ஆனால் நீ முதல் விஷயத்தை தவற விட்டுவிட்டால், கல் எறியப்படாவிட்டால் நீ காத்துக்கொண்டே இருக்க வேண்டியது தான், ஒருபோதும் அலைகள் எழாது. அது வேறு எங்கிருந்தும் தொடங்காது. அது உன்னுடைய இதயத்திலிருந்துதான் தொடங்க முடியும். அன்பு இதயத்தின் அலை, இதயத்தின் ஒரு அதிர்வு, இதயத்தின் ஒரு துடிப்பு, உன்னைப் பகிர்ந்துகொள்ளும் ஒரு உயிரோட்டம், போய் அடுத்தவரை சென்றடையும் தீவிரமான, ஆழமான விருப்பம், உன்னுடைய இருப்பை, உன்னுடைய

ஆனந்தத்தை, உன்னுடைய இசையைப் பகிர்ந்து கொள்வதற்கான வேட்கை. ஆனால் உன்னுடைய இதயம் கிட்டத்தட்ட இறந்துபோய் உறைந்திருக்கிறது. நீ உன்னை ஏற்றுக் கொள்ள முடியாதபடி, - நீ அசிங்கமானவன், நீ கெட்டவன், இது குற்றம், இது தவறு, இதை செய்யக்கூடாது - நீ கண்டனம் செய்து வைக்கப்பட்டிருக்கிறாய். நீ உன்னையே ஏற்றுக் கொள்ளாதபோது மற்றவரை எப்படி உன்னால் ஏற்றுக்கொள்ள முடியும்?

ஒரு ஆழமான ஏற்றுக்கொள்ளுதல் தேவை. நீ என்னவாக இருந்தாலும்,யாராக இருந்தாலும், ஆழமான ஏற்றுக்கொள்ளுதல் தேவை. ஏற்றுக்கொள்ளுதல் மட்டுமல்ல, நீ இருப்பதில் மகிழ்வும் தேவை. இப்படித்தான் இருக்கவேண்டும் என்று எதுவும் இருக்கக்கூடாது. 'கண்டிப்பாக' என்ற எல்லாவற்றையும் விட்டு விட்டால் பின் இந்த உலகம் முழுதும் வித்தியாசமாகி விடும். 'நான் இப்படி இருக்கவேண்டும், அப்படி நடந்து கொள்ள வேண்டும், அப்போதுதான் என்னால் நேசிக்கமுடியும், நானும் நேசிக்கப் படுவேன்' என்று தொடர்ந்து நினைத்துக் கொண்டேயிருக்கிறாய்.

உன்னுடைய கடவுள் கூட குற்றம் கண்டுபிடிப்பவராகத்தான் இருக்கிறார். வானத்திலிருந்து பார்த்து, 'டேய்! சரியாக நடந்துகொள்' என்று கூறுபவராக இருக்கிறார். அது உனக்கு உன்னைப்பற்றி ஒரு மோசமான உணர்வைத் தருகிறது. மெதுமெதுவாக நீ பயப்படத் தொடங்குகிறாய். ஏனெனில், இந்த குற்றம் கண்டுபிடித்தலால் நீ உன்னை அடக்கி வைத்துள்ளாய். யாராவது ஒருவருடன் நீ நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டால், அடக்கி வைத்திருப்பது யாவும் உடைந்து மேல்மட்டத்திற்கு வந்துவிடக்கூடும். பிறகு என்ன செய்வது? எனவே நீ பயப்படுகிறாய். எதனுடனும் தொடர்பு கொள்ள பயப்படுகிறாய். உனக்குள் நீ மறைந்து கொள்கிறாய். நீ எவ்வளவு மோசமானவன் என்பதோ, நீ எவ்வளவு கோபமானவன் என்பதோ, நீ எவ்வளவு வெறுப்பை உள்ளே வைத்திருக்கிறாய் என்பதோ, உனக்கு பொறாமை, பிடிப்பு, கடுப்பு எவ்வளவு உள்ளது என்பதோ யாருக்கும் தெரியாது. யாருக்குமே தெரியாது. நீ

உன்னைச் சுற்றி ஒரு கவசத்தை உருவாக்கிக் கொண்டு அதனுள் நீ வாழ்கிறாய். எனவே உனது பிம்பத்தை சமாளித்து வைத்துக் கொள்ள முடியும். நீ ஒருபோதும் எந்தத் தொடர்பும் கொள்வதில்லை. நீ அடுத்தவருடன் ஆழமாக தொடர்பு கொண்டால் அந்த பிம்பம் கண்டிப்பாக உடைந்துவிடும். நேரடியான தொடர்பு, உண்மையான சந்திப்பு அதை நொறுக்கிவிடும். அதுதான் பயம்.

நீ, 'நான் ஏன் மற்றவர்களைக் கண்டு பயப்படுகிறேன்?' என்று கேட்கிறாய். ஏனெனில் நீ உன்னைக் கண்டு பயப்படுகிறாய்.

அந்த பயத்தை விட்டுவிடு. உனக்குள் உருவாக்கப்பட்டிருக்கும் குற்றவுணர்ச்சியை விட்டுவிடு. உன்னுடைய பெற்றோர்கள், பூசாரிகள், அரசியல்வாதிகள் என அனைவரும் குற்றவுணர்ச்சியை உருவாக்குபவர்கள்தான். ஏனெனில் அப்போதுதான் உன்னைக் கட்டுப்படுத்தவும், உன்மேல் அதிகாரம் செலுத்தவும் உள்ள ஒரே வழி அதுதான். இது மிகவும் எளிமையான ஆனால் தந்திரமான சூழ்ச்சி. அவர்கள் உன்னைக் குற்றம் சொல்கிறார்கள். ஏனெனில் நீ கண்டனம் செய்யப்படாமல் இருந்தால், ஏற்றுக்கொள்ளப் பட்டால், அன்பு செலுத்தப்பட்டால், நீ செய்வது சரிதான் என்பது போல எல்லா இடங்களிலிருந்தும் பாராட்டப்பட்டால், பிறகு உன்னைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினம்.

முற்றிலும் சரியாக இருக்கும் ஒரு மனிதனை எவ்வாறு கட்டுப்படுத்துவது? இந்த பிரச்சனையே எழக்கூடாது. எனவே அவர்கள் நீ சரியில்லை என்று சொல்லிக் கொண்டேயிருக் கிறார்கள். - பூசாரிகள், அரசியல்வாதிகள், பெற்றோர்கள் - நீ சரியில்லை என்ற உணர்வை ஒருமுறை ஏற்படுத்தி விட்டால் பின் அவர்கள் உத்திரவிடுபவர்களாகி விடுகிறார்கள். இப்படித்தான் நீ நடந்து கொள்ள வேண்டும் என்று ஒழுக்கத்தை போதிக்க ஆரம்பிக்கிறார்கள். முதலில் நீ தவறு என்ற உணர்வை உருவாக்குகிறார்கள், பின் எப்படிச் சரியாக நடந்துகொள்வது என்ற விதிமுறைகளை அளிக்கிறார்கள்.

நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே ஏற்றுக்கொள். ஏனெனில், அப்படி மட்டுமே நீ இருக்கமுடியும். முழுமை நீ அப்படி

இருப்பதைத்தான் விரும்புகிறது. அப்படித்தான் இருக்கவேண்டும் என்று முழுமை முடிவு செய்துள்ளது. தளர்வாக இரு, ஏற்றுக்கொள், மகிழ்வோடிரு. பின் அங்கே ஒரு நிலைமாற்றம் நிகழும். அது முயற்சியால் வருவதல்ல. அறிந்தோ, அறியாமலோ, தெரிந்தோ, தெரியாமலோ, எந்த நிபந்தனையும் போடாமல் உன்னை ஆழமான அன்புடன் பரவசத்துடன் ஏற்றுக் கொள்வதால் வருவது. அப்போது திடீரென நீ மக்களைக் கண்டு பயப்படாமல் இருப்பதைக் காண்பாய். பதிலாக நீ அவர்கள் அழகானவர்கள் என்பதை அனுபவிப்பாய். அவர்கள் அனைவரும் கடவுள்தன்மையின் வெளிப்பாடுகள். நீ அவர்களை நேசிக்கிறாய். நீ அவர்களை நேசிப்பதன் மூலம் அவர்களின் கடவுள்தன்மையை மேல் மட்டத்திற்கு கொண்டு வருகிறாய்.

நீ ஒரு மனிதனை நேசிக்கும்பொழுது அவனது தெய்வீகத்தன்மை வெளிவருகிறது. அது நிகழ்கிறது. ஏனெனில், யாராவது உன்னை நேசிக்கும்பொழுது நீ எப்படி உனது அசிங்கத்தை வெளிக்காட்ட முடியும்? உனது அழகான முகம் வெளிவருகிறது. மெதுமெதுவாக இந்த அசிங்கம் மறைந்துவிடுகிறது. அன்பு இரசவாதமானது. நீ உன்னை நேசிக்கும்பொழுது, உனது அசிங்கமான பகுதி மறைந்துவிடுகிறது, அது உள்ளிழுக்கப்பட்டு நிலைமாற்றமடைகிறது. இந்த உருவகத்தில் சிக்கியிருந்த சக்தி வெளிவருகிறது.

எல்லாவற்றிலும் சக்தி உள்ளது. உனது கோபத்தில் அதிக சக்தி உள்ளது. மேலும் உனது பயத்திலும் அடக்கப்பட்ட, முடக்கப்பட்ட அதீதமான சக்தி உள்ளது. பயம் மறைந்துவிட்டால் உருவகமும் மறைந்துவிடுகிறது. அதிலுள்ள சக்தி வெளிப்படுகிறது. கோபம் மறைந்தால் அதீத சக்தி வெளிவருகிறது. பொறாமை இன்னும் அதிக சக்தியை பிடித்து வைத்திருக்கும். பாவங்கள் என்று நாம் சொல்பவை யாவும் மறைந்து விடும். நீ அவைகளை மாற்ற வேண்டும் என்பதல்ல, நீ உனது இருப்பை விரும்பினால், அவை மாறுகின்றன. மாற்றம் என்பது பக்கவிளைவு, அது ஒரு தற்செயல். பின் மிக அதிக அளவில் சக்தி வெளிப்படுகிறது. நீ மேன்மேலும் உயரமாக பறக்க தொடங்குகிறாய். உனக்கு சிறகுகள் வருகின்றன.

உன்மீது அன்பு செலுத்து. அது அடிப்படை கட்டளையாக இருக்கவேண்டும். உன்மீது அன்பு செலுத்து. மற்றவை அனைத்தும் பின்தொடரும். ஆனால் அஸ்திவாரம் இதுதான்.

## அன்பின் மறுபக்கம்

பயம் அன்பின் மறுபக்கம். நீ அன்பு செலுத்தினால் பயம் மறைந்துவிடுகிறது. நீ அன்பில் இல்லையென்றால் பயம், மிகப்பெரும் பயம் எழுகிறது. நேசிப்பவர்கள் மட்டுமே பயமின்றி இருக்கிறார்கள். ஆழமான அன்பில் மட்டுமே பயமில்லாமல் இருக்கிறது. ஆழமான அன்பின் தருணங்களில் பிரபஞ்சமே வீடாகிறது. நீ வேறு ஆளல்ல, நீ வெளி ஆளல்ல. நீ ஏற்றுக் கொள்ளப் பட்டவன். ஒரே ஒருவரால் நீ ஏற்றுக் கொள்ளப்பட்டால் கூட ஆழத்தில் ஏதோ ஒன்று திறக்கிறது. அடிஆழ இருப்பில் மலர் போன்ற ஒரு விஷயம் திறக்கிறது. யாரோ ஒருவரால் நீ ஏற்றுக்கொள்ளப்படுகிறாய். நீ மதிக்கப்படுகிறாய். நீ வீண் அல்ல. உனக்கு ஒரு முக்கியத்துவம் உள்ளது, ஒரு அர்த்தம் இருக்கிறது.

உன்னுடைய வாழ்க்கையில் அன்பு இல்லாவிட்டால், பிறகு நீ பயப்படுவாய். பிறகு எல்லா இடங்களிலும் பயம் இருக்கும். ஏனெனில் எல்லா இடங்களிலும் எதிரிகளே, நண்பர்களே இல்லை. மேலும் முழு பிரபஞ்சமும் அன்னியமாகத் தெரிகிறது. நீ வீட்டில் இல்லாதது போல, வேரற்று இருப்பதைப்போல. நீ இருப்பது ஒரு விபத்தைப்போல தோன்றுகிறது. ஒரே ஒரு மனிதன் கூட அன்பில் உனக்கு மிக ஆழமான சொந்த அகத்தில் இருப்பதைப் போன்ற உணர்வைத் தரமுடியும் என்றால், முழுமையின் மீதும், அன்பு செலுத்துவதைப்பற்றி என்ன சொல்ல?

எனவே பயம் உண்மையில் அன்பில்லாத தன்மையே. மேலும் உனக்கு பயம் ஒரு பிரச்சனையாக இருந்தால் அது நீ தவறான பக்கத்தைப் பார்க்கிறாய் என்பதையே காட்டுகிறது. பிரச்சனை அன்பாக இருக்கவேண்டும், பயமல்ல. பயம் ஒரு பிரச்சனையாக இருந்தால் நீ அன்பைத் தேடவேண்டும் என்று பொருள். பயம் ஒரு

பிரச்சனையாக இருந்தால் உண்மையில் நீ இன்னும் அதிகமாக அன்பு செலுத்தவேண்டும். எனவே யாராவது உன்மீது அதிக அன்பு செலுத்தும் வண்ணம் நீ இன்னும் திறந்த மனதுள்ளவனாக இருக்கவேண்டும்.

ஆனால் இதுதான் தொந்தரவு. நீ பயத்தில் இருக்கும்போது நீ மூடியிருக்கிறாய். நீ மிகவும் பயப்படுவதால் அடுத்தவரை நகர்வதை நிறுத்திவிடுகிறாய். நீ தனியாக இருக்க விரும்புகிறாய். எப்போதெல்லாம் கூட ஒருவர் இருக்கிறாரோ அப்போதெல்லாம் நீ பதட்டமாக உணர்கிறாய். ஏனெனில் அவர் உனக்கு எதிரியைப்போல தோற்றமளிக்கிறார். மேலும் நீ இந்த அளவிற்கு பயத்தால் ஆட்கொள்ளப்பட்டு இருந்தால் அது ஒரு சுழற்சி வட்டம், அன்பற்றதன்மை உனக்குள் பயத்தை உண்டாக்குகிறது. மேலும் பயத்தின் காரணமாக நீ மூடிக்கொள்கிறாய். நீ ஜன்னல்கள் அற்ற மூடப்பட்ட ஒரு சிறைச்சாலை என மாறிவிடுகிறாய். ஏனெனில், ஜன்னல்கள் வழியாகவும் யாராவது வந்துவிடக்கூடும் என்று நீ பயப்படுகிறாய். சுற்றிலும் எதிரிகள் இருக்கிறார்கள் என நீ கதவைத் திறக்க பயம் கொள்கிறாய். ஏனெனில், நீ கதவைத் திறக்கும்போது எது வேண்டுமானாலும் சாத்தியம். எனவே அன்பு உனது கதவைத்தட்டும் பொழுதுகூட நீ நம்புவது இல்லை.

ஒரு ஆணோ, பெண்ணோ பயத்தில் வேர் கொண்டு இருந்தால் காதலில் விழ எப்பொழுதும் பயப்படுவார்கள். ஏனெனில், பிறகு இதயத்தின் கதவு திறந்துவிடும், மற்றவர் உனக்குள் நுழைந்து விடுவார். மற்றவர் என்றாலே எதிரிதான். அப்போது சாத்ரே சொல்வது போல 'மற்றவர் என்றாலே நரகம்தான்.'

நேசிப்பவர்கள் இன்னொரு உண்மையை அறிந்துகொள் கிறார்கள். மற்றவர் என்பது சொர்க்கம், சொர்க்கலோகமேதான். சாத்ரே கண்டிப்பாக ஆழமாக வேர் கொண்ட பயத்தில் சிரமத்தில் பதட்டத்தில் வாழ்ந்திருக்கவேண்டும். சாத்ரே செல்வாக்குள்ள ஆளாக மாறிவிட்டார். உண்மையில் அவர் ஒரு நோயைப்போல, ஒரு அபாயகரமான நோயைப்போல தவிரக்கப்பட வேண்டும்.

ஆனால் அவர் மக்களைக் கவர்கிறார். ஏனெனில், பலர் அவர்களுடைய சொந்த வாழ்க்கையில் அவர் சொல்வதைப் போல உணர்கின்றனர். அதுதான் அவருடைய கவர்ச்சி. மனஅழுத்தம், சோகம், கஷ்டம், பயம் இவைதான் சாத்ரேவின் கொள்கைகள். பிரபஞ்சத்தின் கொள்கைகள் என்கிறார். மக்கள் இவை தங்களுடைய பிரச்சனைகள் என உணர்கிறார்கள். நான் அன்பைப் பற்றி பேசும்போது அது உனது பிரச்சனை அல்ல, பயம்தான் எனது பிரச்சனை என நீ நினைக்கிறாய். ஆனால் அன்புதான் உனது பிரச்சனை, பயமல்ல என்று நான் உனக்குச் சொல்ல விரும்புகிறேன்.

வீடு இருளாக உள்ளது. நான் வெளிச்சத்தைப்பற்றி பேசுகிறேன். நீ, 'நீங்கள் வெளிச்சத்தைப்பற்றி பேசிக்கொண்டேயிருக்கிறீர்கள். நீங்கள் இருளைப்பற்றி பேசினால் சிறப்பாக இருக்கும். ஏனெனில், இருள்தான் நமது பிரச்சனை. வீடு இருளில் மூழ்கிக்கிடக்கிறது. வெளிச்சம் நமது பிரச்சனை அல்ல' என்று கூறுகிறாய். ஆனால் நீ என்ன கூறுகிறாய் என்று உனக்கு தெரியுமா? இருள் உனது பிரச்சனையாக இருந்தால் இருளைப்பற்றி பேசுவது உதவி செய்யாது. இருள் உனது பிரச்சனையாக இருந்தால் இருளை நேரிடையாக ஒன்றும் செய்யமுடியாது. நீ அதனை வெளியே வீசமுடியாது, நீ அதனை வெளியே தள்ளமுடியாது, நீ அதனை போக்கமுடியாது. இருள் ஒரு இல்லாததன்மை, அதை நேரிடையாக எதுவும் செய்யமுடியாது. நீ எதையாவது செய்ய வேண்டுமென்றால் நீ ஒளியோடுதான் செய்யமுடியும், இருளோடு அல்ல.

ஒளியின் மீது கவனம் செலுத்து, ஒளியை எவ்வாறு உருவாக்குவது, ஒளியை எங்கிருந்து கொண்டு வருவது, வீட்டினுள் மெழுகுவர்த்தியை எவ்வாறு ஏற்றுவது என்று சிந்தி. அதைச் செய். திடீரென அங்கே இருளில்லை.

நினைவில் கொள். அன்புதான் பிரச்சனை, பயமல்ல. நீ தவறான பக்கத்தைப் பார்க்கிறாய். பல பிறவிகளுக்கு தவறான பக்கத்தைப் பார்க்கலாம். உன்னால் எதையும் தீர்க்கமுடியாது. எப்போதும் நினைவில் கொள். இல்லாத தன்மை ஒரு பிரச்சனையாக

மாற்றப்படக்கூடாது. ஏனெனில், அதை எதுவும் செய்யமுடியாது. இருப்பதை மட்டுமே பிரச்சனையாக பார்க்க வேண்டும். ஏனெனில், அதை ஏதாவது செய்து அதனைத் தீர்க்கமுடியும்.

பயம் உணரப்பட்டால், பின்பு அன்புதான் பிரச்சனை. அன்பு செலுத்துபவனாக மாறு. அடுத்தவரை நோக்கிச் சிலஅடிகள் எடுத்துவை. ஏனெனில் நீ மட்டுமல்ல, எல்லோரும் பயத்தில்தான் இருக்கிறார்கள். நீ யாராவது வந்து உன்னை நேசிப்பார்கள் என்று காத்துக்கொண்டிருக்கிறாய், ஆனால் காலாகாலத்திற்கும் காத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். ஏனெனில், மற்றவர்களும் பயத்தில்தான் இருக்கிறார்கள். மேலும் பயத்தில் இருக்கும் மக்கள் ஒரு விஷயத்தைக் கண்டு பயத்தால் அதை முற்றிலும் ஒதுக்கி விடுவார்கள். அதை நிராகரித்துவிடுவார்கள்.

நான் வந்து உனது கதவைத்தட்டினால் நீ என்னை நிராகரிப்பது சாத்தியம். அந்த நிராகரிப்பு ஒரு காயமாக மாறும். எனவே போகாமல் இருப்பதே நல்லது. அதைவிட தனியாக இருப்பதே நல்லது. தனியே சென்று கொள்ளலாம், மற்றவரோடு சம்பந்தப் படாமல் இருப்பதே நல்லது. ஏனெனில், மற்றவர் உன்னை நிராகரிக்க முடியும். நீ அன்பை நோக்கி நகரத் தொடங்கும் கணத்தில் முதல்பயம் வருகிறது. அடுத்தவர் உன்னை ஏற்றுக் கொள்வாரா, நிராகரிப்பாரா? அவர் அல்லது அவள் நிராகரிக்க கூடும்.

அதனால்தான் பெண்கள் ஒருபோதும் முதலில் அடியெடுத்து வைப்பதில்லை. அவர்கள் அதிகபயத்தில் நிறைந்திருக்கிறார்கள். அவர்கள் எப்போதும் ஆணிற்காக காத்திருக்கிறார்கள். அவன்தான் அவர்களிடம் வரவேண்டும். ஏற்றுக்கொள்வதா இல்லை நிராகரிப்பதா என்ற வாய்ப்பை அவர்கள் தங்களிடமே வைத்துக் கொள்கிறார்கள். அந்த வாய்ப்பை அடுத்தவருக்கு ஒருபோதும் அவர்கள் அளிப்பதில்லை. ஏனெனில், ஆணை விட அதிகம் பயம் கொண்டிருக்கிறார்கள். பல பெண்கள் அவர்கள் வாழ்க்கை முழுவதும் காத்திருக்கிறார்கள். யாரும் வந்து அவர்களின் கதவைத் தட்டுவதில்லை. ஏனெனில், பயப்படும் மனம் ஒருவிதத்தில்

தன்னை மூடிக்கொள்கிறது. அவள் ஆணை விரட்டுகிறாள். பயப்படும் மனிதன் யாராவது வெறுமனே பக்கத்தில் வந்தால்கூட ஒருவிதமான அதிர்வலைகளைப் பரப்புகிறான். அவர்கள் விலகி விடுகின்றனர். அவர்களின் அசைவுகளில்கூட நீ பயத்தை உணரமுடியும்.

ஒரு பெண்ணிடம் பேசும்போது, நீ அவளிடம் பாசமும், பிரியமும் கொண்டிருந்தால் நீ நெருங்கிப் போக விரும்புவாய். அவள் அருகில் நின்று பேச விரும்புவாய். ஆனால் அவளது உடலை கவனி. ஏனெனில், உடலுக்கு அதற்கே உரிய மொழி உள்ளது. அவள் பின்புறமாக சாய்வாள். அவளுக்கே தெரியாமல் பின்புறமாக நகர்வாள். நீ நெருங்கி போக போக அவள் விலகுவாள். பின்னால் சுவர் இருந்தால் அவள் அதில் சாய்ந்துவிடுவாள். அவள் முன்னால் வராமல் பின்னால் சாய்வதன் மூலம் 'என் அருகில் வராதே, விலகிப்போ' என்று கூறுகிறாள்.

மக்கள் உட்கார்ந்து இருக்கும்போது, நடக்கும்போது கவனி. வெறுமனே எல்லோரையும் விலகி போகச் செய்யும் மக்கள் இருக்கிறார்கள். யார் பக்கத்தில் வந்தாலும் பயப்படுவார்கள். பயம் ஒரு சக்தி. அன்பைப் போலவே ஆனால் எதிர்மறையான சக்தி. அன்பை உணரும் மனிதன் நேர்மறையான சக்தியில் திளைக்கிறான். நீ அருகில் வரும்போது அது காந்தம் போல உன்னை இழுக்கும். நீ அவனுடன் இருக்க விரும்புவாய்.

பயம் உன்னுடைய பிரச்சனையாக இருந்தால் உன்னுடைய இயல்பை கவனி. நீ கண்டிப்பாக அன்பிற்கு கதவுகளை மூடியிருக்க வேண்டும். அவ்வளவுதான். அந்த கதவை திறந்துவிடு. நிராகரிக்கப் படும் சாத்தியக்கூறு இருக்கிறதுதான், ஆனால் ஏன் பயப்பட வேண்டும்? அடுத்தவர் முடியாது என்று மட்டுமே சொல்லமுடியும். வெறும் 50% இல்லை என்று சொல்லும் வாய்ப்புக்கு பயந்து ஏன் 100% அன்பில்லாத வாழ்க்கை வாழ வேண்டும்?

சாத்தியக்கூறு இருக்கிறது. அதற்காக ஏன் கவலை? பலர் இருக்கிறார்கள். ஒருவர் இல்லையென்று சொன்னால்

காயப்படாதே. அதைக் காயமென்று எடுத்துக்கொள்ளாதே. அது நடக்கவில்லையென்று வெறுமனே எடுத்துக்கொள். உன்னுடன் நகர அடுத்தவர் விரும்பவில்லை. பொருத்தமில்லை என்று எண்ணிக்கொள். நீங்கள் இருவரும் வேறுபட்டவிதம். அவனோ அவளோ உண்மையிலேயே உன்னை வேண்டாம் என்று சொல்லவில்லை. இது தனிப்பட்ட விஷயமல்ல. பொருத்தமில்லை, அவ்வளவே. அதனால் முன்னால் நகரு. மேலும் அவர் இல்லை யென்று சொன்னது நல்லதே. ஏனெனில் இருவருக்கும் பொருத்த மில்லாமல் இருக்கும்போது அவர் ஆமாம் என்று சொல்லியிருந்தால் நீ உண்மையான பிரச்சனையில் சிக்கியிருப்பாய். அவர்களுக்கு நன்றி சொல், முன்னால் செல். எல்லோரும் எல்லோருடனும் பொருந்தமுடியாது. ஒவ்வொரு மனிதனும் தனித்துவமானவன். உண்மையில் உன்னுடன் பொருந்தக்கூடிய சரியான மனிதனைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். ஒரு சிறந்த உலகத்தில் எதிர்காலத்தில் மேலும் அதிக அளவு பயணம் செய்யக்கூடிய வாய்ப்புள்ளவர்கள் தங்களுக்குச் சரியான இணையைக் கண்டறிய இயலும்.

தவறுகள் செய்வதைப்பற்றி பயப்படாதே. தவறு செய்வதைப் பற்றி பயப்பட்டால் சுத்தமாகவே நகரமுடியாது. மேலும் முழு வாழ்க்கையையும் தவறவிட்டுவிடுவாய். எதையும் செய்யாமல் இருப்பதை விட தவறு செய்வது சிறந்தது. பயந்து கொண்டு எதையும் செய்யாமல் உன்னுடன் இருப்பதை விட நிராகரிக்கப்படுவதே மேல். ஏனெனில், நிராகரிக்கப்படுவது ஏற்றுக்கொள்ளப்படும் சாத்தியக்கூறையும் வெளிப்படுத்துகிறது. நிராகரிக்கப்படுவது ஏற்றுக்கொள்ளப்படுவதன் மறுபக்கம். ஒருவர் நிராகரித்தால் மற்றொருவர் ஏற்றுக்கொள்வார். சரியான மனிதனைக் கண்டுபிடிக்க பயணப்பட்டுக்கொண்டே இருக்கவேண்டும். சரியான மனிதனைக் கண்டுபிடிக்கும்போது பொறிதட்டுகிறது. அவர்கள் ஒருவருக் கொருவர் பொருந்திக் போகிறார்கள். அவர்கள் சண்டையிட மாட்டார்கள் என்பதல்ல, கோபமும் சண்டையிடும் கணங்களும் இருக்காது என்பதல்ல. காதல் உயிர்துடிப் போடிருந்தால் அங்கு

சண்டையும் இருக்கும். சிலசமயங்களில் அங்கு கோபமான கணங்களும் இருக்கும். அது வெறுமனே காதல் உயிர்துடிப்போடு இருப்பதைக் காட்டுகிறது. சில சமயங்களும் சோகம், ஏனெனில், ஆனந்தம் எங்கிருந்தாலும் அங்கே சோகம் கண்டிப்பாக இருக்கும்.

ஒரு திருமணத்தில் மட்டும் சோகமிருக்காது. ஏனெனில் அங்கு ஆனந்தமும் இல்லை. ஒருவர் வெறுமனே மற்றவரை பொறுத்துக் கொள்கிறார்கள். அது ஒரு ஏற்பாடு. சமாளிக்கப்பட்ட விஷயம். நீ வாழ்க்கைக்குள் உண்மையிலேயே சென்றால் அங்கு கோபம் இருக்கும். ஆனால் நீ ஒரு மனிதனைக் காதலிக்கும்போது கோபத்தையும் ஏற்றுக்கொள்கிறாய். நீ ஒரு மனிதனைக் காதலிக்கும்போது நீ அவனுடைய சோகத்தையும் ஏற்றுக் கொள்கிறாய். சில சமயங்களில் திரும்பவும் பக்கத்தில் வருவதற்காக நீ விலகிச்செல்கிறாய். உண்மையில் அதற்கு பின்னால் ஒரு ஆழமான தந்திரமுள்ளது. நேசிப்பவர் திரும்ப திரும்ப காதலில் விழுவதற்காக சண்டை போடுகிறார்கள். எனவே அவர்கள் திரும்ப திரும்ப சிறிய தேனிலவுகளைக் கொண்டாடலாம்.

அன்பைக்கண்டு பயப்படாதே. ஒரே விஷயத்திற்குத்தான் ஒருவர் பயப்பட வேண்டும். அது பயம். பயத்தைக் கண்டு பயப்படு. வேறு எதனைக் கண்டும் ஒருபோதும் பயப்படாதே. ஏனெனில், பயம் முடமாக்குகிறது. அது விஷத்தன்மையுடையது. அது தற்கொலைக்கு ஒப்பானது. நகரு, அதை விட்டு வெளியே குதி. நீ எதை விரும்புகிறாயோ அதைச் செய். ஆனால் பயத்தோடு தங்கிவிடாதே. ஏனெனில், அது ஒரு எதிர்மறையான சூழ்நிலை.

என்னைப் பொறுத்தவரை, - நான் உன்னைவிட தொலைவில் பார்ப்பதால் - அன்பு ஒரு பிரச்சனையல்ல. ஆனால் நீ அன்பை தவற விட்டுவிட்டால் நீ தியானத்தை தவறவிட்டுவிடுவாய். அதுதான் எனக்கு உண்மையான பிரச்சனை. உனக்கு அது ஒரு பிரச்சனையாக இல்லாமல் இருக்கும். ஏனெனில், பயம் பிரச்சனையாக இருக்கும் இடத்தில் அன்புகூட ஒரு பிரச்சனையாகாது. பின் எப்படி நீ தியானத்தைப் பற்றி சிந்திக்கமுடியும்? ஆனால் நான் வாழ்க்கையின்

தொடர்ச்சியையும், அது எப்படி நகர்கிறது என்பதையும் பார்க்கிறேன். அன்பு உன்னால் தவற விடப்பட்டுவிட்டால் நீ ஒருபோதும் தியானத்திலிருக்க முடியாது. ஏனெனில், தியானத்தில் இருப்பது அண்டத்தின் மீது அன்போடிருத்தல். நீ அன்பைத் தொடாமல் செல்லமுடியாது. பல மக்கள் முயற்சி செய்திருக் கிறார்கள். அவர்கள் மடாலயங்களில் இறந்துபோயிருக்கிறார்கள். உலகம் முழுவதும் பலரும் முயற்சி செய்திருக்கிறார்கள். பயத்தின் காரணமாக அவர்கள் அன்பை முழுவதுமாக தவிர்க்க முயற்சி செய்திருக்கிறார்கள். மேலும் அவர்கள் பயத்திலிருந்து நேரடியாக தியானத்திற்கு செல்ல குறுக்குவழியொன்றைக் கண்டுபிடிக்க முயற்சி செய்து கொண்டேயிருக்கிறார்கள்.

அதைத்தான் கிறிஸ்துவ, இந்து, புத்த மதத்தை சேர்ந்த துறவிகள் அனைவரும் பல நூற்றாண்டுகளாக முயற்சி செய்கிறார்கள். எல்லா துறவிகளும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அன்பை முற்றிலுமாக தவிர்க்க முயற்சி செய்து கொண்டிருக் கிறார்கள். அவர்களுடைய பிரார்த்தனை போலியாக இருக்கும். அவர்களுடைய பிரார்த்தனை வாழ்வற்றிருக்கும். அவர்களுடைய பிரார்த்தனை எங்கும் கேட்கப்படாது. அண்டம் அவர்களுடைய பிரார்த்தனைக்கு பதிலளிக்கப்போவதில்லை. அவர்கள் முழு அண்டத்தையும் ஏமாற்ற முயற்சி செய்கிறார்கள்.

இல்லை, ஒருவர் அன்பினுள் நுழைந்து சென்றாக வேண்டும். பயத்திலிருந்து அன்பிற்குள் செல். அன்பிலிருந்து நீ பிரார்த் தனைக்குள், தியானத்தன்மைக்குள் நுழைவாய். தியானத் தன்மை யிலிருந்து பயமற்ற தன்மை எழுகிறது. அன்பில்லாமலிருந்தால் பயம், அன்பிருந்தால் பயமற்ற தன்மை. மேலும் முடிவான பயமற்றதன்மை தியானத்தில் எழும், ஏனெனில், அங்கு மரணம் கூட பயமில்லை. பிறகு மரணமே இல்லை. நீ மிகவும் ஆழமாக பிரபஞ்சத்துடன் இணைவு கொண்டிருக்கிறாய், பயம் எப்படியிருக்க முடியும்?

எனவே தயவுசெய்து பயத்தால் பீடிக்கப்பட்டுவிடாதே. அதிலிருந்து வெளியே குதித்து அன்பை நோக்கி நகரு. மேலும் காத்திருக்காதே. ஏனெனில் யாருக்கும் உன்மீது ஆர்வமிருக்காது. நீ காத்துக் கொண்டிருந்தால் காத்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான்.

இது என்னுடைய புரிதல். நீ அன்பைத் தவற விடமுடியாது. நீ தற்கொலை செய்துகொள்வாய். நீ வெறுமனே காத்துக் கொண்டிருந்தால் அன்பு உன்னைக் கடந்து போய்விடலாம், நகர்ந்து கொண்டிரு. உனதன்பு வேட்கை கொண்டதாக, உயிரோட்டமாக, ஆழமானதாக இருக்க வேண்டும். அப்போது மட்டுமே யாராவது உன்னிடம் வரும்படி உன்னால் கவர்ந்திழுக்க முடியும். இறந்துவிட்டால் யார் உன்னைப் பற்றி கவலைப் படுவார்கள்? இறந்துவிட்டால் மக்கள் உன்னிடம் இருந்து தப்பிச் செல்வார்கள். இறந்திருந்தால் நீ ஒரு சலிப்பூட்டும் விஷயமாக மாறிவிடுவாய். உன்னைச் சுற்றி சலிப்பின் அழுக்கு படந்திருக்கும். உன்னை சந்திக்கும் அனைவரும் உன்னை சந்தித்தது வாழ்வின் துரதிர்ஷ்டம் என்று நினைப்பார்கள்.

அன்போடிரு. ஆழமாக, பயமில்லாமல் நகரு. நீ பயமில்லா மலிருந்தால் வாழ்க்கையிடம் உனக்கு கொடுக்க நிறைய விஷயங்கள் உள்ளன. வாழ்க்கை கொடுப்பதைவிட அன்பிடம் கொடுக்க நிறைய உள்ளது. ஏனெனில், இந்த வாழ்க்கையின் மையம் அன்புதான். மேலும் நீ இந்த மையத்திலிருந்து மறுகரைக்குச் செல்லமுடியும்.

நான் மூன்று படிகள் என்று இவைகளை அழைக்கிறேன். வாழ்வு, அன்பு, ஒளி. வாழ்க்கை ஏற்கனவே இருக்கிறது. அன்பை நீ அடைய வேண்டும். நீ அதைத் தவற விடமுடியும். ஏனெனில், அது தரப்பட வில்லை. ஒருவர் அதனை உருவாக்கிக் கொள்ள வேண்டும். வாழ்க்கை கொடுக்கப்பட்டுள்ள விஷயம். நீ ஏற்கனவே உயிரோடிருக்கிறாய். அங்கு இயற்கையான பரிணாம வளர்ச்சி நின்றுவிடுகிறது. அன்பை நீ கண்டறியவேண்டும். அங்கு

அபாயங்களும் தடைகளும் இருக்கத்தான் இருக்கும். ஆனால் அவைகள்தாம் அதை அழகாக்குகின்றன. நீ அன்பைக் கண்டறிய வேண்டும். நீ அன்பைக் கண்டறியும்போது மட்டுமே ஒளியைக் கண்டறிய முடியும். பின் பிரார்த்தனைத்தன்மையும் தியானத் தன்மையும் எழுகின்றன. பல காதலர்களுக்கு இது நிகழ்ந்துள்ளது - ஆனால் அப்படிப்பட்ட காதலர்கள் அபூர்வம் - அவர்கள் அன்பில் ஆழமாக இணைந்திருக்கும்போது திடீரென தியானத்தன்மையில் விழுந்துவிடுகின்றனர். இருவரும் சேர்ந்து வெறுமனே மௌனத்தில் அமர்ந்திருக்கும்போது, ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டிருக்கும்போது, ஒரு கடற்கரையில் ஒன்றாக அருகருகில் படுத்திருக்கும்போது திடீரென அவர்கள் ஒரு வேட்கையை உணர்கின்றனர், கடந்து செல்வதற்கான ஒரு வேட்கை.

எனவே பயத்தை அதிகம் கவனிக்காதே. ஏனெனில், அது அபாயகரமானது. நீ பயத்திற்கு அதிக கவனிப்பளித்தால் நீ அதற்கு உணவளிக்கிறாய். மேலும் அது வளரும். பயத்திற்கு உனது பின்புறத்தைக் காட்டு. அன்பை நோக்கி நகர்.

# 5

# பயமற்ற தன்மையை அடைவதற்கு ஒரு வழி - புரிதல்களும் தியானங்களும்

பயம் மனதின் செயல்பாட்டில் மட்டுமே இருக்கிறது. செயல்பாட்டிலிருந்து உன்னைத் தனியாக பிரிக்க நீ கற்றுக் கொள்ள வேண்டும். நாம் நம்மை மிகவும் செயல்பாட்டோடு அடையாளப் படுத்திக் கொண்டுவிட்டோம். நாம் தூரத்தை முற்றிலுமாக மறந்து விட்டோம். அது வெறும் மனம். மனமென்பது மற்றவர்களால் உனக்கு கொடுக்கப்பட்டுள்ள பழக்கவழக்கங்களைத் தவிர வேறொன்றுமில்லை.

சிறிதே கவனிக்கத் தொடங்கு. எடுத்துக்காட்டாக நீ ஒரு ரோஜாமலரைப் பார்க்கிறாய். உடனடியாக அது அழகாக இருக்கிறது என்று கூறுகிறாய். அதனைக் கவனி, சோதித்துப்பார். யாருடைய வார்த்தைகளை நீ திரும்பச் சொல்கிறாய்? இப்போது இங்கே இந்த மலர் அழகாக இருக்கிறது என்ற வாக்கியம் உனது அனுபவமா? இது உண்மையிலேயே இப்போது நீ உணர்ந்த உனது அனுபவமா அல்லது சின்ன வயதில் கேட்ட யாரோ ஒருவருடைய வார்த்தையா, அல்லது ஒரு புத்தகத்தில் படித்ததா அல்லது உனது ஆசிரியர், பெற்றோர், நண்பர் என யாரோ கூறிய வார்த்தையா? வெறுமனே நினைத்துப்பார். நீ கண்டறிவதைக் கண்டு நீயே ஆச்சரியப்படுவாய். நீ ஆழமாகப் பார்த்தால் உன்னால் கண்டு

பிடிக்கமுடியும். - 'ஆம், அவர் இந்த மலர் அழகாக இருக்கிறது என்று கூறியதை நான் முதன்முறையாக கேட்டேன்.' - அது உனது கட்டுதிட்டத்தில் ஒரு பகுதியாக மாறிவிட்டது. மேலும் அதிலிருந்து நீ அதைத் திரும்ப திரும்ப சொல்லிக்கொண்டிருக்கிறாய். மேலும் நீ அதை எந்தளவுக்கு சொல்கிறாயோ அந்தளவுக்கு அது பதிந்து போய்விடுகிறது. இப்போது அது கிட்டத்தட்ட ஒலிநாடாவின் பதிவைப் போன்றது. நீ ஒரு மலரைப் பார்க்கிறாய். தானியங்கி அங்கே இருக்கிறது. ஒலிநாடா ஓடத்தொடங்குகிறது. அது, 'இது அழகாயிருக்கிறது' என்று கூறுகிறது. 'இது அழகாயிருக்கிறது' என்று கூறுவது நீயல்ல. நீ மலரைப் பார்ப்பதற்குக் கூட அனுமதிக்கப்படவில்லை. ஏனெனில் கட்டுதிட்டம் அங்குள்ளது.

பயம் உனது இருப்பிலிருந்து வரவில்லை. அதைக்கவனி. அதை அலசு, அதனுள் செல். மேலும் அதனை உனக்கு யார் சொல்லிக் கொடுத்தார்கள் என்று கண்டறிந்தால் நீ ஆச்சரியப்படுவாய். உன்னுடைய குழந்தைப்பருவத்தில் யாரோ உன்னிடம் அன்பைக் குறித்து பயப்படுத்தியிருப்பார்கள், புதியவர்களைக் குறித்து பயப்படுத்தியிருப்பார்கள், தெரியாததைக் குறித்து பயப்படுத்தியிருப்பார்கள். எனவேதான் அந்தக் குரல்கள் ஒலிக்கின்றன. அவை யாருடைய குரல்கள் என்று உன்னால் கண்டுபிடிக்க முடியும். - உன்னுடைய தாயோ, தந்தையோ - நான் அவர்கள் தவறென்று சொல்லவில்லை. அவை உருவாக்கப்பட்ட நேரத்தில் அவை சம்பந்தம் உள்ளவையாக இருந்தன, ஆனால் இப்போது அவை சம்பந்தமற்றவை. நீ வளர்ந்துவிட்டாய். இப்போது அந்த திட்டங்கள் பொருந்தவில்லை. அவை கடந்தகாலத்தின் பாதிப்புகள். ஆனால் அவை தொடர்கின்றன. ஏனெனில், நீ உணர்வுடையவனாக வளர்ந்து அவைகளை அழித்தால் தவிர அவைகளை அழிக்கும் வழி உன்னுடைய மனதிற்குத் தெரியாது.

மனதால் அதனுடைய கட்டுதிட்டங்களை தானாகவே அழித்துக் கொள்ள முடியாது. திட்டங்களை உள் வாங்க மட்டுமே மனதிற்கு தெரியும். கட்டுதிட்டங்களை அழித்துக்கொள்ள அதற்கு வல்லமை கிடையாது. கண்டிப்பாக சந்தித்தாக வேண்டிய மிக

அடிப்படையான பிரச்சனைகளில் ஒன்று இது. மேலும் இதுதான் எனது வேலையாக உள்ளது. நீ கட்டுதிட்டத்தை உணர உதவி செய்வது. எனவே, நீ அதிலிருந்து உன்னை விலக்கிக்கொண்டு நீ அந்த திட்டமல்ல என்பதை பார்க்கலாம். போதுமான அளவு தொலைவுக்கு சென்றபிறகு, இப்போது தேவைப்படாத, இனிமேலும் அவசியப்படாத பல மிக பழைய கட்டுதிட்டங்களை, ஆனால் நீ உன்னை விலக்கிக்கொள்ளாவிட்டால் உனது இருப்பு வரை கூடவே இருந்திருக்கக்கூடிய திட்டங்களை நீ அழித்து விடலாம்.

என்னுடைய சொந்த புரிதல் என்னவென்றால் கிட்டத்தட்ட 5 வயதில் ஒரு குழந்தை அவனுடைய சொந்த திட்டமிடப்பட்ட மனதோடு தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறது. மேலும் அதுவரை மட்டுமே குழந்தை உயிரோட்டத்தோடு இருக்கிறது. ஏனெனில், அவன் இன்னமும் கட்டுதிட்டத்தினுள் வரவில்லை. அதன்பின் அவன் வெறுமனே ஒரு இயந்திரமாக மாறிவிடுகிறான்.

கிட்டத்தட்ட 5 வயதில் எல்லா கற்றுக்கொள்ளுதல்களும் நின்றுவிடுகின்றன. ஒருவர் அந்த திட்டத்தை திரும்ப திரும்ப சிறப்பாக மெருகேற்றிக் கொண்டே போகிறார். இன்னமும் திறமையாக, இன்னமும் பயனுள்ளதாக, ஆனால் அடிப்படையில் இறக்கும்வரை அதே திட்டம்தான். எதேச்சையாக, நீ ஒரு சூழல் வந்து, ஒரு சக்தி மண்டலத்தை உணர்ந்து, கிட்டத்தட்ட மனம் உனக்கு எதிராகவே வேலை செய்யும் முட்டாள் தனத்தைப் பற்றி உனக்கு உணர வைக்கக்கூடிய வாய்ப்பு கிடைத்தால் தவிர வேறு சாத்தியமே இல்லை.

நீ புதிதாக ஏதோ ஒன்றைச் சந்திக்கும்பொழுது உனது மனம், ‘பொறு, இது மிகவும் வித்தியாசமாக உள்ளது. நீ இதற்குமுன் இதைச் செய்ததே இல்லை என்று கூறும். உனது மனம், முன்னால் செய்திருக்காத எதையும் செய்யாதே அது ஆபத்தானது. விளைவு என்னவாக இருக்குமென்று யாருக்குத் தெரியும்?’ என்று கூறுகிறது. மனம் மிகவும் பழமையானது, ஏனெனில், அது கட்டுதிட்டங்களில் வாழ்கிறது. நீ ஏற்கனவே செய்ததை மட்டுமே நீ செய்ய

வேண்டுமென்று அது விரும்புகிறது. ஏனெனில், நீ அதைச் செய்வதில் திறமையானவன், தந்திரமானவன். அது பாதுகாப்பானது. அதை எப்படி செய்வதென்று உனக்குத் தெரியும். இப்போது முற்றிலும் வித்தியாசமான சூழலுக்குள் நகருவது - 'என்ன நிகழப்போகிற தென்று யாருக்குத் தெரியும்? அது சரியா தவறா என்று யாருக்குத் தெரியும்? கவனமாக இரு' - மனம், 'பழைய கட்டுதிட்டங்களையே தொடரு. இதுவரை நீ வாழ்ந்த வாழ்க்கையையே வாழ். பழகிய பாதையில் பயணம் செய், அங்கே தவறு நிகழ்வதற்கான வாய்ப்பு குறைவு' என்கிறது.

மனம் தவறுகளை தவிர்க்க விரும்புகிறது. வாழ்க்கை தவறுகளை தவிர்க்க விரும்புவதில்லை. அது அதற்குள் செல்ல விரும்புகிறது, எனவே தவறுகள் மூலம் நீ நிறைய கற்றுக் கொள்ளலாம். ஏனெனில், நாம் தப்பு தவறுகள் வழியாக மட்டுமே கற்றுக் கொள்கிறோம். நாம் தவறுகள் செய்வதை நிறுத்திவிட்டால் நாம் கற்றுக்கொள்வதையும் நிறுத்திவிடுவோம். மேலும் எனது அனுபவம் என்னவென்றால் கற்றுக்கொள்வதை நிறுத்திவிடும் மக்கள் மூடத்தன்மை கொண்டவர்களாகிவிடுகின்றனர். மூடத்தன்மை ஒருவித கற்றுக்கொள்ளாத தன்மையே. கற்றுக்கொள்ள யாருக்கு பயமாக இருக்கிறதோ, அவர் அதே வட்டத்தில் சுழன்றுகொண்டேயிருக் கிறார். ஒருவர் சோர்வாக, சலிப்பாக உணர்கிறார். ஆனாலும் கூட ஒருவர் அதே வட்டத்தில் சுற்றுகிறார். ஏனெனில், அவர் அதற்கு பழக்கப்பட்டுள்ளார், அது பழக்கப்பட்டது, அது தெரிந்தது.

பயம் எழும்போது, அது வெறுமனே நீ இதுவரை சுமந்துவந்த திட்டத்திற்கு எதிராக ஏதோ ஒன்று நடக்கிறது என்பதையே சுட்டிக்காட்டுகிறது. நீ திரும்பவும் கற்றுக்கொள்ள வேண்டிய சூழ்நிலைக்குள் வந்துள்ளாய். அதாவது நீ உனது மூடத்தன்மையை கைவிடவேண்டும். அதாவது நீ உனது குழந்தைப் பருவத்திலிருந்து, 5 வயதிலிருந்து என்ன செய்து கொண்டிருந்தாயோ, அது மெதுவாக அழிக்கப்பட வேண்டும், அது கைவிடப்பட வேண்டும். நீ திரும்பவும் ஒரு குழந்தையாவாய். மேலும் எங்கே கற்றுக்கொள்ளல் நின்று போனதோ அங்கிருந்து திரும்பவும் கற்பதைத் தொடங்குவாய்.

நீ தியானத்திற்குள் ஆழமாகச் சென்றால், பயம் அல்லது அன்பு ஒரு சுதவாக மாறும். இறப்பு அடக்கி வைக்கப்படிருந்தால் பயம் கதவாக மாறும், காமம் அடக்கி வைக்கப்பட்டிருந்தால் அன்பு கதவாக மாறும். எடுத்துக்காட்டாக கிழக்கத்திய நாகரீகங்களில் காமம் அடக்கி வைக்கப்பட்டுள்ளது. மேலும் அது இன்னும் அப்படித்தான் உள்ளது. தியானத்தில் மனம் சந்திக்கும் முதல் விஷயம் அதீதமான காமசக்தி மேலெழுவதேயாகும். ஏனெனில், தியானத்தில் நுழைந்தால் அடக்கிவைக்கப்பட்டிருப்பது எதுவோ அது மேலெழுகிறது.

உனக்கு காமத்தைப்பற்றிய அடக்குதல் இல்லையென்றால் அங்கே பயம் எழும். மேற்கத்திய நாகரீகங்களில் அதிகமாக அடக்கிவைக்கப்பட்ட, விலக்கிவைக்கப்பட்ட விஷயம் மரணம். எனவே நீ அதை அனுமதிக்கும்போது மிகவும் தளர்வாக ஓய்வாக இருக்கவேண்டும். ஒருமுறை பயம் அனுமதிக்கப்பட்டு விட்டால் விரைவில் அது மரணமாக மாறிவிடும். நீ இறப்பின் ஒரு கணத்தை கடந்தாகவேண்டும். காமமும், இறப்பும் விலக்கப்பட வேண்டிய தில்லையென்றால் மனிதன் சுதந்திரமானவன்.

மனிதகுலத்திற்கு பிணைப்பை உருவாக்க இவை இரண்டுமே தந்திரங்கள். இவை இரண்டும் இல்லாமல் போய்விட்டால், நீயே சுதந்திரம். நீ சுதந்திரமடைந்துவிட்டாய் என்பதல்ல, நீயே சுதந்திரம்.

## தப்பிச் செல்ல இயலாது

உனக்குள் போலியான ஏதோ ஒன்றைச் சுமந்து கொண்டிருந்தால் நீ மக்களிடமிருந்து தப்பிப்பாய். நீ யாரையும் உன்னோடு நட்பாக இருக்க, நெருக்கமாக இருக்க அனுமதிக்கமாட்டாய். ஏனெனில், நெருக்கத்தில் உள்ள அபாயம் என்னவென்றால் மற்றவர் புதியவர்கள் பார்க்கமுடியாத ஏதோ ஒன்றை பார்த்துவிடக்கூடும். எல்லோரையும் நீ தொலைவிலேயே வைத்திருப்பாய். நீ மக்களை பார்த்து பாய்ந்து விலகுவாய், பயந்து விலகி ஓடுவாய். நீ மேலோட்டமான உறவு மட்டுமே கொண்டிருப்பாய், உண்மையாக

தொடர்பு கொள்ளமாட்டாய். ஏனெனில், உண்மையாக தொடர்பு கொள்வது என்பது உன்னை வெளிக்காட்டுவதாகும்.

அதனால்தான் உன்னால் துறவிகள் என்று அழைக்கப்படுபவர்கள் மடாலயங்களுக்கு தப்பிச் சென்றுவிடுகிறார்கள். அது பயத்தின் காரணமாகவே. அவர்கள் இந்த உலகத்தில் இருந்தால் பிடிபட்டுவிடுவார்கள், அவர்கள் ஏமாற்றுகிறார்கள், அவர்கள் மறைக்கிறார்கள், அவர்கள் போலியானவர்கள் என்பது கண்டறியப் பட்டுவிடும். மடாலயங்களில் அவர்கள் தங்களது போலித்தனத்தை காப்பாற்றிக்கொள்ள முடியும். மற்றவர்களால் அதைக் கண்டறியமுடியாது. அங்கே மற்ற போலித்தனமானவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் கூடி கூட்டாக சதியை எளிதாக காப்பாற்றிவிடுவர், அது தனியாக ஒருவர் தனது போலித்தனத்தை காப்பாற்றுவதை விட எளிது.

தப்பிச் செல்பவர்களுக்காகவே மடாலயங்கள் உருவாகின. ஆனால் நீ இந்த உலகில்கூட மடாலயத்தின் வழியில், எப்போதும் எல்லோரையும் தூரத்தில் வைத்துக்கொண்டு, உனது உள்ளார்ந்து இருப்பை உணர யாரையும் அனுமதிக்காமல், ஒருபோதும் திறந்தமனதுடன் இல்லாமல், நீ யார் என்று எட்டி பார்க்கக்கூட யாரையும் ஒருபோதும் அனுமதிக்காமல், மக்களின் கண்களைச் சந்திக்காமல், பக்கவாட்டில் மட்டும் பார்த்துக்கொண்டு, எப்போதும் ஒரு அவசரத்தில், யாருக்கும் வணக்கம் சொல்ல, யாருடைய கையையும் பிடிக்க நேரமில்லாமல், யாருடனும் அமர்ந்து இரண்டு வார்த்தைகள் ஓய்வாக பேசாமல், எல்லோரும் உனக்கு நிறைய வேலை இருக்கிறது என்று எண்ணும்வண்ணம் ஓடிக்கொண்டே, நீ ஓய்வில்லாதவன், எப்போதும் எங்காவது சென்று கொண்டிருப்பவன் என்று தெரியும்படி வாழ்ந்துவிட முடியும்.

உனக்கு அருகில் இருப்பவர்களைக் கூட - கணவர், மனைவி, குழந்தைகள், - உனக்கு நெருக்கமாக இருக்க அனுமதிக்கமாட்டாய். அவர்களுடன்கூட நீ மேலோட்டமான உறவே கொண்டிருப்பாய், நேசம் கொண்டிருக்க மாட்டாய்.

## சுய – உணர்வா அல்லது சுய – விழிப்பா

நாம் ஒன்றுபோலவே ஒலிக்கும், ஆனால் முற்றிலும் வேறுபட்ட பொருள் தரக்கூடிய இரண்டு சொற்களை கொண்டுள்ளோம். ஒன்று சுயஉணர்வு, மற்றொன்று சுயவிழிப்புணர்வு. மொழியைப் பொறுத்தவரை அர்த்தம் ஒன்றுதான். ஆனால் பிரபஞ்சத்தைப் பொறுத்தவரை பெரிய வித்தியாசம் உள்ளது. சுயஉணர்வு ஒரு நோய், அது சுயம் என்பதை அழுத்திச்சொல்வது. நீ பதட்டத்தில், பயத்தில் இருக்கும்பொழுது மட்டுமே சுயஉணர்வடைவாய். திடீரென நேர்முகத் தேர்வுக்குச் செல்ல வேண்டுமென்றால் சுயஉணர்வடைவாய். திடீரென உன்னை மேடையில் பேசச்சொன்னால் சுயஉணர்வடைவாய். எல்லோரும் உன்னையே கவனித்துக்கொண்டிருக்கும்பொழுது, அவர்களை எதிர்கொள்வது உனக்குள் மிகப்பெரிய நடுக்கத்தை உருவாக்கும்.

நீ பிறந்த கணத்திலிருந்து இந்தக்கணம் வரை செயல்பட்ட மனம் திடீரென நின்றுவிடுகிறது என்று சொல்லப்படுகிறது. என்ன பேசுவதென்றே உனக்குத் தெரியவில்லை. திடீரென எல்லா எண்ணங்களும் மறைந்துவிடுகின்றன. எண்ணங்களற்ற நிலையை நீ அறியும் ஒரே தருணம் இவைதான். ஆனால் அவைகளை நீ தவற விட்டுவிடுகிறாய். ஏனெனில், நீ மிகவும் பயத்திலிருக்கிறாய். வியர்த்து நடுங்கிக் கொண்டிருக்கிறாய், அது சுயஉணர்வு. சுயஉணர்வில் உணர்வு முக்கியமல்ல, ஆணவம் முக்கியம். அதனால்தான் நீ நடுங்கிக் கொண்டிருக்கிறாய். நீ ஒரு குறிப்பிட்ட பிம்பத்தை உருவாக்க விரும்புகிறாய். உன்னால் அதனை உருவாக்கமுடியுமா என்று இப்போது பயம் கொள்கிறாய். இவ்வளவு மக்களை பார்க்கும்போது ஏதாவது தவறாகி விட்டால், உன்னிடம் அதிக புத்திசாலித்தனம் இல்லையென்று தெரிந்து போய்விடும், நீ எப்படிப்பட்டவன் என்று இதுவரை சொல்லிக் கொண்டிருப்பது இல்லையென்று ஆகிவிடும் என்று பயப்படுகிறாய். எக்ஸ்ரே போல துளைக்கும் கண்களுக்கு எதிரே நிர்வாணமாக நிற்பது போல உணர்கிறாய். உன்னுடைய ஆணவத்தை எப்படி

பாதுகாத்துக் கொள்வது என்று நீ மிகவும் கவலைப்படுகிறாய். அது ஒருவிதமான நோய்.

சுயவிழிப்புணர்வு முற்றிலும் வேறுபட்டது. அதற்கு ஆணவத்தோடு எந்தத் தொடர்பும் இல்லை. நீ இரண்டு சுயங்களை கொண்டிருக்கிறாய். ஒன்று போலியானது, ஆணவம். அது ஒரு நம்பிக்கை மட்டுமே. நீ அதற்குள் ஆழமாக பார்த்தால் நீ அதில் எதையும் கண்டுபிடிக்க மாட்டாய். இன்னொன்று உனது உண்மையான சுயம். உனது உண்மையான முகம். உனது அடிப்படை இயல்பு. அதைக் குறித்த உணர்வோடிருப்பது என்பது வாழ்வின் மர்மத்தைக் குறித்த உணர்வோடிருப்பதாகும். அதற்குள் செல்வதற்கான ஒரே கதவு உன்வழியாகச் செல்கிறது. அந்த மர்மத்தை நீ வேறெங்கிருந்தும் அடையமுடியாது. ஏனெனில் அந்த மர்மத்திற்கு மிகவும் நெருங்கியதாக இருக்கும் விஷயம் உன்னுடைய சொந்த இருப்பு. உன்னுடைய சொந்த இதயம். நீ அங்கிருந்துதான் உள்ளே நுழையவேண்டும்.

உன்னுடைய சொந்த இருப்பின் வழியாக வாழ்வின் மர்மத்தை தெரிந்து கொண்டுவிட்டால், பின் எல்லா இடங்களிலிருந்தும் அதை நீ அறிவாய். ஒருமுறை அதை நீ உனக்குள் தெரிந்துகொண்டு விட்டால், வெளியேயும் அதனை நீ அறிவாய். ஆனால், முதல் வேலை உன் உள் உலகத்தில் செய்யப்பட வேண்டும். நீ ஒரு பரிசோதனை சாலையாக வேண்டும். மிகப்பெரும் பரிசோதனைக் கூடம். நீதான் பரிசோதனைக் கூடம், பரிசோதனை செய்யப்படும் பொருள், பரிசோதிப்பவரும் நீதான். அனைத்தும் நீதான். ஏனெனில் அங்கே யாருமில்லை, ஏதுமில்லை. நீதான் அனைத்தும். பரிசோதிப்பவரும், பரிசோதனை செய்யப்படுவதும், பரிசோதனையும்.

உள்உலகத்தில் சுயத்தில் நகரத் தொடங்கினால், உள்ளார்ந்த மர்மத்தைக் குறித்து தெரிந்து கொள்ளத் தொடங்குவாய். அந்த மர்மத்தை தெரிந்து கொள்வதே தெரிந்து கொள்வதற்கு தகுதியானதை தெரிந்துகொள்வது. இல்லாவிடில் நீ வெறும் அறிவைச் சேகரித்துக் கொண்டே செல்கிறாய், அது மதிப்பில்லாதது. அது வெறும் குப்பை.

## மௌனமாக இருக்க பயப்படுதல்

மக்கள் தொடர்ந்து பேசிக்கொண்டே இருக்கிறார்கள். யாக்கட்டியா, யாக்கட்டியா, யாக்கட்டியா. அமைதியாக இருக்க பயப்படுகிறார்கள், உண்மையைப் பார்க்க பயப்படுகிறார்கள், தங்களது வெறுமையைப் பார்க்க பயபடுகிறார்கள், தங்களை வெளிக்காட்ட பயப்படுகிறார்கள், மற்றவர்களுக்குள் ஆழமாக பார்க்க பயப்படுகிறார்கள், எனவேதான் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். தொடர்ந்து பேச்சு அவர்களை மேல்மட்டத் திலேயே, ஆக்ரமித்து, செயல்பாட்டிலேயே வைத்துள்ளது. உன்னுடைய ஆணுடைய அல்லது பெண்ணுடைய கையை பிடித்துக் கொண்டு ஏன் மௌனமாக உட்காரக்கூடாது? ஏன் கண்களை மூடி உணரக்கூடாது? மற்றவரின் இருப்பை உணர். அடுத்தவரின் இருப்பினுள் செல். அடுத்தவரின் இருப்பு உன்னுள் நுழையட்டும். ஒன்றாக அதிருங்கள், ஒன்றாக ஊசலாடுங்கள். திடீரென ஒரு சக்தி உன்னை ஆட்கொண்டால் ஒன்றாக நடனமாடு. நீ முன்னெப்போதும் அறிந்திராத ஆனந்தத்தின் பரவச உச்சிக்கு செல்வாய். இந்த பரவச உச்சிக்கும், காமத்திற்கும் சம்பந்தமேயில்லை. உண்மையில் அவைகளுக்கும், மௌனத்திற்கும் தான் சம்பந்தம் உள்ளது.

மேலும் நீ உனது காமவாழ்க்கையிலும் தியானத்தன்மையோடு இருக்கமுடிந்தால், காமத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போதும் மௌனமாக ஒருவிதமான ஆடலோடு இருக்கமுடிந்தால் நீ ஆச்சரியப்படுவாய். உன்னை மறுகரைக்கு அழைத்துச் செல்வதற்கு உன்னிடமே ஒரு தானியங்கிசெயலுள்ளது.

மக்கள் அசிங்கமான முறையில் காமத்தில் ஈடுபடுகிறார்கள். குழந்தைகள் தங்கள் பெற்றோர் காமத்தில் ஈடுபடுவதைப் பார்த்தால் அவர்கள் கட்டிபிடித்து சண்டை போடுவதாகத்தான் நினைப்பார்கள், அப்பா அம்மாவை கொல்லப் போவதாக நினைப்பார்கள். - முனங்கிக்கொண்டு, அசிங்கமான முறையில் மூச்சு விட்டுக்கொண்டு, வன்முறையோடு - அவர்களின்

அசைவுகளில் நளினமில்லை, அது ஒரு ஆடலாக இல்லை. கண்டிப்பாக ஒது ஒரு ஆடலல்ல.

மேலும் அது ஒரு ஆடலாக மாறாதவரை அது வெறும் உடல்ரீதியானதாகவே இருக்கும். அதில் எந்த ஆன்மீகமும் இருக்காது. அது சாத்தியமற்றது. உனது முழு வாழ்க்கையிலும் மனது நின்று போகும் கணங்கள் பரவியிருந்தால் தவிர உன்னுடைய காதல் வாழ்க்கை மௌனத்திற்குள் நுழையமுடியாது.

இரவு, நட்சத்திரங்களால் நிறைந்துள்ளது. பூமியில் படுத்துக் கொள், பூமிக்குள் மறைந்துவிடு. நாம் பூமியிலிருந்து வந்துள்ளோம், ஒருநாள் எப்போதைக்குமாக ஓய்வெடுப்பதற்காக பூமிக்குள் சென்றுவிடுவோம். இரவில் சிலசமயங்களில் புல்வெளியில் படுத்துக்கொண்டு பூமிக்குள் மறைந்துவிடு. நட்சத்திரங்களைப்பார், வெறுமனே பார், ஒரு வெற்றுப்பார்வை. நட்சத்திரங்களின் பெயர்களைப்பற்றி, சிந்திக்கத் தொடங்காதே. உனக்கு நட்சத்திரங்களைப் பற்றி தெரிந்த அனைத்தையும் மறந்துவிடு. உன்னுடைய அறிவனைத்தையும் ஒதுக்கி வைத்துவிடு. வெறுமனே நட்சத்திரங்களைப்பார். திடீரென அங்கொரு தொடர்பிருப்பது தெரியும். விண்மீன்கள் அவைகளின் வெளிச்சத்தை உனக்குள் ஊற்றத் தொடங்கும். மேலும் தன்னுணர்வு விரிவடைவதை உணர்வாய். எந்த போதை மருந்தாலும் இதைச் செய்யமுடியாது.

போதைமருந்துகள் மிகவும் செயற்கையானவை. மனம் போன போக்கில் செலுத்துபவை. இயற்கையாகவே தெரிந்துகொள்ளக் கூடிய, மிகவும் பலன் தரக்கூடிய, எளிதாக கிடைக்கும் ஏதோவொன்றுக்கு கெடுதல் செய்யக்கூடிய முறைகள். வெறுமனே விண்மீன்களைப் பார்ப்பதன் மூலம் நீ உச்சமாக உணரத் தொடங்குவாய். நீ உயரப் பறக்கத் தொடங்குவாய்.

பிரபஞ்சம் மற்றும் வாழ்க்கை அனுமதிக்கும் எல்லா வாய்ப்புகளையும் உன்னால் முடிந்தவரை பயன்படுத்து. நீ மனதை விட்டுவிடக்கூடிய ஒரு வாய்ப்பைக்கூட தவற விட்டுவிடாதே. மெதுமெதுவாக நீ அதன் சூட்சமத்தை அறிவாய். அது ஒரு சூட்சமம்.

கண்டிப்பாக அது ஒரு அறிவல்ல, ஏனெனில் அதற்கு வரையறுக்கப்பட்ட யுக்திகள் இல்லை.

யாராவதொருவர் நட்சத்திரங்களால் சிலிர்ப்படையலாம், இன்னொருவர் சிலிர்ப்படையாமல் போகலாம். மற்றொருவர் மலர்களால் சிலிர்ப்படையலாம், வேறொருவர் சுத்தமாக பாதிக்கப் படாமல் இருக்கலாம். மக்கள் மிகவும் வித்தியாசமானவர்கள். எனவே அதை அறிவியல் வழியில் முடிவு செய்ய வழியே இல்லை. அது ஒரு அறிவியல் அல்ல, அது ஒரு கலைகூட அல்ல. ஏனென்னில், கலையைச் சொல்லித்தர முடியும். எனவே நான் சூட்சமம் என்ற வார்த்தைக்கு முக்கியத்துவம் அளிக்கிறேன். அதுவொரு சூட்சமம். நீ உன்னோடு ஒரு சில பரிசோதனைகள் செய்தே நீ அதனைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

## எது உன்னை மிரளச் செய்கிறதோ அதனுள் செல்

எது உன்னை மிரளச் செய்கிறதோ அதனுள் செல், எல்லா பாதுகாப்பு நடவடிக்கைகளையும், காவல்களையும் வெறுமனே ஒதுக்கி வைத்துவிடு. சும்மா விளையாடு. வாழ்க்கையின் உரிமை சூதாடிகளுக்கு உரியது. மேலும் முழுமனமும் கணக்கு போட்டுக் கொண்டு, லாபநஷ்டங்களைப் பற்றி நினைத்துக்கொண்டு, எந்த அபாயத்தினுள் செல்லாமல் முழு வியாபாரியாகி விட்டது. அபாயம் தேவை. அபாயத்தை சந்திப்பவர்களுக்கே, ஆபத்தாக வாழ்பவர் களுக்கே, கிட்டத்தட்ட மரணத்தின் விளிம்பில் வாழ்பவர்களுக்கே வாழ்க்கை வருகிறது.

கடந்தகாலத்தில் ஒரு இராணுவவீரனாக, ஒரு போராளியாக இருப்பதன் ஈர்ப்பு அதுதான். ஈர்ப்பு போரல்ல, ஆபத்து. வெறுமனே இறப்புக்கு பக்கத்தில் நகர்வது உனக்கு வைராக்கியத்தைத் தருகிறது. மேலும் உன்னிடம் எந்த பயமும் இல்லாத நேரம் வருகிறது.

உனக்குள் எந்த பயமும் இல்லாத ஒரு புள்ளியைக் கற்பனை செய்துபார். அதுதான்சுதந்திரம். இந்துக்கள் அதை மோட்சம் என்றழைப்பர். முற்றான விடுதலை. பயம்தான் பிணைப்பு.

பயத்தைத் தவிர வேறு பிணைப்பு இல்லை. பயம்தான் சிறைச்சாலை. உன்னை யாரும் சிறைப்படுத்தவில்லை. அது உனது சொந்த பயம். நீ சுவர்களுக்குள் பதுங்கிக் கொண்டிருக்கிறாய். நீ முடமாகிவிட்டாய். உன்னால் திறந்தவெளிக்குள் வரமுடியாது. நீ மிக அதிக காலம் இருட்டில் வாழ்ந்துவிட்டதால் உனது கண்கள் குருடாகிவிட்டன. எனவே நீ எப்போது வெளிச்சத்திற்கு வந்தாலும் அது மிகவும் கூசுகிறது.

நீ பயத்திற்கு பக்கத்தில் வரும்போதெல்லாம் நீ கதவுக்கு பக்கத்தில் வருகிறாய். பயம் ஒரு குறியீடு. அது இப்போது கவனமாக இரு, இதற்குள் நுழையாதே. இறப்பு இங்கிருக்கிறது என்று கூறுகிறது. ஆனால் ஞானத்திற்கு, அழகான மற்றும் உண்மையான எல்லாவற்றிற்கும் இறப்புதான் கதவு. இறக்கக் கற்றுக்கொள். மேலும் மேலும் அளவிடமுடியாத வாழ்க்கையை அடைவதற்கு அதுவொன்றுதான் வழி.

வாழ்க்கை அபாயத்தில், ஆபத்தில் மட்டுமே எழுகிறது. உன்னைச் சுற்றிலும் ஆபத்திருக்கும் பொழுது உனக்குள் ஏதோவொன்று உருப்பெறுகிறது. ஏனெனில் அபாயம் உன்னை மாற்றுகிறது. அபாயம் நீ ஒன்றாக மாறக்கூடிய சூழலை உண்டாக்குகிறது. நீ சிந்தித்துக் கொண்டேயிருக்க முடியாது. நீ எண்ணங்களற்று போய்விடுகிறாய்.

நீ கவனித்திருக்கிறாயா? சாலையில் ஒரு பாம்பை பார்த்தால் சிந்தனை திடீரென நின்றுவிடுகிறாய். உடனடியாக அங்கே எந்த எண்ணமும் இல்லை. மனம் காலியாக இருக்கிறது. ஏனெனில், சூழ்நிலை மிகவும் ஆபத்தானதாக இருப்பதால் நீ சிந்தித்துக் கொண்டிருக்க முடியாது. சிந்தனை செய்ய நேரமெடுக்கும். பாம்பு அங்கிருக்கிறது. உனக்காக காத்திருக்காமல் அது கொத்தி விடக்கூடும்.

எனவே சிந்தனையில்லாமல் நீ ஏதோவொன்று செய்தாக வேண்டும். நீ மனமில்லாமல் நகர வேண்டும். நீ தாண்டி குதிக்கிறாய். நீ குதிக்கவேண்டும் என்று முடிவெடுத்தாய்

என்பதல்ல. மனதில் எந்த முடிவும் எடுக்காமல் நீ குதிக்கிறாய். நீ குதித்த பிறகு மனம் திரும்ப வருகிறது. மேலும் பல விஷயங்களைப் பற்றி நீ சிந்திக்கத் தொடங்குகிறாய். குதித்தல் தியானத்தின் வழி நடந்தது. அது தன்னிச்சையாக நடந்தது என்பதை நீ மறந்து விடக்கூடும்.

எப்பொழுதெல்லாம் அபாயம் இருக்கிறதோ, அப்பொழுதெல்லாம் சிந்தனை நின்றுவிடுகிறது. சிந்தனை ஒரு ஆடம்பரம். மக்கள் மிகவும் பாதுகாப்பாக ஆன பிறகு மதிப்பில்லாத விஷயங்களைப்பற்றி சத்தமிட்டுக்கொண்டு அவர்கள் அதிகமாக சிந்திக்கிறார்கள். இந்த உள்அரட்டை எல்லாவிதத்திலும் ஒரு தடையாக மாறுகிறது. அதுவொரு சுமையாக, எடையாக மாறுகிறது. அது உன்னைப் பார்க்க அனுமதிப்பதில்லை, அது உன்னைக் கேட்க அனுமதிப்பதில்லை, அது உன்னை வாழ அனுமதிப்பதில்லை, அது உன்னை அன்பு செலுத்த அனுமதிப்பதில்லை. பயம், இறப்பு வருவதற்கு முன்பாகவே மக்களைக் கொன்றுவிடுகிறது. ஒரு மனிதன் இறப்பு வருவதற்கு முன்பாகவே ஆயிரத்தொரு வழிகளில் இறக்கிறான். உண்மையான இறப்பு அழகானது. ஆனால் பயம் பிரதிபலிக்கும் இறப்பு இருப்பதிலேயே அசிங்கமானது.

எனவே அடுத்தமுறை இதையொரு சாவியாக வைத்துக்கொள். பயம் எழும்பொழுதெல்லாம் அதன்பொருள் நீ தகர்த்தாக வேண்டிய ஏதோவொரு தடைக்கு அருகில், எங்கோ கதவுக்கு பக்கத்தில் இருக்கிறாய். வேகமாகத் தட்டி உள்ளே நுழை. முட்டாளாக இரு, நுழை. புத்திசாலியாக இருக்க முயற்சி செய்யாதே. ஒரு முட்டாளாக இரு, அப்போது பல விஷயங்கள் சாத்தியம்.

## இரு முனைகளைப் பற்றி விழிப்புணர்வோடிரு

இரண்டு விஷயங்கள் நினைவில் வைத்துக் கொள்ளப்பட வேண்டும். ஒன்று மக்கள் தங்களுடைய பயத்தை அடக்கி சிறிது துணிச்சலை, தைரியத்தை தங்களுக்குள் திணிக்க முயற்சி

செய்கிறார்கள். அது பொய்யாகத்தான் இருக்கும். ஏனெனில், அடியாழத்தில் அங்கு பயமிருக்கும் அல்லது மக்கள் அவர்கள் முடங்கிப்போகுமளவிற்கு பயந்துவிடுகிறார்கள். பிறகு பயம் ஒரு தடையாகி விடுகிறது. இவைதான் இரு முனைகள். இரண்டு வழிகளிலும் நீ பயத்தோடு சிக்கிக் கொள்வாய். சரியான வழி அதனை ஏற்றுக் கொள்வதே. எனவே அதனை அடக்கவேண்டிய தேவையில்லை. அதன் இயற்கைத்தன்மையை ஏற்றுக்கொள். அது இயற்கைதான். அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். அதன் நிதர்சனத்தை ஏற்றுக்கொள். மேலும் தொடர்ந்து முன்னால் செல். அதனைக் கடந்து செல். அதனை அடக்காதே. மேலும் அதனால் தடுக்கப்படாதே. அது இருந்தாலும்கூட நகர்ந்து கொண்டேயிரு, நடுக்கத்துடன். ஏனெனில் அங்கு பயமிருக்கிறது. ஆனால் நகர்ந்துகொண்டேயிரு. நடுங்கிக் கொண்டே ஆனால் வெற்று வெளியை நோக்கி பாய்ந்து கொண்டேயிரு.

பயமில்லாத தன்மையைத் திணிக்காதே. ஏனெனில் திணிக்கப் பட்ட பயமற்றதன்மை ஒரு போலியான விஷயம், போலியான நடிப்பு. அதற்கு எந்த மதிப்புமில்லை. எனவே வெறுமனே இயல்பாக, உண்மையாக, நேர்மையாக இரு. பயமிருக்கிறது என்று குறித்துக்கொள். ஆனால் தொடர்ந்து சென்று கொண்டிரு. பயமிருந்தாலும் செல் என்று கூறும்போது நான் அதைத்தான் குறிப்பிடுகிறேன். நடுங்குகிறாயா சரி. குலுங்குகிறதா சரி. சென்று கொண்டேயிரு. பலமான காற்றில் ஆடும் ஒரு புதிய சிறிய இலையைப்போல நடுங்கு.

ஒரு புதிய இலையின் பலத்தைப் பார்த்திருக்கிறாயா? மிகவும் மென்மையானது, மிகவும் பலவீனமானது. ஆனாலும் மிகவும் சக்தி வாய்ந்தது. புயல் வீசும்போது கூட இலை நடுங்கிக்கொண்டே யிருக்கிறது. ஆனால், அதன் அழகை நீ பார்த்திருக்கிறாயா? பயம் அங்கே இருக்கிறது. ஏனெனில், ஏதோவொன்று உயிரோட்டமாக இருக்கும்பொழுது பயம் எப்போதும் அங்கிருக்கிறது. இறந்த விஷயத்திற்கு மட்டுமே பயம் கிடையாது. பயம் அங்கே இருக்கிறது. புயல் வீசுகிறது, மேலும் இலை சிறியது, மெல்லியது,

மென்மையானது. அதை மிகசுலபமாக நசுக்கிவிட முடியும். ஆனால் அதன் பலத்தை நீ பார்த்திருக்கிறாயா? ஆனாலும்கூட அது ஆடிக் கொண்டும், பாடிக் கொண்டும் இருக்கிறது. ஆனாலும்கூட அது வாழ்க்கை மீது நம்பகத்தன்மை கொண்டுள்ளது.

எனவே மென்மையானவனாக இரு, மெல்லியவனாக இரு, நுட்பமானவனாக இரு. பயப்படு, ஆனால் ஒருபோதும் அதனால் தடுக்கப்படாதே. மேலும் அதனை அடக்கி வைக்காதே. வரம்புகளை ஏற்றுகொள், மனித வரம்புகள். ஆனாலும்கூட அவைகளைத்தாண்டி வேலை செய்துகொண்டிரு. அப்படித்தான் ஒருவர் வளர்ந்தாக வேண்டும்.

## அவசரப்படாதே

பயத்தைக் கரைக்க முடியும். ஆனால் அதை விடுவதற்கு அவசரப்படாதே. இல்லாவிடில் நீ அதை அடக்கிவிடுவாய். பொறுமையாக இரு, அதைக் கவனி. அதனைப் புரிந்துகொள்ள முயற்சி செய். உனது ஒரு பகுதியாக அதனை ஏற்றுக்கொள். அசிங்கமான ஒன்று உன்னை பிடித்துத்தொங்கி கொண்டிருக்கிறது என்று சொல்லாதே. அது அதனை நிராகரித்தல். மேலும் நிராகரித்தல் உதவி செய்யாது. அது உன்னில் ஒரு பகுதி. அன்பு ஒரு பகுதியாக இருப்பதைப் போல பயமும் உன்னுள் ஒரு பகுதி. கோபம் உன்னுள் இருப்பதைப்போல.

எந்த உணர்ச்சியையும் ஒருபோதும் நிராகரிக்காதே. ஏனெனில், அந்த உணர்ச்சிகள்தான் உன்னை உருவாக்குகின்றன. மேலும் அவை அனைத்தும் தேவைதான். ஒரே உணர்ச்சி உன்னை ஆட்டிப் படைக்க கூடாது. எல்லா உணர்வுகளும் உனக்குள் ஒரு இசைக் கோர்வையாக, ஒரு சரியான விகிதத்தில் எப்போதும் இருக்க வேண்டும். ஒரேயொரு உணர்ச்சி உன்னை ஆட்கொள்ளக்கூடாது. நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது அதுமட்டும்தான். ஆகவே எந்த உணர்ச்சியும் முழுவதுமாக நிராகரிக்கப்படக்கூடாது.

பயத்திற்கு அதற்கேயுரிய இடமுள்ளது. அது தேவை. அது இல்லாமல் போனால் ஏதோவொன்றை நீ இழந்துவிடுவாய்.

ஆனால் அது அளவு மீறக்கூடாது. ஒருவர் சமநிலையில் இருந்தாகவேண்டும்.

பயத்தால் முழுவதுமாக நிறைந்திருக்கும் மக்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய இருப்பு முழுவதும் பயம் பரவி விடுகிறது. அது ஒரு நோய். மேலும் பயத்தைக் கண்டு பயம் கொள்ளும் மக்கள் அதனை அடக்கி வைத்துவிடுகிறார்கள். அவர்கள் அதனைக் கண்டனம் செய்கிறார்கள். அவர்கள் அதனை முழுமையாக நிராகரித்து விடுகிறார்கள். அதனால் அவர்கள் கிட்டத்தட்ட ஒரு பாறை போலாகி விடுகிறார்கள். அதுவும் ஒரு நோய்தான். உள்ளே நடக்கும் நடப்பில் பயத்திற்கு அதற்கே உரிய இடமுள்ளது. அதனிடம் பங்களிக்க மிக முக்கியமான ஒன்று உள்ளது.

உன்னுடைய வாழ்க்கையில் சில சமயங்களில் ஒருவேளை பயம் சிறிது அதிகமாயிருக்கலாம். ஆனால் மறுமுனைக்கு சென்று முற்றிலுமாக அதை நிராகரிக்காதே. அது மற்ற உணர்ச்சிகளுடன் ஒரு லயத்திற்கு கொண்டுவரப்பட வேண்டும். அது அங்கே இருந்தாக வேண்டும். எனவே முதலில் பயத்தை விடவேண்டும் என்ற கருத்தை விட்டுவிடு. இரண்டாவதாக அதனை ஏற்றுக்கொள். அது உன்னில் ஒரு பகுதி. மேலும் மூன்றாவதாக அதனை கவனி. அதனை உள்வாங்கு. அது ஏன் அங்கிருக்கிறது? மேலும் அது என்னவென்பதை புரிந்துகொள்ள முயற்சி செய். நீ இந்த மூன்று விஷயங்களைச் செய்தால் நீ அதனை ஒரு சமநிலைக்கு கொண்டு வந்துவிடுவாய். உனது பயம் மறையாது, ஆனால் அது அதிகமாகவும் இருக்காது. அது சரியாக உனக்கு தேவைப்படும் அளவிற்கு இருக்கும்.

## பயமற்ற தன்மையை ஒரு இலக்காகக் கொள்ளாதே

ஒரு இலக்கு என்பது துன்பத்தை உருவாக்குவதற்குரிய மனதின் தந்திரம். ஒரு இலக்கை உருவாக்கிவிட்டால் பிறகு நீ துன்பப்படுவாய். ஏனெனில் பிறகு பதட்டம் எழுகிறது. அதனை எவ்வாறு அடைவது? நான் இன்னமும் அதனை அடையவில்லை.

நீ தேடிக்கொண்டேயிருப்பாய். நீ அதனை ஒருபோதும் அடையமாட்டாய். நீ துன்பத்திலேயே இருப்பாய். மேலும் நீ வாழ்வின் எல்லா இன்பங்களையும் தவற விட்டுக் கொண்டே யிருப்பாய். ஏனெனில் உனது கண்கள் எதிர்காலத்தை நோக்கிக் கொண்டுள்ளன. நீ இங்கேயிருக்கிறாய், ஆனால் உனது கண்கள் எதிர்காலத்தில் பதிந்துள்ளன.

இதனைப் புரிந்துகொள்ள முயற்சி செய். உடல் இங்கே இருக்கிறது. ஆனால் மனம் இங்கே இல்லை. அது இருகூறுகளாக உள்ளது. அதுதான் பிரச்சனை. நீ தண்ணீர் குடிக்கும்போது உடல் இங்கே இப்போது குடிக்கிறது. உடலால் எதிர்காலத்தில் தண்ணீர் குடிக்க முடியாது. அதனால் கடந்தகாலத்தில் தண்ணீர் குடிக்க முடியாது. ஏனெனில் கடந்தகாலம் இல்லை, எதிர்காலம் இன்னும் வரவில்லை. நீ பசியை உணரும்போது இங்கே இப்போது பசியை உணருகிறாய். மேலும் நான் மனம் உருவாக்கக்கூடிய பசியைப் பற்றி பேசவில்லை. நான் உடலின் பசியைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறேன். உடல் எப்போதும் நிகழ்காலத்தில் இருக்கிறது. மனம் ஒருபோதும் நிகழ்காலத்தில் இருப்பதில்லை. எப்போதும் அதனால்தான் பதட்டம் உருவாகிறது. ஒருவன் இருபுறமும் பிளவு படுவதைப் போன்ற உணர்வைத் தருகிறது. மனம் எதிர்காலத்தை நோக்கி பாய்ந்து கொண்டேயிருக்கிறது, உடல் இங்கேயிருக்கிறது. பிறகு மனம் உடலை, மந்தமாக உள்ளது, மெதுவாக உள்ளது, வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியவில்லை என்று திட்ட தொடங்கி விடுகிறது.

உடல் வெறுமனே இங்கே இருக்கிறது, மந்தமாக அல்ல. மனம்தான் உடலுக்கு திரும்ப வரும் விஷயத்தை கற்றுக் கொண்டாக வேண்டும். உனது மனதிலிருந்து வெளியே வந்து உனது புலன்களுக்குள் செல். நீயும் அந்தத் தன்னம்பிக்கையை, ஆனந்தத்தை அடைவாய். உனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்க எந்த கடவுளும் தேவையில்லை. உனக்கு ஆனந்தத்தையும், அர்த்தத்தையும் கொடுக்க எந்த சத்தியமும் தேவையில்லை. உனது உடலுக்கும் உனது மனதுக்கும் பாலம் அமைக்கப்பட வேண்டும்.

அது மட்டுமே தேவை. அது ஒரு எளிய செயல்பாடு. மேலும் இந்த பாலத்தை அமைப்பதை ஒரு இலக்காக கொள்ளாதே. நீ அதனை ஒரு இலக்காகக் கொண்டால் திரும்பவும் அதே பிரச்சனை பின்கதவு வழியாக வந்துள்ளது.

வெறுமனே புரிந்து கொள். பிறகு திடீரென உன்னுடைய எல்லா சக்தியும் திரும்ப கிடைக்கும். நீ தன்னம்பிக்கையோடு, இருப்பாய், நீ ஆனந்தமாக இருப்பாய். மேலும் பயமில்லாமல் நகரத் தொடங்குவாய். பாதுகாப்பற்ற தன்மை மறைந்துவிட்டது என்பதல்ல, அது இருக்கிறது. அது வாழ்க்கையின் பகுதி. அது உள்ளமைக்கப்பட்டது. தாங்கள் பாதுகாப்பாக இருப்பதாக நினைத்துக்கொள்ளும் மக்கள் வெறுமனே முட்டாள்கள். உயிரோடிருக்கும்போது யாருமே பாதுகாப்பாக இருக்கமுடியாது. நீ உனது கல்லறையில் இருக்கும்போது மட்டுமே பாதுகாப்பாக இருக்கமுடியும். அதற்குமுன் ஒருபோதும் இல்லை. நீ எப்படி பாதுகாப்பாக உணரமுடியும்? நோய் இருக்கிறது, இறப்பு இருக்கிறது, நண்பர் இறந்துபோய் விடக்கூடும், காதலி வேறெங்காவது சென்றுவிடக்கூடும். நீ எவ்வாறு பாதுகாப்பாக இருக்கமுடியும்? வங்கி ஒருவேளை மூடப்படலாம், நீ திவாலாகக்கூடும், உன்னுடைய வேலையை நீ இழந்துவிடக்கூடும், உன்னுடைய கண்பார்வையை நீ இழந்துவிடக்கூடும், நீ பக்கவாதம் வந்து முடங்கி போய்விடக்கூடும், பூகம்பம் வந்துவிடக்கூடும், சுற்றி ஆயிரத்தொரு விஷயங்கள் உள்ளன. நீ எப்படி பாதுகாப்பாக இருக்கமுடியும்?

ஆகவே பாதுகாப்பாக இருக்கவேண்டும் என்ற கருத்தே பிரச்சனையை உருவாக்குகிறது. பாதுகாப்பற்ற தன்மையை அனுபவிக்க நான் மக்களுக்கு உதவி செய்கிறேன். நான் அவர்களுக்கு பாதுகாப்பளிக்கிறேன் என்பதல்ல. நான் எப்படி அளிக்கமுடியும்? யாரும் அதனைச் செய்யமுடியாது. மேலும் அதனைச் செய்வதும் நல்லதுமல்ல. யாராவது அதனைச் செய்ய வந்தாலும்கூட அது செய்யப்படக்கூடாது. ஏனெனில் பாதுகாப்பாக

இருக்கும்பொழுது ஒரு மனிதன் இறந்துவிடுகிறான். பின் நீ வாழ முடியாது.

வாழ்க்கை இறப்புடன் வருகிறது. நீ மூச்சை உள்ளிழுக்கும் பொழுது வெளியே விட்டாக வேண்டும். நான் மூச்சை உள்ளே மட்டுமே இழுப்பேன் என்று சொல்லமுடியாது. அவை சேர்ந்தே வருகின்றன. மூச்சை உள்ளிழுப்பது, மூச்சை வெளியே விடுவது. மூச்சை உள்ளிழுப்பது வாழ்வு, மூச்சை வெளியே விடுவது இறப்பு. அன்பு மூச்சை உள்ளிழுப்பது, வெறுப்பு மூச்சை வெளியே விடுவது. மகிழ்ச்சி மூச்சை உள்ளேயிழுப்பது, துயரம் மூச்சை வெளியே விடுவது. திருமணம் மூச்சை உள்ளிழுப்பது, விவாகரத்து மூச்சை வெளியே விடுவது. அவை சேர்ந்தே வருகின்றன.

நீ விவாகரத்தில்லாத திருமணத்தை விரும்பினால் அந்த திருமணம் செயற்கையானதாக இருக்கும். அதில் எந்த மகிழ்ச்சியும் இருக்காது. நீ பாதுகாப்பாக இருப்பாய், ஆனால் அங்கு எந்த மகிழ்ச்சியும் இருக்காது. ஏனெனில் இறந்துபோன ஒரு விஷயத்துடன் நீ எவ்வாறு மகிழ்ச்சியுடன் இருக்கமுடியும்? நீ உனது மனைவி உயிரோட்டத்தோடு இருக்கவேண்டுமென்று விரும்பினால் அங்கே அபாயம் உள்ளது. ஒரு உயிரோட்டமுள்ள பெண் ஒரு ஆபத்தான பெண். அவள் திரும்பவும் காதலில் விழக்கூடும், யாருக்குத் தெரியும்? ஒரு உயிரோட்டமுள்ள மனிதனுக்கு காதல் திரும்பவும் நிகழக்கூடும். நீ உயிரோட்டத்தோடு இருந்தால் நீ வேறொரு பெண்ணுடன் காதல் வயப்படலாம். எந்தச் சட்டமும், எந்த ஒழுக்கமும் வாழ்க்கைக்கு தெரியாது.

இறப்பால் மட்டுமே கட்டுபடுத்தப்பட முடியும். எனவே நீ எவ்வளவு இறந்தவனாக இருக்கிறாயோ அவ்வளவு எளிதாக உன்னை கட்டுபடுத்தமுடியும். பிறகு நீ ஒரு கணவனாக அல்லது மனைவியாக, இதுவாக, அதுவாக, குறைந்தபட்சம் விஷயங்கள் பாதுகாப்பாக இருப்பதாக காட்சியளிக்கின்றன. ஒரு நடுத்தர வீடு, வங்கியிருப்பு சிறிது, ஒரு கார், குழந்தைகள், கணவன் அல்லது மனைவி, ஒரு நல்ல வேலை, ஒருவர் தான் பாதுகாப்பாக இருப்பதாக உணர்கிறார். ஆனால் இது பாதுகாப்பா? பாதுகாப்பு

சாத்தியமில்லை. வசதிகள் மட்டுமே சாத்தியம். இவை வசதிகள், பாதுகாப்பல்ல. மேலும் அதை திரும்ப எடுத்துக்கொள்ளப் படமுடியும். அவை பிரிக்கப்பட முடியும்.

சாத்தியமாகக்கூடிய ஒரே பாதுகாப்பு பாதுகாப்பற்றத் தன்மையை அனுபவிக்கத் தொடங்குதல் மட்டுமே. இது முரண்பாடாகத் தோன்றுகிறது. ஆனால் வாழ்க்கையில் உண்மையான அனைத்தும் எப்போதும் முரண்பாடானவைதான். சத்தியம் ஒரு முரண்பாடே. பாதுகாப்பற்றத்தன்மையை நேசி. அப்போது அது மறைந்துவிடுகிறது. நீ பாதுகாப்படைந்துவிட்டாய் என்பதல்ல. நீ பாதுகாப்பற்ற தன்மையை நேசிக்கவும் அனுபவிக்கவும் தொடங்கிவிட்டால் பிறகு யார் கவலைப்படு வார்கள்? அங்கு எந்தக் கவலையும் இல்லை, அதைக் குறித்து எந்த பதட்டமும் இல்லை. ஒருவர் உண்மையிலேயே புளகாங்கிதம் அடைகிறார். ஒருவர் ஆர்வமடைகிறார், நாளை என்ன கொண்டு வரப்போகிறதென்று ஆச்சரியத்தோடு காத்திருக்கிறார். ஒருவர் திறந்த உள்ளத்தோடு காத்திருக்கிறார்.

## வெளியே விட பயப்படுதல்

இறப்பும், வாழ்வும் ஒரே சக்தி. ஒரே விஷயத்தின் இருமுனைகள். அலைவதும் உள்வாங்குதலும், இரவும் பகலும், கோடையும் குளிர்காலமும். மேலும் அவை தனிப்பட்டவையல்ல. அவை எதிரெதிரானதல்ல, எதிர்மறையானவையல்ல. அவை ஒன்றை யொன்று பூரணமடையச் செய்பவை. இறப்பு வாழ்வின் முடிவல்ல. உண்மையில் அது வாழ்க்கையின் நிறைவு, வாழ்க்கையின் சிகரம், வாழ்க்கையின் உச்சக்கட்டம், வாழ்க்கையின் இறுதி நிகழ்வு. மேலும் ஒருமுறை நீ உன்னுடைய வாழ்க்கையையும் அதன் செயல்பாடுகளையும் அறிந்துகொண்டால் பிறகு நீ இறப்பு என்றால் என்னவென்று புரிந்துகொள்வாய்.

இறப்பு வாழ்க்கையின் ஒரு உறுப்பு, அதன் ஒன்றிணைந்த பகுதி. மேலும் அது வாழ்க்கைக்கு மிகவும் நட்பானது. அது இல்லாமல்

வாழ்க்கை இருக்கமுடியாது. இறப்பு பின்புலத்தைத் தருகிறது. இறப்பு உண்மையில் புதுப்பித்தலின் ஒரு செயல்பாடு. மற்றும் இறப்பு ஒவ்வொரு கணமும் நிகழ்கிறது. நீ சுவாசத்தை உள்ளிழுக்கும் கணத்தில், மற்றும் வெளிவிடும் கணத்தில் இரண்டும் நிகழ்கின்றன. சுவாசத்தை உள்ளிழுக்கும்போது வாழ்க்கை வருகிறது, சுவாசத்தை வெளிவிடும் கணத்தில் இறப்பு நிகழ்கிறது. அதனால்தான் ஒரு குழந்தை பிறந்தவுடன் அது செய்யும் முதல் விஷயம் சுவாசத்தை உள்ளிழுத்தல். பின் வாழ்க்கை தொடங்குகிறது. ஒரு வயதான மனிதன் செய்யும் கடைசி விஷயம் சுவாசத்தை வெளியே விடுதல்தான். பின் வாழ்க்கை சென்று விடுகிறது. சுவாசத்தை வெளிவிடுதல் மரணம், சுவாசத்தை உள்ளிழுத்தல் வாழ்க்கை. அவை மாட்டுவண்டியின் இருசக்கரங்கள் போன்றவை. நீ மூச்சை உள்ளிழுத்து வாழும் அளவிற்கு அதை வெளியே விட்டும் வாழ்கிறாய். மூச்சை வெளிவிடுதல் மூச்சை உள்ளிழுத்தலின் ஒரு பகுதி. மூச்சை வெளியே விட்டால் தவிர உன்னால் மூச்சை உள்ளிழுக்க முடியாது. நீ இறப்பதை நிறுத்தி விட்டால் உன்னால் வாழமுடியாது. தன்னுடைய வாழ்க்கை என்ன வென்று புரிந்து கொண்ட மனிதன் இறப்பு நிகழ அனுமதிக்கிறான். அவன் அதனை வரவேற்கிறான். ஒவ்வொருகணமும் அவன் இறந்து ஒவ்வொரு கணமும் அவன் உயிர்த்தெழுகிறான். அவனுடைய சிலுவையும் அவனுடைய உயிர்த்தெழுதலும் தொடர்ந்து ஒரு செயல்பாடாக நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. அவன் ஒவ்வொரு கணமும் கடந்த காலத்திற்கு இறந்து, எதிர்காலத்திற்குள் திரும்ப திரும்ப பிறக்கிறான்.

நீ வாழ்க்கைக்குள் பார்த்தால் இறப்பு என்றால் என்னவென்று அறிந்துகொள்ள முடியும். நீ இறப்பு என்றால் என்னவென்று புரிந்து கொண்ட பின்பே வாழ்க்கையென்றால் என்னவென்று புரிந்து கொள்ளமுடியும். அது ஒன்றிணைந்தது. சாதாரணமாக பயத்தின் காரணமாக நாம் ஒரு பிளவை உருவாக்கியுள்ளோம். நாம் வாழ்க்கை நல்லது, இறப்பு கெடுதல் என்று நினைக்கிறோம். நாம் வாழ்க்கையை வாழவேண்டும், இறப்பைத் தவிர்க்க வேண்டும் என்று நினைக்கிறோம். நாம் எப்படியாவது நம்மை இறப்பிலிருந்து

பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறோம். இந்த அபத்தமான கருத்து முடிவில்லாத துன்பத்தை நமது வாழ்வில் உருவாக்குகிறது. ஏனெனில் இறப்பிலிருந்து தன்னை பாதுகாத்துக் கொள்ளும் ஒரு மனிதன் வாழமுடியாதவனாகிறான். மூச்சை வெளியே விடுவதற்கு பயப்படும் ஒரு மனிதனால் மூச்சை உள்ளிழுக்கமுடியாது. பிறகு அவன் மாட்டிக்கொண்டுவிட்டான். மேலும் அவன் வெறுமனே இழுத்துக் கொண்டு செல்கிறான். அவனுடைய வாழ்க்கை ஒரு ஓட்டமாக இருக்காது. அவனுடைய வாழ்வு ஒரு நதியாக ஓடவில்லை.

நீ உண்மையிலேயே வாழ விரும்பினால் நீ இறப்பதற்குத் தயாராக இருக்கவேண்டும். உன்னில் யார் இறப்பைக் கண்டு பயப்படுகிறார்கள்? வாழ்க்கை இறப்பைக் கண்டு பயப்படுகிறதா? அது சாத்தியமில்லை. வாழ்க்கை அதனுடன் ஒன்றிணைந்த செயல்பாட்டைக் கண்டு எப்படி பயப்படும்? உன்னில் உள்ள வேறு ஏதோ ஒன்று பயப்படுகிறது. உன்னில் உள்ள ஆணவம் பயப்படுகிறது. வாழ்வும் இறப்பும் எதிரிடையானவை அல்ல. ஆணவமும், வாழ்வும் எதிரிடையானவை. ஆணவம் வாழ்வுக்கும் இறப்புக்கும் எதிரானது. ஆணவம் வாழவும் பயப்படுகிறது, இறப்பதற்கும் பயப்படுகிறது. அது வாழ பயப்படுகிறது, ஏனெனில் வாழ்வை நோக்கிய ஒவ்வொரு முயற்சியும், ஒவ்வொரு அடியும் இறப்பை அருகில் கொண்டுவருகிறது.

நீ வாழ்ந்தால் நீ இறப்புக்கு அருகில் வருகிறாய். ஆணவம் இறப்பதற்கு பயப்படுகிறது. அதனால் அது வாழ்வதற்கும் பயபடுகிறது. ஆணவம் வெறுமனே தள்ளிக்கொண்டே செல்கிறது.

வாழாமலும், இறக்காமலும் பல மக்கள் இருக்கிறார்கள். இது எல்லாவற்றையும் விடவும் மோசமானது. முழு உயிரோட்டமுள்ள மனிதன் இறப்பாலும் நிறைவடைகிறான். யேசு சிலுவையில் இருப்பதன் அர்த்தம் அதுதான். யேசு அவருடைய சொந்த சிலுவையைச் சுமப்பது உண்மையிலேயே புரிந்துகொள்ளப்பட வில்லை. அவருடைய சீடர்களுக்கு அவர் சொல்கிறார், ‘உன்னுடைய சொந்த சிலுவையை நீ சுமந்தாக வேண்டும்.’ யேசு

அவருடைய சொந்த சிலுவையை சுமப்பதன் பொருள் மிகவும் எளிமையானது. எல்லோரும் அவர்களுடைய இறப்பைத் தொடர்ந்து சுமந்தாக வேண்டும். எல்லோரும் ஒவ்வொரு கணமும் இறக்கவேண்டும், எல்லோரும் சிலுவையில் இருக்கவேண்டும், என்பதைத்தவிர வேறொன்றுமில்லை. ஏனெனில் அது மட்டுமே முழுமையாக, முழுவதுமாக வாழ்வதற்கான ஒரே வழி.

நீ எப்பொழுதெல்லாம் உயிரோட்டத்துடன் முழுமையாக ஒரு கணத்தை வாழ்கிறாயோ அப்பொழுதெலாம் திடீரென அங்கே இறப்பையும் பார்ப்பாய். அன்பில் அது நிகழ்கிறது. அன்பில் வாழ்வு ஒரு உச்சக்கட்டத்திற்கு வருகிறது. அதனால்தான் மக்கள் அன்பைக் கண்டு பயப்படுகின்றனர்.

அன்பைக் கண்டு பயப்படுவதாக கூறும் மக்களைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டுக் கொண்டே இருக்கிறேன். அன்பில் என்ன பயம்? ஏனெனில் நீ உண்மையிலேயே ஒருவர் மீது அன்பு செலுத்தும் போது உனது ஆணவம் கரைந்து நழுவத் தொடங்கிறது. நீ ஆணவத்தோடு அன்பு செலுத்தமுடியாது. ஆணவம் ஒரு தடையாகிறது. மேலும் நீ தடையை நீக்க முற்படும்போது ஆணவம் 'இது ஒரு இறப்பாக இருக்கப் போகிறது!, கவனமாக இரு' என்று கூறுகிறது.

ஆணவத்தின் இறப்பு உனது இறப்பல்ல. ஆணவத்தின் இறப்பு உண்மையிலேயே நீ வாழ்வதற்கான வாய்ப்பு. ஆணவம் உன்னைச் சுற்றியுள்ள ஒரு இறந்த ஓடு. அது உடைத்து தூக்கி எறியப்பட வேண்டும். ஒருவன் பயணம் செய்யும்போது எவ்வாறு அவனுடைய உடையில் மாசு படிகிறதோ, அவனுடைய உடல் அழுக்காவது இயல்பாக நடக்கிறது. அவன் அழுக்கை சுத்தப்படுத்த குளிக்கவேண்டும்.

நாம் காலத்தில் நகரும்பொழுது, அனுபவத்தின், அறிவின், வாழ்ந்த வாழ்க்கையின், கடந்த காலத்தின் அசுத்தங்கள் சேர்கின்றன. அந்த அசுத்தம் நமது ஆணவமாக மாறுகிறது. சேர்த்து வைக்கப்படும் போது, அது உன்னைச் சுற்றி ஒரு ஓடாக மாறுகிறது. அது உடைக்கப்பட்டு தூக்கி எறியப்பட வேண்டும். ஒருவர்

தொடர்ந்து தினமும் குளிக்க வேண்டும். - ஒவ்வொரு நாளும் உண்மையில் ஒவ்வொரு கணமும் சுத்தப்படுத்த வேண்டும். அப்போதுதான் அந்த ஓடு சிறையாக மாறாமலிருக்கும்.

## அங்கு பயம் இருந்தால் அதை ஏற்றுக்கொள்

அங்கு பயமிருக்கிறது, மேலும் நீ அதைக்குறித்து எதையாவது செய்யத்தொடங்கினால் பிறகு ஒரு புதிய பயம் நுழைந்துவிட்டது. பயத்தைப் பற்றிய பயம். அது ஒரு சிறிய சிக்கலாகி விடுகிறது. ஆகவே பயம் அங்கேயிருந்தால் அதனை ஏற்றுக்கொள். அதைப்பற்றி எதையும் செய்யாதே. ஏனெனில் செய்வது உதவி செய்யாது. பயத்தின் காரணமாக நீ என்ன செய்தாலும் அது மேலும் பயத்தை உண்டாக்கும். குழப்பத்தின் விளைவாக நீ என்ன செய்தாலும், அது இன்னும் குழப்பத்தை அதிகரிக்கும். எதையும் செய்யாதே. பயம் அங்கிருந்தால் பயம் அங்கிருக்கிறது என்று குறித்துக்கொள். மேலும் அதனை ஏற்றுக்கொள். நீ என்ன செய்யமுடியும்? நீ எதுவும் செய்யமுடியாது.

பயம் அங்கே இருக்கிறது, பார்க்கிறாயா? நீ வெறுமனே பயம் அங்கேயிருக்கிறது என்ற நிதர்சனத்தைக் குறித்து கொள்ள முடிந்தால் பயம் எங்கேயிருக்கிறது? நீ அதனை ஏற்றுக்கொண்டு விட்டாய். அது கரைந்துவிட்டது. ஏற்றுக்கொள்ளுதல் அதனைக் கரைத்துவிடுகிறது. ஏற்றுக்கொள்ளுதல் மட்டுமே, வேறு எதுவுமில்லை. நீ அதனோடு சண்டையிட்டால், நீ இன்னொரு தொந்தரவை உருவாக்குகிறாய், மற்றும் இது முடிவில்லாமல் போய் கொண்டேயிருக்கலாம். பிறகு அதற்கு முடிவேயில்லை.

மக்கள் என்னிடம் வந்து, நாங்சள் மிகவும் பயப்படுகிறோம். நாங்கள் என்ன செய்யவேண்டும்? என்று கேட்கிறார்கள். நான் செய்வதற்கு எதையாவது கொடுத்தால் அவர்கள் பயத்தால் நிறைந்த இருப்போடு அதனைச் செய்வார்கள். எனவே அவர்களுடைய செயல் அவர்களுடைய பயத்திலிருந்து வெளிவரும். பயத்தின் விளைவாக வரும் காரியம் பயத்தால் நிறைந்திருப்பதைத் தவிர வேறெப்படியும் இருக்கமுடியாது.

உனக்கு ஒரு பிரச்சனை இருந்தால் இன்னொன்றை உருவாக்காதே. முதலாவதிலேயே இரு. அதனோடு சண்டையிட்டு இன்னொன்றை உருவாக்காதே. இரண்டாவது பிரச்சனையை தீர்ப்பதை விட முதல் பிரச்சனையை தீர்ப்பது எளிதானது. முதலாவது ஆதாரத்திற்கு அருகிலுள்ளது. இரண்டாவது ஆதாரத்திலிருந்து விலகியுள்ளது. ஆதாரத்திலிருந்து எவ்வளவு விலகியுள்ளதோ அந்த அளவுக்கு அதனைத் தீர்ப்பது சாத்தியமற்றது.

நீ பயப்பட்டால், நீ பயப்படுகிறாய். அவ்வளவுதான். ஏன் அதிலிருந்து ஒரு பிரச்சனையை உருவாக்க வேண்டும்? பிறகு உன்னிடம் பயமிருக்கிறது என்பதை நீ அறிவாய். உன்னிடம் இரண்டு கைகள் உள்ளது என்பதைப்போல. ஏன் அதிலிருந்து ஒரு பிரச்சனையை உருவாக்க வேண்டும்? ஏன் இரண்டு மூக்கில்லாமல் ஒரு மூக்கு இருக்கிறது என்பதைப்போல. ஏன் அதிலிருந்து ஒரு பிரச்சனையை உருவாக்க வேண்டும்? பயம் அங்கிருக்கிறது, அதனை ஏற்றுக்கொள், அதனைக் குறித்துக்கொள். ஏற்றுக்கொள். மேலும் அதனைப்பற்றிக் கவலைப்படாதே. என்ன நடந்துவிடும்? திடீரென அது மறைந்துவிட்டதை நீ உணர்வாய்.

இதுதான் உன் இரசவாதம். நீ அதை ஏற்றுக்கொண்டால் ஒரு பிரச்சனை மறைந்துவிடுகிறது. நீ அதனோடு தகராறு செய்தால் அது மென்மேலும் சிக்கலாகி விடுகிறது. ஆமாம், துன்பம் அங்கேயிருக்கிறது. மேலும் திடீரென பயம் வருகிறது. அதனை ஏற்றுக்கொள். அது அங்கேயிருக்கிறது. மேலும் அதைப்பற்றி ஒன்றும் செய்யமுடியாது. நான் ஒன்றும் செய்யமுடியாது என்று சொல்லும்பொழுது நான் அவநம்பிக்கையோடு பேசுகிறேன் என்று நினைக்காதே. அதைப்பற்றி எதுவும் செய்யமுடியாது என்று சொல்லும்பொழுது நான் அதைத் தீர்ப்பதற்கான சாவியை உனக்குத் தருகிறேன்.

துன்பம் அங்கிருக்கிறது. அது வாழ்க்கையின் பகுதி. மேலும் வளர்ச்சியின் பகுதி. அதில் கெடுதலானது எதுவுமில்லை. துன்பம் வெறுமனே அழிப்பதாக, உருவாக்கும் தன்மை ஏதுமில்லாததாக ஆகும்போது மட்டுமே தீங்கு பயக்கிறது. நீ துன்பப்பட்டு

அதிலிருந்து எதுவும் கிடைக்காதபோது மட்டுமே அது கெடுதலாகிறது. ஆனால் துன்பத்தின் மூலமாக அது புரிதலாக அடையமுடியும் என்று நான் கூறுகிறேன். பிறகு அது படைப்பாற்றல் உள்ளதாகிறது.

விடியல் இருளைத் தொடர்ந்து வருமேயானால் இருள் அழகானது. அது முடிவில்லாமல் தொடர்ந்து இருந்து கொண்டிருந்தால் அங்கே விடியல் ஏதும் இல்லையென்றால் வெறுமனே தொடர்ந்து கொண்டிருந்தால் நீ அதிலேயே சுழன்று கொண்டிருப்பாய். அப்படிப்பட்ட இருள் அபாயகரமானது. நீ சுதாரிப்பாக இல்லையென்றால் இது நிகழலாம். ஒரு துன்பத்திலிருந்து தப்பிப்பதற்காக நீ இன்னொரு துன்பத்தை உருவாக்கலாம். இன்னொன்றிலிருந்து தப்பிப்பதற்காக இன்னொன்று. மேலும் இது சென்று கொண்டேயிருக்கும். நீ இன்னமும் வாழாத துன்பங்கள் அனைத்தும் உனக்காக காத்துக்கொண்டிருக்கின்றன. நீ தப்பித்துவிட்டாய். ஆனால் நீ வெறுமனே ஒரு துன்பத்திலிருந்து இன்னொரு துன்பத்திற்கு தப்பி வந்துள்ளாய். ஏனெனில், ஒரு துன்பத்தை உண்டாக்கிய மனம் இன்னொன்றை உருவாக்கும். நீ இந்தத் துன்பத்திலிருந்து அந்தத் துன்பத்திற்கு தப்பிக்கலாம். ஆனால், துன்பம் இன்னமும் அங்கு இருக்கும். ஏனெனில், உனது மனம்தான் அதனை உருவாக்கும் சக்தி.

துன்பத்தை ஏற்றுக்கொண்டு அதனைத் தாண்டிச்செல். தப்பிக்காதே. வேலை செய்வதற்கு இது முற்றிலும் வேறுபட்ட ஒரு பரிமாணம். துன்பம் அங்கிருக்கிறது. அதனை ஏற்றுக்கொள். அதன் வழியாகச் செல். பயம் அங்கிருக்கும், அதனை ஏற்றுக்கொள். நீ நடுங்குவாய், நடுங்கு!. நீ பயப்படமாட்டாய், நீ நடுங்கமாட்டாய் என்று ஏன் பாசாங்கு செய்யவேண்டும்? நீ ஒரு கோழையாக இருந்தால் அதனை ஏற்றுக்கொள்.

எல்லோரும் கோழைகள்தான். நீ தைரியசாலி என்றழைப் பவர்கள் பாசாங்கு செய்கிறார்கள். ஆழத்தில் அவர்களும் மற்றவர்களைப் போலவே கோழைதான், உண்மையில் அதே

கோழைத்தனம் உடையவர்கள். ஆனால் அவர்களுடைய கோழைத்தனத்தை மறைப்பதற்காக அவர்களுடைய தைரிய முகத்தை உருவாக்கியுள்ளனர். அவர்கள் கோழைகளல்ல என்று அனைவரும் நினைக்கும்படி அவர்கள் நடந்துகொள்ள முயற்சி செய்கிறார்கள். அவர்களுடைய தைரியம் வெறும் ஒரு திரைதான்.

நாம் எப்படி தைரியமாக இருக்கமுடியும்? இறப்பு இருக்கிறது, நாம் எப்படி தைரியமாக இருக்கமுடியும்? ஏனெனில், நாம் ஒவ்வொருவரும் காற்றிலாடும் வெறும் ஒரு இலைதான். இலை எப்படி நடுங்காமல் இருக்கமுடியும்? காற்று வீசும்போது இலை நடுங்கும். ஆனால் இலையிடம் நீ ஒருபோதும் நீ ஒரு கோழை என்று சொல்வதில்லை. நீ இலை உயிரோட்டத்தோடு இருக்கிறது என்று மட்டுமே சொல்கிறாய். எனவே பயம் உன்னை ஆட்கொள்ளும் போது, நீ நடுங்கும்போது, நீ காற்றிலாடும் ஒரு இலைதான் – அழகு! அதிலிருந்து ஏன் பிரச்சனையை உருவாக்கிக் கொள்கிறாய்? ஆனால் சமுதாயம் எல்லாவற்றிலும் ஒரு பிரச்சனையை உருவாக்கியுள்ளது.

ஒரு குழந்தை இருட்டைப் பார்த்து பயப்பட்டால் நாம் பயப்படாதே, தைரியமாக இரு என்று கூறுகிறோம். ஏன் குழந்தை வெகுளியாக உள்ளது. இயல்பாகவே இருட்டில் அவன் பயத்தை உணர்கிறான். நீ அவனைத் தைரியமாயிரு என்று கட்டாயப்படுத்து கிறாய். எனவே அவனும் அவனை கட்டாயப்படுத்துகிறான். அதனால் அவன் பதட்டமடைகிறான். அவன் இருளை சகித்துக் கொள்கிறான். ஆனால் அவன் இப்போது பதட்டமாக இருக்கிறான். இப்போது அவனது முழு இருப்பும் நடுங்கத் தயாராக உள்ளது. மேலும் அவன் அதை அடக்குகிறான். இந்த அடக்கப்பட்ட நடுக்கம் அவனது வாழ்க்கை முழுவதும் பின்தொடரும். இருளில் நடுங்குவது சரிதான். அதில் தவறு ஏதுமில்லை. அழுதுகொண்டே அப்பா விடமோ, அம்மாவிடமோ ஓடுவது சரியாகத்தான் இருந்திருக்கும். அதில் தவறு ஏதுமில்லை. அந்த குழந்தை இருளிலிருந்து அனுபவ முள்ளவனாக, அதிகம் அறிந்தவனாக வெளிவந்திருப்பான். அவன் நடுங்கிக்கொண்டு, அழுதுகொண்டு, பதறிக்கொண்டு இருளைக் கடந்திருந்தால் அதில் பயப்பட ஏதுமில்லை என்பதைத் தெரிந்து

கொண்டிருப்பான். அடக்கி வைக்கப்பட்டால் அந்த விஷயத்தை அதன் முழுமையில் ஒருபோதும் அனுபவிப்பதில்லை. நீ அதிலிருந்து எந்த ஆதாயமும் அடைவதில்லை.

துன்பத்தின் மூலம் விவேகம் வருகிறது. மேலும் விவேகம் ஏற்றுகொள்ளுதலின் மூலம் வருகிறது. எது என்னவாக இருந்தாலும் அதனோடு இசைவாக இரு. சமுதாயத்தைப் பற்றியோ, அதன் கண்டனத்தைப்பற்றியோ எந்தக் கவலையும் படாதே. உன்னைப்பற்றி தீர்மானிக்க யாருக்கும் உரிமையில்லை. யாரும் உரிமையிருப்பதாக பாசாங்கு செய்யமுடியாது. மற்றவர்களை பற்றி முடிவு செய்யாதே. மற்றவர்களின் தீர்மானத்தால் பாதிப்போ, தொந்தரவோ அடையாதே. நீ தனியானவன். மேலும் நீ தனித்தன்மை வாய்ந்தவன். இதற்கு முன்னால் நீ இல்லை, நீ திரும்பவும் ஒருபோதும் வரமாட்டாய். நீ அருமையானவன். அதனை ஏற்றுக்கொள். மேலும் என்ன நடந்தாலும் அது நிகழ அனுமதித்து அதனைக் கடந்து சென்றுவிடு. விரைவில் துன்பம் கற்றுக்கொள்ளுதலாகும். பிறகு அது படைப்பாற்றல் உடையதாகிவிடும்.

பயம் உனக்கு பயமற்ற தன்மையைத்தரும். கோபத்திலிருந்து கருணை வரும். வெறுப்பை புரிந்து கொள்வதிலிருந்து அன்பு பிறக்கும். ஆனால் இது சண்டையிடுவதன் மூலம் நடக்காது, இது விழிப்புணர்வுடன் அதனைக் கடப்பதன் மூலமே நிகழும். ஏற்றுக்கொண்டு அதனைக் கடந்து சென்றுவிடு.

## இழப்பதற்கு ஏதுமில்லை

பயப்பட ஏதுமில்லை. ஏனெனில் நாம் இழக்க ஏதுமில்லை. யாரும் நம்மைக் கொள்ளையடிக்க முடியாது. கொள்ளையடிக்கப் படக்கூடியதெல்லாம் தகுதி வாய்ந்ததல்ல. பின் என்ன பயம்? என்ன ஐயம்? என்ன சந்தேகம்? இவைதான் உண்மையான கொள்ளைக் காரர்கள் - சந்தேகம், பயம், ஐயம் - நீ கொண்டாடுவதற்குரிய வாய்ப்பை இவையே அழிக்கின்றன.

எனவே பூமியில் இருக்கும்போது பூமியைக் கொண்டாடு. இந்த வினாடி இருக்கும்வரை அதை முடிந்தவரை அனுபவி. அது கொடுக்கக்கூடிய சாறு அனைத்தையும் எடுத்துக் கொள். மேலும் அது உனக்கு கொடுக்க தயாராக உள்ளது.

பயத்தின் காரணமாக நீ பல விஷயங்களைத் தவறவிடுகிறாய். பயத்தின் காரணமாக நாம் அன்பு செலுத்தமுடியாது. அல்லது நாம் அன்பு செலுத்தினால்கூட அது எப்போதும் அரைமனதாகவே இருக்கும். அது எப்போதும் இல்லாததைப் போலவே இருக்கும். அது எப்போதும் ஒரு குறிப்பிட்ட எல்லை வரை மட்டுமே இருக்கும். அதற்குபிறகு இருக்காது. கடந்தால் பயமாக இருக்கும் ஒரு புள்ளிக்கு நாம் எப்போதும் வந்துவிடுவோம். எனவே நாம் அங்கேயே நிற்கிறோம். பயத்தின் காரணமாக நாம் நட்பில் ஆழமாக போகமுடியாது. பயத்தின் காரணமாக பிரார்த்தனையில் நிறைய முடிவதில்லை.

மக்கள் பயத்தினால்தான் பிரார்த்தனை செய்கிறார்கள் என்று கூறும் பலர் இருக்கிறார்கள். அது உண்மைதான், பலர் பயத்தின் காரணமாகவே பிரார்த்தனை செய்கிறார்கள். ஆனால் அதைவிட பெரிய உண்மை ஒன்றுள்ளது. அது என்னவென்றால் பலர் பயத்தின் காரணமாகவே பிரார்த்தனைக்குள் முழுமையாகச் செல்வதில்லை. அவர்கள் பயத்தின் காரணமாக தொடங்கியிருக்கலாம், ஆனால் அவர்கள் அதிக தூரம் செல்வதில்லை. அவர்கள் மேலோட்டமான நிலையிலேயே சம்பிரதாயமாகச் செய்கிறார்கள். அவர்கள் ஏதோவொரு பிரார்த்தனையைச் சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் அதனால் நெகிழவோ, அதனுள் செல்லவோ இல்லை. அது ஒரு பரவசமாக இருப்பதில்லை. அவர்கள் அதனுடன் இயைந்து செல்வதில்லை, அது மிகவும் பிடித்துப்போய் அதைச் செய்வ தில்லை. அவர்கள் அதை மிகவும் கவனமாகச் செய்கிறார்கள். அனைத்து ஜாக்கிரதைகளும் பயத்தை அடிப்படையாகக் கொண்டவையே.

உணர்வோடிரு. ஆனால் ஒருபோதும் ஜாக்கிரதையாக இருக்காதே. வேறுபாடு மிகவும் நுண்ணியது. தன்னுணர்வு நிலை

பயத்தில் வேர் கொண்டதல்ல. ஜாக்கிரதை உணர்ச்சி பயத்தில் வேர் கொண்டது. ஒருவர் ஜாக்கிரதையாக இருப்பது ஒருபோதும் தவறாக சென்றுவிடக்கூடாது என்பதற்காகத்தான். ஆனால் அதன் பின் அவர் அதிக தொலைவு செல்லமுடியாது. புதிய வாழ்க்கை முறைகளை, சக்தி பாய்ந்தோடும் புதிய வழிகளை, புதிய திசைகளை, புதிய நிலங்களை, ஆராய பயம் உன்னை அனுமதிக்காது. அது உன்னை ஒருபோதும் அனுமதிக்காது. நீ திரும்ப திரும்ப அதே வழியில்தான், முன்னும் பின்னும் சென்று கொண்டிருப்பாய். சரக்கு ரயிலைப்போலாகி விடும்.

தன்னுணர்வு, நீ என்ன செய்தாலும் அதைப்பற்றி உணர்வோடிரு. நீ எங்குச் சென்றாலும் சுதாரிப்பாக இரு. அப்போது அதை நீ கடைசி சொட்டுவரை அனுபவிக்கமுடியும். நீ சுதாரிப்பாக இருந்தால் எதுவும் தவறவிடப்படாது என்று கூறுகிறது.

பயம் எதிர்கொள்ள வேண்டிய, சந்திக்க வேண்டிய, மிகவும் அடிப்படையான பிரச்சனைகளில் ஒன்று. எனவே உனது பயம் வலுவாக இல்லையென்று தோன்றினால் அதனை மேலும் சிறிதாக்கிவிடு. அது தோட்டத்திலுள்ள களைகளைப் போன்றது. ஒருவர் தொடர்ந்து அதனைப் பிடுங்கி எறிந்து கொண்டேயிருக்க வேண்டும். இல்லாவிடில் அவை முழு தோட்டத்தையும் கெடுத்துவிடும். நீ களைகளை அனுமதித்தால் விரைவில் ரோஜாக்கள் மறைந்துவிடும். மலர்கள் மறைந்துவிடும். மேலும் தோட்டம் முழுவதும் களைகள்தான் இருக்கும். ஒருவர் அதனைத் தொடர்ந்து பிடுங்கிக் கொண்டேயிருக்க வேண்டும். அப்போது மட்டுமே தோட்டம் அழகாக இருக்கும். எல்லா வேர்களும் பிடுங்கப்பட்ட பிறகு எந்தப் பிரச்சனையும் இல்லை. நீ ஓய்வெடுக்கலாம்.

இதுதான் முழுமுயற்சி, உள்ளார்ந்த ஒழுக்கம், வேலை என்பது.

குருட்ஜிப் அவருடைய சீடர்களிடம் உன்னுடைய ஆதார குணநலனைக் கண்டறி என்று கூறுவது வழக்கம். ஏனெனில் அதைச் சுற்றி எல்லாக் கொக்கிகளும் உள்ளது. எடுத்துக்காட்டாக

ஒருவருக்கு குற்றவுணர்ச்சி இருந்தால் அது அவர்களுடைய ஆதார குணநலனாக இருந்தால் எல்லா கொக்கிகளும் அதைச் சுற்றியே இருக்கும். நீ குற்றவுணர்ச்சியை விட்டுவிட்டால் பிறகு எல்லாமும் அதாகவே விழுந்துவிடும். மேலும் இன்னொரு விதமான மனிதனுக்கு அவன் அவனுடைய பயத்தை விட்டுவிட்டால் விடுவதற்கு வேறெதுவும் மிச்சமிருக்காது. மற்ற அனைத்தும் தானாகவே விழுந்துவிடும். ஏனெனில் மற்றவை அனைத்தும் வெறும் பயத்தின் அளவு கடந்த வளர்ச்சியே ஆகும்.

நீ எங்கெல்லாம் பயமிருக்கிறது என்று பார்க்கிறாயோ, அதனை விட்டுவிடு. மேலும் சில சமயங்களில் தேவைப்பட்டால் அதனுள் செல். வாழ்க்கையில் கெட்டது எதுவுமில்லை. பயப்பட வேண்டியது எதுவுமில்லை, என்னவாகயிருந்தாலும். நாம் நமது மனதில் ஒரு சில கருத்துக்களை விதைத்துள்ளோம். அவை குறிப்பிட்ட பலவீனமான கணங்களில் வெளிவருகின்றன. ஒரு சிறு குழந்தை தொட்டிலில் விடப்பட்டுள்ளது. அதற்கு பசிக்கிறது, அது அழுகிறது. அது சுற்றிலும் பார்க்கிறது. அதனால் எதையும் பார்க்க முடியவில்லை. இருட்டாக உள்ளது, யாரும் வரவில்லை. இப்போது அந்த தனிமை, பசி, அதனுடைய அழைப்பிற்கு யாரும் வராதது, பயம் எல்லாம் இணைந்துவிடுகின்றன. மிகவும் ஆழமாக இணைந்து விடுகின்றன. 50 வருடங்களுக்கு பிறகும்கூட அவன் இருட்டிலிருக்கும்போது ஒருவிதமான குறிப்பிட்ட பயத்தை உணரத் தொடங்குகிறான். அந்த 50 வருடங்களுக்கு முந்தைய அந்த இணைப்பு இன்னமும் உயிரோடு உள்ளது. இப்போது அவன் குழந்தையல்ல, அவன் தொட்டிலில் கிடக்கவில்லை. அவன் தனது தாயை நம்பியிருக்க வில்லை. ஆனாலும்கூட அந்த பயம் வேலை செய்து கொண்டிருக்கிறது, பிரதிபலித்துக் கொண்டிருக்கிறது.

எனவே வெறுமனே கவனித்து மேலும் மேலும் பயத்தை விடு. உன்னுடைய தன்னுணர்வை பயத்திலிருந்து நீ சுத்தப்படுத்தினால் நீ சரியான பாதைக்கு வந்துள்ளாய். பிறகு கொண்டாட்டத்தின் உண்மையான பயணம் தொடங்குகிறது.

# ஆனந்தமே மாற்று மருந்து

எல்லா பயத்திற்கும் ஆனந்தமே மாற்றுமருந்து. நீ வாழ்க்கையை அனுபவிக்காவிட்டால் பயம் வருகிறது. நீ வாழ்க்கையை அனுபவித்தால் பயம் மறைந்துவிடுகிறது. எனவே ஆக்கபூர்வ மாகயிரு. அதிகமாக அனுபவி. அதிகமாக சிரி, அதிகமாக நடனமாடு, பாடு. மேலும் மேலும் மகிழ்ச்சியாக சிறிய விஷயங் களைப் பற்றிய ஆர்வத்துடன் - மிகச்சிறிய விஷயங்களைப் பற்றிய ஆர்வத்துடன் - இரு. வாழ்க்கை சிறிய விஷயங்களினாலேயே நிறைந்துள்ளது. ஆகவே நீ மகிழ்ச்சியின் தன்மையை சிறிய விஷயங்களில் கொண்டுவர முடிந்தால் முழுமை பிரமாண்ட மானது.

ஏதாவது பெரிய விஷயம் நிகழும் என்று காத்திருக்காதே. பெரிய விஷயங்கள் நிகழ்கின்றன. அவை நடப்பதில்லை என்பதல்ல, ஆனால் பெரிய விஷயம் நடப்பதற்காக காத்திருக்காதே. அது நீ சிறிய சாதாரண தினசரி விஷயங்களை ஒரு புதிய மனதுடன், புதிய புத்துணர்ச்சியுடன், புதிய ஆர்வத்துடன், புதிய உயிர்துடிப்புடன் வாழ ஆரம்பித்தால் மட்டுமே நிகழ்கிறது. பிறகு மெதுமெதுவாக நீ சேகரிக்கிறாய். அந்த சேகரிப்பு ஒருநாள் வெளிப்படையான ஆனந்தமாக வெடிக்கிறது.

ஆனால் அது எப்போது நிகழுமென்று யாருக்கும் தெரியாது. ஒருவர் கடற்கரையில் கூழாங்கற்களை சேகரித்துக் கொண்டே யிருக்க வேண்டும். ஒட்டுமொத்தமானது ஒரு பெரிய நிகழ்வாகி விடுகிறது. நீ ஒரு கூழாங்கல்லைச் சேகரித்தால் அது ஒரு கூழாங்கல். எல்லா கூழாங்கற்களும் சேர்ந்தால் திடீரென அவை வைரங்கள். அதுதான் வாழ்க்கையின் அதிசயம். எனவே நீ பெரிய விஷயங்களைப்பற்றி யோசிக்கவேண்டிய தேவையில்லை.

ஏதோவொரு பெரிய விஷயத்திற்காக எப்போதும் காத்துக் கொண்டிருப்பதால் உலகில் பலரும் தவறவிடுகிறார்கள். அது நிகழாது. அது சிறிய விஷயங்களின் வழியாக மட்டுமே நிகழ்கிறது. சாப்பிடுவது, உணவு எடுத்துக்கொள்வது, நடப்பது, குளிப்பது, ஒரு

நண்பருடன் பேசிக்கொண்டிருப்பது, தனியாக அமர்ந்து வானத்தைப் பார்த்துக்கொண்டிருப்பது, எதுவும் செய்யாமல் உனது படுக்கையில் படுத்திருப்பது. இந்த சிறிய விஷயங்களினாலேயே வாழ்க்கை உருவாகியுள்ளது. இதனாலேயே வாழ்க்கை உருவாக்கப்பட்டுள்ளது.

எனவே எல்லாவற்றையும் மகிழ்ச்சியாகச் செய், பிறகு எல்லாமும் ஒரு பிரார்த்தனையாகி விடுகிறது.

உற்சாகத்துடன் செய். உற்சாகம் என்ற வார்த்தை மிகவும் அழகானது. அதன் அடிப்படையான வார்த்தையின் பொருள் 'கடவுள் கொடுத்தது.' நீ ஏதாவதொன்றை ஆழமான உற்சாகத்தோடு செய்யும்பொழுது தெய்வீகத்தன்மை உனக்குள் வருகிறது. உற்சாகம் என்பதன் பொருள் தெய்வீகத்தன்மையால் நிறைந்துள்ளவன் என்பதாகும். எனவே அதிக உற்சாகத்தை வாழ்க்கைக்குள் கொண்டு வா. மேலும் பயம் மற்றும் இதர விஷயங்கள் அவைகளாகவே மறைந்துவிடும்.

எதிர்மறைகளைப்பற்றி ஒருபோதும் கவலைப்படாதே. நீ மெழுகுவர்த்தியை ஏற்றினால் இருள் தானாகவே போய்விடுகிறது. இருளோடு சண்டையிட முயற்சி செய்யாதே. அதற்கு எந்த வழியும் இல்லை. ஏனெனில், இருள் என்பது இல்லை. நீ அதனோடு எவ்வாறு சண்டை போட முடியும்? வெறுமனே ஒரு மெழுகுவர்த்தியை ஏற்று. இருள் போய்விடும். பின் இருளைப்பற்றி மறந்துவிடு. பயத்தைப்பற்றி மறந்துவிடு. சாதாரணமாக மனிதமனத்தை முற்றுகையிடும் எல்லா எதிர்மறை விஷயங்களை பற்றியும் மறந்து விடு. வெறுமனே உற்சாகத்தோடும் ஒரு சிறிய மெழுகுவர்த்தியை ஏற்று.

*15* நாட்களுக்கு காலையில் முதல் விஷயமாக மிகுந்த உற்சாகத்துடன் - உள்ளே தெய்வீகத்தன்மையுடன் - இன்று நீ உண்மையிலேயே மிகுந்த மகிழ்ச்சியோடு வாழப்போகிறாய் என்ற முடிவுடன் எழு. பிறகு மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழத்தொடங்கு. உனது காலை உணவை எடுத்துக்கொள். ஆனால் கடவுளையே

உண்பதைப்போல சாப்பிடு. அது அருளை அளிக்கும் ஒரு சாதனமாகி விடுகிறது. குளி. ஆனால் தெய்வீகம் உனக்குள் உள்ளது. நீ கடவுளைக் குளிப்பாட்டுகிறாய். பிறகு உனது சிறிய குளியலறை ஒரு கோவிலாகி விடுகிறது. உன்மேல் விழும் தண்ணீர் தீர்த்தமாகிவிடுகிறது.

தினமும் காலையில் ஒரு உறுதியான முடிவுடன், ஒரு நிச்சயத்தன்மையுடன், ஒரு தெளிவுடன், இன்று மிகவும் அழகாக இருக்கப்போகிறது, நான் அதனை மிகவும் மகிழ்ச்சியாக வாழப்போகிறேன் என்ற சத்தியத்தை உனக்குள்ளேயே செய்துகொண்டு எழுந்திரு. மேலும் ஒவ்வொரு இரவும் நீ படுக்கைக்கு செல்லும்பொழுது இன்று எவ்வளவு அழகான விஷயங்கள் நிகழ்ந்தன என்று நினைத்துப்பார். நாளை திரும்பவும் அவை நடக்க இந்த நினைத்துப்பார்த்தல் உதவி செய்யும். இன்று நடந்த அற்புதமான கணங்களை நினைத்துக்கொண்டே தூக்கத்தில் விழு. உனது கனவுகள் மிக அழகாக இருக்கும். அவை உனது உற்சாகத்தை, உனது முழுமையைச் சுமந்திருக்கும். நீ ஒரு புதிய சக்தியுடன் உனது கனவுகளிலும் வாழத் தொடங்குவாய்.